தமிழாக்கம்:
ந. சுப்பு ரெட்டியார்

# வேமனர்

வி. ஆர். நார்லா



இந்திய இலக்கியச் சிற்பிகள்



சாகித்திய அக்காதெமி
புது தில்லி



1916 2016

ந சுப்பு ரெட்டியார் 100

*Centenary Committee Publication*

எளிமை, இனிமை, தெளிவு இவர்தம் நூல்களின் தனிச்சிறப்புகளாகும்.

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# வேமனர்

ஆசிரியர்:

வி. ஆர். நார்லா

தமிழாக்கம்:

ந. சுப்பு ரெட்டியார்



சாகித்திய அக்காதெமி

புது தில்லி

# இந்திய இலக்கியச் சிற்பிகள்

*தற்கால, பழம் பெரும் படைப்புக்களின் தலைசிறந்த இந்திய இலக்கியச் சிற்பிகளைப் பற்றி உணர இப்புத்தக வரிசை உதவும்.*

*இந்த வரிசையில் வெளியான நூல்கள்: (எல்லாம் ஆங்கிலத்தில் கிடைக்கும்).*

★ **லட்சுமிநாத பெஸ்பருவா** —H. *பருவா*
★ **ராஜாராம் மோகன் ராய்** —*சௌ. டாகூர்*
★ **கேசவஸுதர்** —*பிரபாகர் மாச்வே*
**இளங்கோ அடிகள்** —*மு. வரதராசன்*
★ **பிரேம் சந்த்** —*பிரகாஷ் சந்திரகுப்தா*
★ **ஈசுவர சந்திர வித்யாசாகர்** —H. *பானர்ஜி*
★ **கபீர்** —*பிரபாகர் மாச்வே*
★ **தாருதத்** —*பத்மினி ஸென்குப்தா*
★ **வேமனு** —*வி. ஆர். நார்லா*
★ **விரேசலிங்கம்** —*வி. ஆர். நார்லா*
**காலீப்** —*எம். முஜீப்*
★ **மீராபாய்** —*உஷா நில்ஸன்*
**ஷா லதீப்** —K. B. *அத்வானி*
**சண்டிதாஸ்** —*சுகுமார் ஸென்*
**பிரமதா சௌதுரி** —*அ. முகோபாத்யாய*
**பாரதேந்து ஹரிச்சந்திரா** —*மதன்கோபால்*
**சசால் சர்மாஸ்த்** —K. B. *அத்வானி*
**ஜீவனனந்த தாஸ்** —*சி. தாஸ்குப்தா*
★ **ஸ்ரீ அரவிந்தர்** —*மனோஜ் தாஸ்*
**போதனு** —D. *வேங்கடாவதானி*
**சி. ஆர். ரெட்டி** —D. *ஆஞ்சநேயலு*
**ஞானதேவ** —*பி. ஒய். தேஷ்பாண்டே*
**ஜெயதேவ** —*சுநீதிகுமார் சாட்டர்ஜி*
**மஹரிஷி தேவேந்திரநாத் டாகூர்** —*நா. சௌதுரி*
**சரோஜினி நாயுடு** —*ப. ஸென்குப்தா*
**B.M. ஸ்ரீகன்டய்யா** —A. N. *மூர்த்திராவ்*
★ **குமாரன் ஆசான்** —K. M. *ஜார்ஜ்*
**வள்ளத்தோள்** —*ஹிருதயகுமாரி*
**கம்பன்** —*எஸ். மகராஜன்*
**நம்மாழ்வார்** —*அ. சீனிவாசராகவன்*
**சந்துமேனன்** —T. C. S. *மேனன்*
**மாணிக்கவாசகர்** —G. *வன்மீகநாதன்*
**வேதம் வெங்கடராய சாஸ்திரி** —V. V. *சாஸ்திரி (ஜுனியர்)*
**வித்யாபதி** —*ராம்னுத் ஜா*

**சாகித்திய அக்காதெமி**

*ரவீந்திர பவன், புது தில்லி—1.*
*சென்னை-6, பம்பாய்-14, கல்கத்தா—29.*

## இந்திய இலக்கியச் சிற்பிகள்

**இந்த வரிசையில் இதுவரை தமிழில் வெளிவந்துள்ள நூல்கள்:**

1. **லட்சுமிநாத பெஸ்பருவா**
   —ஹேம்பருவா
   தமிழ்: க. த. திருநாவுக்கரசு
2. **கபீர்**
   —பிரபாகர் மாச்வே
   தமிழ்: தி. வேங்கடகிருஷ்ணய்யங்கார்
3. **கேசவஸுதர்**
   —பிரபாகர் மாச்வே
   தமிழ்: ராம கோபிநாதன்
4. **ஈசுவர் சந்திர வித்யாசாகர்**
   —ஹிரண்மய் பானர்ஜி
   தமிழ்: ராம கோபிநாதன்
5. **ராஜா ராம் மோகன் ராய்**
   —சௌமியேந்திரநாத தாகூர்
   தமிழ்: க. த. திருநாவுக்கரசு
6. **பிரேம்சந்த்**
   —பிரகாஷ் சந்திர குப்தா
   தமிழ்: சரஸ்வதி ராமநாத்
7. **குமாரன் ஆசான்**
   —கே. எம். ஜார்ஜ்
   தமிழ்: கே. சி. சங்கரநாராயணன்
8. **தாரு தத்**
   —பத்மினி ஸென்குப்தா
   தமிழ்: அ. சீனிவாச ராகவன்
9. **வீரேசலிங்கம்**
   —வி. ஆர். நார்லா
   தமிழ்: நா. பார்த்தசாரதி
10. **ஸ்ரீ அரவிந்தர்**
    —மனோஜ்தாஸ்
    தமிழ்: பி. கோதண்டராமன்
11. **மீராபாய்**
    —உஷாநில்சன்
    தமிழ்: எஸ். கந்தசாமி 'துறைவன்'
12. **வேமனர்**
    —வி. ஆர். நார்லா
    தமிழ்: ந. சுப்பு ரெட்டியார்

**ஒவ்வொரு நூலும் ரூ. 2-50**

## தமிழாக்கம் செய்தவரின் குறிப்பு

'மொழி பெயர்ப்பு' என்பது ஒரு கலை; இலக்கியப் படைப்புகளில் மொழி பெயர்ப்பு நூலும் ஒருவகை. மொழி பெயர்ப்பினைத் தொல்காப்பியர் 'அதர்ப்பட யாத்தல்' என்று குறிப்பிடுவர். மொழி பெயர்ப்பு நூலைப் படிப்போருக்கு 'இஃது ஒரு மொழி பெயர்ப்பு' என்று தோன்றாவண்ணம் முதல்நூல் போலவே சரளமான தீந்தமிழ் நடையில் மொழிபெயர்ப்பு அமைதல் வேண்டும். பல புதிய கருத்துகள் தமிழ் மொழியினை அடைவதற்கு 'மொழி பெயர்ப்பு—சேது' ஒரு வழியாகும்.

இந்த நூலை எழுதி வெளியிடுவதற்கு இசைவு தந்த திருவேங்கடவன் பல்கலைக்கழக ஆட்சிக் குழுவினருக்கும், சிறப்பாகப் பல்கலைக் கழகத்தை இயக்கித் திறம்படக் கண்காணித்து வரும் அதன் துணை வேந்தர் பேராசிரியர் டாக்டர் **கே. சச்சிதானந்த மூர்த்தி** அவர்கட்கும் என் இதயம் கனிந்த நன்றி என்றும் உரியது.

— **ந. சுப்பு ரெட்டியார்.**

# நூல்முகம்

**வே**மனரைப்பற்றி ஒரு தனிக்கட்டுரை சாகித்திய அக்காதெமிக்கு எழுத ஒப்புக்கொண்ட பிறகு, இது ஒரு கடினமான பணியாக இருக்குமென்பதை உணர்ந்தேன்; என்னுடைய அச்சங்கள் உண்மையென்றே ஆயின. வேமனரைப்பற்றித் தெலுங்கில் சில நூல்கள் கிடைக்கின்றன என்பதற்கு ஐயம் இல்லை. ஆனுல் அவற்றுள் பெரும்பாலானவை நம்பத்தகாத கட்டுக்கதைகளை மெய்ப்பிக்கப் பெற்ற உண்மைகளாகவே எடுத்தோதுகின்றன. தெலுங்கில் கிடைக்கக்கூடிய ஆய்வு முறையிலமைந்த ஒரே ஒரு வாழ்க்கை வரலாறு—ஆங்கிலத்திலோ அல்லது வேறு மொழியிலோ அத்தகைய நூல் ஒன்றும் இல்லை—மனநிறைவு அடையத்தக்கதாக இல்லை. அதன் ஆசிரியர் தன்னுடைய முடிவுகளுக்கு என்றே செய்திகளைத் தேடியலைகின்ருர். வேறு குறைகட்கும்கூட அவர் குற்றம் புரிந்தவராகின்ருர். சென்ற தலைமுறையில் சிறந்த எழுத்தாளர்களில் ஒருவராகத் திகழ்ந்த சிலக்கமர்த்தி இலட்சுமி நரசிம்ஹம் என்பவரால் வேமனரைப்பற்றி எழுதப்பெற்ற நூல் ஒன்றினைத்தான் மூலங்களாகக் கொண்ட நூல்களின் பட்டியலில் சேர்த்துக் காட்டுகின்ருர். அதிகமான காலத்தையும் முயற்சியையும் வீணுக்கிய பிறகு அவர் நூல் என்று குறிப்பிட்ட ஒன்று கட்டுக்கதைகள் அடங்கிய பெரிய நூலொன்றில் வேமனரைப் பற்றிய கட்டுக்கதைகளின் புதிய வடிவமாக ஒரு சிறு இயல் இருப்பது தெரிய வந்தது. வேருெரு விஷயத்தில் கூட அவர் என்னை அதிக சங்கடங்களுக்கு ஆளாக்கினுர். தாம் எழுதிய வேமனரின் வாழ்க்கை வரலாற்றில் ஓரிடத்தில் மெக்லியன் என்ற ஒருவரைக் குறிப்பிடுகின்ருர். அவர் குறிப்பிட்ட எழுத்தாளர் தான் செவிவழிச் செய்தியாக அறிந்த ஒருவர் என்றும், அவர் மெக்லியன் என்ற பெயருடையவர் அல்லர் என்றும், ஆனுல் 1866-இல் வேமனரைப் பற்றிக் கட்டுரையொன்றினை வெளியிட்டவர் மேஜர் ஆர். எம். மெக்டனுல்டு என்பவர் என்றும் பல மாதங்கட்குப் பிறகு என்னுல் அறிந்துகொள்ள முடிந்தது.

தாம் ஒரு வரலாற்று ஆசிரியர் என்று குறிப்பிடும் மற்ருெரு தெலுங்கு ஆசிரியரும் கிட்டத்தட்ட தவருன வழியையே காட்டுகின்ருர். தாம் எழுதிச் சில மாதங்களுக்கு முன்னர் வெளியிட்ட சிறு நூலொன்றில் சர். வில்லியம் ஜோன்ஸ் என்பார் வேமனரை ''இந்தியாவின் பிளேட்டோ'' என்று குறிப்பிட்டதாகக் கூறுகின்ருர். புதுடில்லியிலுள்ள நாடாளுமன்ற நூலகத்தில் ஜோன்ஸ்

நூல்களின் ஆய்வடங்களிலிருந்து இந்த மேற்கோளைக் கண்டறியும் முயற்சியில் ஒரு வாரம் வீணுகக் கழிந்தது. இந்த ஆய்வடங்கலில் பொருளடைவு (index) அமைக்கப் பெருததன் காரணமாக இத்தகைய நீண்டதொரு தேடுதலை மேற்கொள்ள வேண்டிய கட்டாயம் நேரிட்டது. அதன்பிறகு கல்கத்தா நகரிலுள்ள தேசிய நூலகம், அதே நகரிலுள்ள ஆசியாக் கழகம், இவை போன்ற பிற நிறுவனங்களுடன் தகவல் ஆய்வினை மேற்கொண்டேன்; அவ்விடங்களிலிருந்து தாமதமின்றிக் கிடைத்த மறுமொழிகள் சர் வில்லியம்ஸின் மேற்கோள் வியாசரைப் பற்றியதேயன்றி வேமனரைப்பற்றியதன்று என்று புலனுக்கின.

இங்ஙனமாக வேமனரைப் பற்றிய தெலுங்கு நூல்களின் தரம் மிகக் குறைவாகவே உள்ளது. திரு. இராள்ளபல்லி அனந்த கிருஷ்ண சர்மாவின் **"வேமனரைப் பற்றிய சொற்பொழிவுகள்"** என்ற நூல் ஒன்றே இதற்கு விலக்காகும். ஆனுல், இந்த நூல் முதன் முதலாக நாற்பது ஆண்டுகட்கு முன்னர் வெளியிடப் பெற்றது; அதிலிருந்து புதிதாகவோ அல்லது தகுதியானதாகவோ ஒன்றும் வெளிவரவில்லை. வேமனரைப்பற்றி ஆங்கிலத்திலுள்ள தகவல்கள் சாதாரணமாக நன்றுகவே உள்ளன என்று கூறலாம்; ஆனுல் அவற்றின் பெரும்பகுதி எளிதாகக் கிடைப்பது அரிதாகவே உள்ளது. எடுத்துக்காட்டாக, டாக்டர் சி. ஆர். ரெட்டி அவர்களின் வேமனரைப்பற்றிய வானெலிப் பேச்சு நாடாப் பதிவாகத் தான் கிடைக்கின்றது; சென்னை வானெலியில் பணியாற்றும் என்னுடைய நண்பர் திரு. தாசரதியின் அன்பு நிறைந்த உதவியில்லாவிடில் அதன் தட்டச்சுப் படியை என்னுல் பெற்றிருக்க முடியாது.

வேமனரைப் பற்றிய பொருளைத் திரட்டிய பிறகு, மிகவும் வெறுக்கத்தக்க முறையிலமைந்த பொருத்தமில்லாத செய்திகளின் அடவியினூடே முன்னேற்றம் காண்பதென்பது அருமுயற்சியுடன் கூடிய உழைப்பாக இருந்தது. வேமனருடைய வாழ்க்கை வரலாற்றைப் பொருத்தமட்டிலும் திட்டவட்டமாக ஒன்றும் அறியக்கூடவில்லை. அல்லது அறியவும் முடியாது என்பதை வெளிப்படையாகவே ஒப்புக்கொண்டாக வேண்டும். அவரைப்பற்றிய பல செய்திகளும் வாதத்திற்கிடமாகவே உள்ளன. அவருடைய அடுக்கிசையும்கூட (விஸ்வதாபிராமா -வினுர—வேமா) வாதத்திற்கிடமாக உள்ளது. ''இந்த உலகில் மகிழ்வுடனிருக்கும் வேமா, கேட்பாயாக'' என்பது பொதுவாக ஒப்புக்கொள்ளப் பெற்ற பொருளாக இருப்பினும் இருபதுற்கு மேற்பட்ட புலவர்கள் தம்முடைய முன்சார்புநிலைகட்கேற்ப அச்சொற்றெடரைப் பிரித்துத் தமக்கு வேண்டிய பொருளைக் கூறவே விரும்புகின்றனர். என்னுல் இயன்றவரை, அறியப்படும் பொருள் சார்ந்தும் நடுநிலையாக இருக்கவும் முயன்றுள்ளேன்; நான் அப்படியும் இப்படியும் சரி

யாமல் நடுநிலையைப் பேணுவதில் எந்த அளவு வெற்றி பெற்றுள்ளேன் என்று மதிப்பிடுவதை என் வாசகர்கட்கே விட்டுவிடுகின்றேன்.

நான் ஏற்கெனவே திரு. தாசரதி அவர்களின் உதவியை ஒப்புக்கொண்டுள்ளேன்; இந்தத் தனிக்கட்டுரைக்காகப் பொருளைத் திரட்டுவதில் பலர் எனக்கு உதவி அளித்துள்ளனர். இதில் சிறப்பாகச் சென்னையைச் சேர்ந்த **வாணி** என்ற ஏட்டின் துணை ஆசிரியர் திரு. டி. ஆஞ்சனேயலு, அமெரிக்கச் செய்தித் துறையைச் சார்ந்த திரு. பி. எஸ். ஆர். கிருஷ்ணு, ஃபிரீடம் பிரஸின் உரிமையாளர் திரு. பாலசுந்தரம் ஆகியோருக்கும், நூஸ்வீட்டைச் சேர்ந்த திரு. எம். ஆர். அப்பாராவ் (எம்.எல்.ஏ) அவர்கட்கும், வேடபாலையத்தைச் சார்ந்த திரு. ஏ. சீநிவாசராவ், சாரஸ்வத நிகேதனம் ஆகியோருக்கும், ஐதராபாத் பேராசிரியர் என். வேங்கட்டராவ் அவர்கட்கும், கண்டசாலாவைச் சார்ந்த பண்டிதர் ஜி. வி. சுப்பையா அவர்கட்கும் என் நன்றியைச் சொல்லிக் கொண்டாக வேண்டும்.

வேமனரைப் பற்றிய வில்லியம் ஹோவார்டு கேம்பெல்லின் கட்டுரையின் தட்டச்சுப்படியை எனக்காகப் பெற்றுத் தந்ததுடன் திரு. டி. ஆஞ்சனேயலு அவர்கள் முதல் நான்கு இயல்கட்குரிய கையெழுத்துப்படியை முழுதும் நோக்கிப் பயன்படத்தக்க சில கருத்தேற்றங்களையும் தெரிவித்தார். இத்தகைய ஒரு கடப்பாட்டிற்கு என்னை உட்படுத்திய மற்றவர்களுள் திருப்பதியைச் சார்ந்த திரு. இராள்ளபல்லி அநந்த கிருஷ்ண சர்மா, திரு. ஏ. ஜானகிராம் ஆகிய இருவரும் குறிப்பிடத்தக்கவர்கள். விஜயவாடாவில் '**ஆந்திர ஜோதி**' அலுவலகத்தில் பணிபுரியும் என் நண்பரும் கூட்டாளியுமான திரு. என். இராமச்சந்திர ராவ் ஒவ்வொரு நிலையிலும் என்னுடைய பணியில் உதவி புரிந்தார். அங்ஙனமே 'ஆந்திர ஜோதி'யைச் சார்ந்த திரு. எம். வி. சுப்பராவ் அவர்களும் உதவி அளித்தார். இவர்கள் எல்லோருக்கும் என் இதயம் கனிந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

இறுதியாக, என்னுடைய கடப்பாட்டினை வேமனருக்குத் தெரிவித்துக்கொள்ள வேண்டியவனாக உள்ளேன். அவருடைய அருளால் ஊக்குவிக்கப்பெற்று, திறமைமிக்க அவருடைய கைத்திறனால் முழுநிறைவினை எட்டிய 'ஆட்டவெலதி' யாப்பில் இது காறும் கிட்டத்தட்ட அறுநூறு பாடல்களை எழுதியுள்ளேன். இந்தத் தனிக்கட்டுரையின் மூலம், நான் அவருக்குப் பட்டிருக்கும் கடப்பாட்டில் மிகச்சிறிய பங்கினைத் திருப்பிக் கொடுத்துவிட்டேன்.

**—வி. ஆர். நார்லா**

# உள்ளுறை

## இயல்—1

# இறப்புக்காகப் பிறந்திலர்

**நீ சாவதற்காகப் பிறக்கவில்லை**

**—கீட்ஸ்**

எந்தவிதச் சோதனைக்குட்படுத்தினாலும் வேமனர் ஒரு பெருங் கவிஞர் என்பதற்கு ஐயமில்லை; மக்களிடம் கொண்டுள்ள செல் வாக்கைக்கொண்டு மதிப்பிட்டாலும் அவர் முற்கால, இடைக் கால, தற்காலத் தெலுங்குக் கவிஞர்களுக்குள் ஒரு மாபெருங்கவி ஞராகவே திகழ்கின்றார். வேறு எவரும், தேன்குரலோடு திகழ்ந்த போத்தனருங்கூட, இவர் அளவுக்குப் பாதிகூடச் செல்வாக்குப் பெறவில்லை. வேமனர் சாதாரண மக்களிடையே ஓர் அரசர் போல் திகழ்கின்றார்; அவர் பல்லாயிரக்கணக்கான சாதாரண மக் களிடையே அவர்களறிந்த மொழிகளிலேயே பேசுகின்றார். அவர் களும் அவரிடம் மனந்திறந்தே பேசுகின்றனர். அவர்கள் சிலசம யம் அவருடைய கண்டனமொழியின் தாக்குதலுக்கு அஞ்சி விலக லாம். ஆயினும் அவர் நன்னோக்கம் கொண்டவர் என்பதை அறி வார்களாதலின், அவர்கள் அவரை மிக விரும்பி நேசிக்கின்றனர். கவிஞர் என்ற முறையில் அவரை விரும்பும்பொழுதே, அவர்கள் அவரை மெய்யறிவு பெற்றவர் என்றும் ஞானி என்றும் உயர் வாகவே கருதுகின்றனர்; ஒரு முக்கிய செய்தியைக் கணக்கிடுவ தற்கோ, ஓர் உண்மையை வற்புறுத்துவதற்கோ அல்லது ஒரு நீதியைக் கோடிட்டுக் காட்டுவதற்கோ அவர் அடிக்கடி மேற் கோளாக எடுத்துக்காட்டப்பெறுகின்றார். இந்திய மொழிகள், இலக் கியங்கள் இவற்றைக் கற்பதில் தன் வாழ்நாள் முழுவதையும் பக்தியுடன் கழித்த ஜி.டி. கிரியர்ஸன் என்ற மேனாட்டு வித்தகர் வேமனரை "இன்று தெலுங்கு எழுத்தாளர்கள் அனைவரிலும் மிக மிகச் செல்வாக்குடையவர் என்றும், அவர் காரணமாகக்குறிக்கப் பெறாத பழமொழியோ அல்லது உயிர்நிலையான கூற்றோ இல்லை" என்பதைக் கண்டுள்ளார்.

வேமனரின் புகழும் செல்வாக்கும் ஆந்திரத்தின் சாதாரண ஆண்மக்கள் பெண்மக்கள் இவர்களின் எல்லைக்குள் மட்டிலும்

அடங்கியவையல்ல; அண்டைப்புறப் பகுதிகளிலும் அவை நீண்டு பரவிக்கிடந்தன. நீண்ட காலத்திற்கு முன்னதாகவே அவரது பாடல்கள் தமிழிலும் கன்னடத்திலும் மொழி பெயர்க்கப்பெற்று விட்டன. பிறமொழிகளில் மொழி பெயர்க்கப்பெற்றவர்களில் ஒரு கால் அவர் முதலாவது தெலுங்குக் கவிஞராக இருந்துமிருக்கலாம், அல்லது இல்லாமலுமிருக்கலாம்; ஆனால் வேறு எந்தத் தெலுங்குக் கவிஞரும் இவரைப்போல் மிகப்பல மொழிகளில் பெயர்க்கப்பெற வில்லை என்பது மட்டிலும் உறுதி.

ஆயினும், இந்த நூற்றாண்டின் இருபது ஆண்டுவரையில் வேமனர் தெலுங்கு இலக்கிய உலகத்தினரின் கவனத்திற்குக் கீழேயே இருந்தார் என்று சொல்லலாம். இந்தக்காலப்பகுதிவரை எந்தத் தெலுங்குக் கவிஞரோ, புலவரோ, திறனாய்வாளரோ அல்லது இலக்கிய வரலாற்று அறிஞரோ வேமனரைத் தற்செயலாகவும் வெறுப்பாகவும்கூட எங்கும் குறிப்பிட்டிலர். முதல் இரு தெலுங்கு இலக்கிய வரலாற்றறிஞர்களாகிய குருசாடை சீராம மூர்த்தியும், கந்துக்கூரி வீரேசலிங்கமும் தம்முடைய வரலாற்று நூல்களினின்றும் அவரை ஒதுக்கி வைப்பதே பொருத்தமாகும் என்று கருதியவர்கள். சீராமமூர்த்தியின் நூலைப் போலன்றி வீரேச லிங்கத்தின் முதன்முதலாக 1899-இல் வெளிவந்த **'ஆந்திர கவுல சரித்ரமு'** (தெலுங்குக் கவிஞர்களின் வாழ்க்கை வரலாறு) என்னும் நூல் பலவற்றையும் உள்ளடக்கிய நூலாக அமைந்துள்ளது; அதில் சில்லறைக் கவிஞர்கட்கும் புகழ்பெறாத கவிஞர்கட்கும் கூடப் பல பக்கங்கள் ஒதுக்கப்பெற்றுள்ளன; ஆனால் வேமனரை விடுபடச்செய்துவிட்டது. 1917-இல் வெளிவந்த அதன் இரண்டாவது பதிப்பில் சில சேர்க்கைகளுடன் அதில் காணப்பெறும் கவிஞர் களின் தொகை 220ஆகும்; இப்பதிப்பிலும் வேமனர் இரக்கமற்று ஒதுக்கி விடப்பட்டுள்ளார்.

இன்னும் சரியாகச் சொல்லப்போனால், சீராமமூர்த்திக்கோ அல்லது வீரேசலிங்கத்திற்கோ மிகவும் முன்னதாக 1829-இல் காவலி வேங்கட்டராமசுவாமி என்பார் **'தக்கணத்துக் கவிஞர் களின் வாழ்க்கை வரலாறு'** என்ற தன் நூலை வெளியிட்டார். அவருடைய சொந்தக் கூற்றுப்படியே "நம்பகமான ஆவணங் களினின்றும் தொகுக்கப்பெற்ற இந்தியத் தீவக்குறையிலடங்கிய (peninsula) பல்வேறு மாநிலங்களில் பெரும்புகழுடன் திகழ்ந்த மேன்மைபொருந்திய முற்கால இக்காலக் கவிஞர்கள் பலருடைய வாழ்க்கை வரலாறுகளைக் கொண்டது" இந்நூலாகும். இந்திய எழுத்தாளர் ஒருவரால் தற்செயலாக ஆங்கிலத்தில் முதன்முதலாக எழுதப்பெற்ற இந்நூல் தெலுங்குக் கவிஞர்களைப்பொறுத்த வரையில் ஒருதலைச்சார்பாகவே உள்ளது. அது மொத்தத்தில் 108

கவிஞர்களைப்பற்றிக்கூறுகின்றது; அவர்களில் 47பேர் தெலுங்குக் கவிஞர்கள்; இந்த 47 பேர்களிலும் வேமனர் **ஒருவராக இல்லை.**

வேமனரின் மொழி பண்டைய வழக்குடன் திகழ்ந்தாலும் அவருடைய சொல்வளம் கடினமாக இருந்தாலும், சிந்தனை வழக் கறிந்ததாக இருந்தாலும் அவர் ஏன் மௌனமாகப் புறக்கணிக்கப் பெற்றார் என்பதை நாம் அறியலாம். உண்மை இதற்கு முற்றிலும் மாறுபட்டது. அவருடைய மொழி தூய்மையாகவும் விறுவிறுப்பாக வும் உள்ளது; அவருடைய சொல் வளமோ தெளிவாகவும் மென் மையாகவும் உள்ளது; புதியனவாகவும் துணிவானவையாகவும் உண்மையுடையனவாகவும் உள்ள அவருடைய ஒப்புமைகள் அடி வானம் முழுவதையும் ஒளியுடையதாகச் செய்ய வல்ல மின்வெட்டுக் களைப் போலுள்ளன. உயிர்ப்புடனுள்ள சிலகூறுகளில் அவருடைய சிந்தனை அவருடைய காலத்திற்கு மிக முந்தியதாக இருப்ப தோடன்றி நவீன காலத்திற்கும் கூட முந்தியதாக உள்ளது.

உண்மையான பெருங்கவிதைகொண்டு திகழவேண்டிய பிறி தின் சார்பற்ற பல நுண்புலங்களைக் கொண்டுள்ளது அவருடைய கவிதை; ஆகவே அது மேற்கோளாகத் திகழ்வதற்குத் தகுதியுடை யதாகின்றது. ஜேம்ஸ் அரசரின் விவிலிய நூலும் செகப்பிரியரும் தத்தமக்கிடையில் ஆயிரக்கணக்கான புதிய தொடர்களையும் மரபு மொழிகளையும் ஆங்கிலப் பேச்சுவழக்கிற்கு வழங்கியுள்ளனர். அங் ஙனமே தெலுங்குப் பேச்சுமொழியும் வேமனருக்கு மிகவும் கடப் பாடுடையதாகின்றது. வேமனர் அம்மொழிக்குப் புதியதொரு முனையையும், புதியதோர் ஆற்றலையும் கிட்டத்தட்ட புதியதொரு வேகத்தையும் தந்துள்ளார். இப்படியிருக்கத் தெலுங்கு இலக்கிய வாணர்கள் தொடர்ந்து பல தலைமுறைகளாக மிகப்பிடிவாதமாக மௌன வெறுப்பைக்காட்ட வேண்டியதன் காரணம் என்ன?இந்த வினா கள்ளமற்ற முறையில் பலர்முன் வைக்கப்பெறுதல் வேண் டும். கள்ளமற்ற முறையிலும் அதற்கு விடைகாணலும் வேண் டும்.

முதலாவதாக, வேமனர் திருமறைகளையும், திருமறைகளில் கூறப்பெற்றுள்ள பலிகளையும், புராணங்களையும் அவற்றின் கட்டுக் கதை வீரர்களையும், தர்ம சாத்திரங்களையும் அவற்றின் சமமற்ற நீதிமுறைகளையும் ஏளனம் செய்கின்றார். உண்மையிலேயே தெய் விக அருள் பெற்றதாகவும் தவறு செய்யாத மேலாண்மைக்குரிய தாகவும் கூறப்பெறும் எல்லாச் சமயநூல் தொகுதிகளையும் அவ மதிக்கின்றார். அவர் முற்றிலும் தெய்வத் திருச்சிலைகளை உடைத் தெறிபவர்; எல்லாவித வடிவங்களிலும் நடைபெறும் உருவ வழி பாட்டை இணங்காத முறையில் எதிர்த்து நிற்பவர்; அதற்கு ஒரு பகுத்தறிவு விளக்கம் கூறுபவர்களிடம் சிறிதும் பொறுமைகாட்

டாதவர். சாதிமுறை அமைப்பினை நிலைநிறுத்த முயல்வோர்களிடம் விடாது போரிடும் ஒரு சமூகக் கலகக்காரர். மனிதனை எதிர்த்து மனிதன் மேற்கொண்டு வரும் மிகக்கொடிய குற்றமாகிய தீண்டாமை என்ற வழக்கத்தை வல்லந்தமாகவும் எதிர்த்து நிற்பவர். இவற்றின் காரணமாக மரபுச்சட்டம் மீறுத வைதீகர்களின் கண்களில் அவர் பாசாண்டராகவே, அதாவது கடவுளின் இருப்பை மறுப்பவராகவும் நம்பாதவராகவும் காணப்பெற்முர்; அவருடைய பெயரைக் கூறினுலும் அது பாவகரமாகக் கருதப்பெற்றது.

இரண்டாவதாக, வேமனர் ஒரு சிவனடியாராக இருந்த போதிலும், இலிங்கம் தரித்தல், பட்டினி கிடத்தல், இரவு முழுவதும் உறங்காது விழித்திருத்தல், தல யாத்திரையை மேற்கொள்ளல் போன்ற புறப்பகுதிகளாகிய சிவ வழிபாட்டு மரபுகளை ஏளனம் செய்கின்முர். எடுத்துக்காட்டாக, இலிங்கத்தைத் தரித்திருப்பவர்கள் வஞ்சகர்களிலேயே மிகக்கீழானவர்கள் என்று பெயரிட்டுக் கூறும் அளவுக்கு அவருடைய இத்தகைய நடைமுறைகளின் கண்டனம் அமைகின்றது. பழைய எழுத்தாளர்களுள் சைவர்களாக இருப்போர் இயல்பாகவே சினமூட்டப்பெற்று அவர்களும் அவருக்கு எதிராக எழுந்த மௌன சூழ்ச்சியில் சேர்ந்து கொண்டனர்.

மூன்முவதாக, வேமனர் சூத்திரர். தெலுங்கு அணி இலக்கணத்திற்கு ஒரு நிபுணர் என்று கூறப்பெறும் அப்பகவி என்பார் சூத்திரக்கவியொருவரின் நூலைப் பரிசோதனையின்றியே தள்ளுபடி செய்யப்பெறுதல் வேண்டும் என்ற விதியையும் வகுத்திருந்தார். 1829-இல் சென்னை சிவில் சர்வீஸைச் சார்ந்த சார்லஸ் ஃபிலிப் பிரௌன் என்பவரால் கல்லூரிப் பாடக்குழுவிற்காக அச்சிடப் பெற்ற **'வேமனரின் பாடல்கள்: நீதி, சமய, அங்கதப்பகுதி'** என்ற தொகுப்பு நூலின் முதல் பதிப்பின் 500 படிகளில் 450 படிகள் எவரும் அறியாமல் மறையும் அளவுக்குச் சூத்திரக் கவிஞர்களின் மீது உயர்வகுப்பினைச் சார்ந்த மக்கள் வெறுப்புக் கொண்டிருந்தனர். (எஞ்சிய ஐம்பது படிகள் பதிப்பாளர் படிகளென அவருக்கு இலவசமாக வழங்கப்பெற்றன. கல்லூரிப் பாடக்குழுவில் உயர் வகுப்பினைச் சார்ந்த சில பண்டிதர்களின் சுறுசுறுப்பான மறைமுக உடந்தையினுல் மறைந்த படிகள் யாவும் பயன்படாத தாள்களாகச் சுருட்டப்பெற்றுக் கல்லூரி நூலகத்தின் வேண்டாத பொருள்கள் போடும் அறைக்குள் தள்ளப்பெற்றிருந்தன என்பதைக் கண்டறிவதற்குப் பிரௌனுக்குப் பத்தாண்டுகள் தேவைப் பட்டன. சென்னைப் பணியாளர்க் குழுவினைச்சார்ந்த மேஜர் ஆர். எம். மாக்னடால்டு என்பார் 1866-இல் **'சென்னை இலக்கிய அறிவியல் ஆய்வேட்டில்'** எழுதுங்கால் இதைப்பற்றிச் சற்று விரிவாகவே விளக்கிச் சொல்லும் அளவிற்கு வேமனரைப் பற்றிய

வெறுப்பு மிகக் கடுமையாகவும் பிடிவாதமாகவும் இருந்தது. இவ் விடத்தில் அவருடைய விளக்கவுரையை முற்றிலும் மேற்கோளாக காட்டுவது பொருத்தமாகும்.

> டாக்டர் போப் என்பார் வேமனரின் எழுத்துகள் தெலுங்கு மக்களிடையே மிகவும் புகழுடன் திகழ்ந்தன என்று குறிப்பிடுகின்றார். அவருடைய செல்வாக்கு முழுவதும் ஆந்திரர் களின் எல்லைக்குள்ளேயே அடங்கிக்கிடந்தது என்பது என் நம் பிக்கை. அவர்களுக்குள்ளேயேயும் இந்து சமயத்தில் உண்மை யான நம்பிக்கையுடைய கிறித்தவ சமயம் பரப்பும் துணைக் குரு கோலன்ஸோ என்பாரை எந்த உணர்வுடன் நோக்குகின்றாரோ அதே உணர்வுடன் வேமனரை மதிக்கின்றனர். அரசினர் பள்ளி களில் வேமனர் முதன்முதலாகப் பாடநூலாக ஆக்கப்பெற்ற பொழுது இந்த உணர்ச்சி வெளிப்படையாகப் புலனாயிற்று. ஆசிரி யர்களும் மாணாக்கர்களும் சேர்ந்தே ஆணையை மழுப்புவதற்குத் தம்மாலானவற்றையெல்லாம் செய்தனர். வகுப்புக்களுக்கென பாடமாக வைக்கப்பெற்ற அதனை வகுப்புக்களில் தொடங்குவது பல்வேறு சாக்குப்போக்குகளால் சில இடங்களில் ஒத்திவைக்கப் பெற்றது. சில பாடல்கள் தூய்மையற்ற சமயத் தாக்குதல்களைக் கொண்டுள்ளன என்று மற்ற இடங்களில் ஆசிரியர்களே சில பாடங்களை நீக்கும் பொறுப்பினை மேற்கொள்ளலாயினர். குறிப் பாகப் பிராமணர்கள் இந்த ஆசிரியர்மீது வெறுப்புக்கொள்ளு கின்றனர்; தம்முடைய நோக்கத்திற்கு ஆதரவாக அவருடைய நடையின் இழிவழக்கையும் சமயக் கட்டுப்பாடுகளுக்கு அடங்கி வராத அவருடைய பொருளையும் வெற்றி பெற்ற வெறுப்புடன் எடுத்துக் காட்டுகின்றனர்.

முப்பதாண்டுகட்குப் பின்னர் நிலைமை சீர்திருந்தவில்லை. வில் லியம்ஹோவார்டு காம்பெல் என்ற கிறித்துவச் சமயப் பரப்பாளர் 1898-இல் சென்னை கிறித்தவக் கல்லூரி இதழில் எழுதுகையில், ''பிராமணர்கள் எப்பொழுதுமே வெறுப்பான முறையில் அவரு டைய (வேமனருடைய) கோட்பாட்டை எதிர்க்கவே செய்தனர். இன்னும் அவர்கள் அவருடைய நூல்களைப் பற்றி இழிவாகவே பேசு கின்றனர்'' என்று பதிவு செய்திருப்பதினின்றும் இதனை அறிய லாம்.

நான்காவதாக, குறுகியபொருளில் வேமனரை ஒரு புலவர் என்று மட்டிலும் கூறுதல்கூடாது. ஏற்கனவே குறிப்பிட்டவாறு பொதுவிருப்பான பேச்சில் தேர்ச்சி பெற்ற வித்தகர் என்பதற்கு யாதொரு ஐயமும் இல்லை; அவர் கையாளும் ஒவ்வொரு சொல் லின் மிகச் சிறு மாறுதலையும் அறிந்திருப்பதுடன் பழைய சொற் களையும் புதுப்பொருள்களை நல்கும்படி செய்வதிலும் வல்லவர்.

தொடர் மொழிகள், மரபுத் தொடர்கள் இவற்றின் விரிந்த எல்லை யில் மிகவும் பழக்கப்பட்டவர் அவர்; தன்னுடைய சொந்தச் சுரங் கத்தின் கனிப்பொருள்களின் கலவையினின்றும் புதிய தொடர் மொழிகளையும் மரபுத் தொடர்களையும் புதிதாக உண்டுபண்ணும் தனித்திறமையையும் பெற்றிருந்தார். அவர் சொற்சுருக்கத்தை யும் பொருள்செறி தொடர்களையும் கையாள்பவர். மனநிலை மட்டிலும் அவர் வயமிருப்பின் திட்ப நுட்ப வாசகங்களை யும், சொற்சுருக்கக்கூற்றுக்கள், முதுமொழிகள், ஆணைமொழிகள், நன்னெறியுரைகள், அறிவுரைகள் ஆகியவற்றையும் பேரளவில் குவித்துத் தள்ளமுடியும். ஆனால் தெலுங்கு இலக்கியச் செருக் குடையவருக்கு இதுபோதாது.அமரகோசத்தையும் வேறு நிகண்டு களையும் மனப்பாடமாகத் தெரிந்தவர்கள், கட்டுப்பாடான இலக் கண விதிகளுக்கும், யாப்பு விதிகட்கும் இணங்க எழுதக்கூடியவர் கள், பேரொலிகளை விளைவிப்பனவும் தாடையுடையக்கூடியனவு மான வடமொழிக் கலப்புத் தொடர்களைக் கையாளக்கூடியவர் கள், அணி இலக்கண நூல்களை யாத்துக் காலத்துக்கொவ்வாத உவமைகளையும் பழங்கால உருவகங்களையும், நாட்பட்ட புளை கருத்துகளையும் தொகுத்துக்கூற வல்லவர்கள்— சுருக்கமாகக்கூறி ஞல், மரபு வழிப்புலமைபெற்று மரபுவழித் தலைப்புக்களில் மரபு முறைப்படி எழுத வல்லவர்கள் மட்டிலுமே மேதக்க வரிசைக்கவி ஞர்களுடன் சேர்க்கக்கூடியவர்களாக இருந்தனர்; மற்றவர்கள் எவ்வளவுதான் இயல்பான சொல் திறமையுடனும் அறிவாழத் துடனும் திகழ்ந்தபோதிலும், தம்முடைய சிந்தனையிலும் சொல்திற னிலும் முன்மாதிரியாக இருந்தபோதிலும் அவர்கள் அரைகுறைப் படிப்பாளிகளாகக் கருதப்பெறக்கூடியவர்களாகவே இருந்தனர்.

இறுதியாக, வேமனர் அரசர்களையோ மன்றங்களையோ அல் லது அரசவைக் கவிஞர்களையோ மதிக்கக்கூடியவர் அல்லர். ஆதர வாளர் உவப்பதற்காகக் கவிதையெழுதி அற்பத்தொகை சம் பாதிப்பது கவிஞர் தொழிலையே இழிவுபடுத்துவதாகும் என்று அவர் கூறுகின்ருர். சுதந்திரமாகவும் கட்டுப்பாடற்றும் இயங்கக் கூடிய திண்ணிய ஆன்மாதான் உண்மையான கவிஞராக இருக்க முடியும் என்றும் அத்தகைய கவிஞரே நீடித்து நிலைபெற்றிருக்கக் கூடிய செய்தியைத் தரக்கூடுமென்றும் அவர் நம்புகின்ருர்.பிறப்பு இறப்பு பற்றிய இறுதி உண்மைகளைச் சிந்தித்துக் கணநேரத்தோற் றமாகவாவது காண்பதற்கும், அவற்றைக்கொண்டு மனித இனத் திற்குச் சேவை செய்யவும் பயன்படுத்த இயலாத படிப்பும் புலமை யும் பயனற்ற அலங்காரங்களாகும் என்று அவர் உறுதியாகக் கூறு கின்ருர். கிட்டத்தட்ட எல்லாக் கவிஞர்களும் புலவர்களும் அண் மைக்காலம் வரையில் ஏதாவது ஒரு மன்றத்துடன் இணைக்கப்பெற் றிருந்தாலும் அதிகாரமும் செல்வமும் உடையவர்களிடமிருந்து

ஆதரவுகளையும் உதவிகளையும் பெற விரும்பினதாலும் வேமனர் அவ்வாறு கூறுவது அவரது ஆணவமான போக்காகும் என்று நம் பியதனாலும் அவர்கள் அவரை வெறுத்தனர்; இலக்கியப் போர்க் கருவிகளில் மிகவும் ஆற்றல் வாய்ந்ததான மௌன வெறுப்பினால் அவரைக் கொல்லவும் முயன்றனர். ஆனால் சமூகசமயச்சீர்திருத்த வாதியாக இருந்த வீரேசலிங்கமும்கூட ஏன் இந்தக் கேடிழைக்கும் கூட்டத்தினருடன் சேர்ந்தார்? வேமனரின் நாகரீகமற்ற நாட்டுப் புறச்சீடர்களால் சிறிதும் அரக்கமாயத்தையொத்த தந்திரமுடைய புகழ்க்குறைப்போராலும் மாசு கற்பிப்போராலும் பெரிதும் வேண்டுமென்றே சுமத்தப்பெற்ற சில செருகுப் பாடல்களின் இழிவுத்தன்மையும் கீழ்த்தர உணர்ச்சி சார்ந்த தன்மையும் கிராம்வெல்லிடமிருந்தது போன்ற அவருடைய கடுமையான ஆசாரமுடைமை வல்லந்தமாகத் தாக்கப்பெற்றிருத்தல் வேண் டும்.

நீண்டகாலமாக வேமனர் தெலுங்கு இலக்கிய நிறுவனத் திற்குப் பழியுரையாக இருந்தபோதிலும், வேமனரின் இலக்கியப் படைப்பைப் பற்றிச் சிறிதளவு அறிந்த ஒவ்வொரு மேனாட்டுச்சிந் தனையாளரும் எழுத்தாளரும் அதனால் மிகவும் நன்கு கவரப்பெற் றனர். இவர்களுள் மிக முன்னதாகக் கவரப்பெற்றவர் ஃபிரெஞ்சு மடத்தைச் சார்ந்த ஜே.ஏ. டூபாய் என்பவராகும். 1871-இல் முதல் ஆங்கிலப் பதிப்பாக வெளியிடப்பெற்ற தன்னுடைய **"இந்து ஒழுக்கங்கள், வழக்கங்கள், ஆசாரங்கள்"** என்ற நூலில் அந்த மடாதிபதி ''மெய்யறிவுச்சார்ந்த போக்கில்'' எழுதியுள்ள சில இந்தியக் கவிஞர்களைக் குறிப்பிட்டு மேலுங்கூறுகின்றார்:

> மிகப்புகழ்வாய்ந்தவர்களுள் ஒருவர் வேமனர்........ ரெட்டி வகுப்பைச் சார்ந்தவரும் கடப்பை மாவட்டத்தில் பிறந் தவருமான இந்த மெய்விளக்க அறிஞர் பதினேழாவது நூற் றாண்டின் இறுதியில் இறந்தார். நான் கண்ட பல்வேறு சுருக்கங் களிலிருந்து அவருடைய படைப்புக்கள் எனக்கு மிக்க கவர்ச்சிகர மாகத் தோன்றுகின்றன. அவை தெளிந்த கூரிய அறிவுத்தன் மையாலும் தன்னுண்மை (சுதந்திரம்)யாலும் புகழுடன் திகழ் கின்றன.

நாம் ஏற்கனவே குறிப்பிட்ட சென்னை சிவில் சர்வீஸைச் சேர்ந்த சார்லஸ் ஃபிலிப் பிரௌன் வேமனருடன் நெருங்கிய பழக் கத்துடன் அறிமுகமானவர். எனினும், அவர் அறிவாற்றலுள்ளவ ராக இருப்பதைவிட மொழிவாணராகவே அதிகமாகத் திகழ்ந் தார்; அவர் வேமனரை அணுகும்முறை முற்றிலும் மொழியைச் சார்ந்தே இருந்தது. அவர் பதிவு செய்தபடியே, ''நடை மிகவும் எளிதாகவும் மிக விரிந்த நிலையில் பல்வகைப் பெருக்கத்தலைப்புக்

களைக்கொண்டும் குறிப்பாக அந்த மொழியினைக் கற்போருக்கு மிக வும் பயன்படத்தக்கனவாகவும் உள்ள ஒரு கவிஞரின் படைப்புக் களைத்'' தான் தேடிக்கொண்டிருந்தபொழுது உண்மையிலேயே, அவர் வேமனரைக் காண நேர்ந்தது. இந்த வரம்புக்குள் அணுகி ஞல், அவர் கருத்துப்படி கிரேக்கச் சில்லறைக் கவிஞர் லூஷியன் என்பார்தான் வேமனருடன் மிகச்சரியாக ஒத்த ஓர் ஐரோப்பியக் கவிஞராக அமைகின்ருர். பிரௌன் சொன்ஞர்: ''கிரேக்க மொழிக்கு லூஷியன் எப்படியோ அப்படியே தெலுங்கு இலக்கியத் திற்கு இந்த நூலாசிரியர் ஆவார்; சிறந்த கவிதையென்ருே அல் லது சிறந்த இலக்கியம் என்ருே சொல்லமுடியாவிட்டாலும் இவர் முதன்முதலாகக் கல்வியைத் தொடங்குபவருக்கு மிகப்பழக்கப் பட்ட எழுத்தாளராக அமைகின்ருர். இதிலிருந்து பிரௌன் வேம னரை முதல்வகுப்புப் பாடநூலுக்கு அப்பால் காணமுடியவில்லை என்பது தெளிவு.

இப்படி இருந்தபோதிலும் நாம் பிரௌன்மீது அன்பற்று இருக்கவேண்டியதில்லை. காரணம் என்னவென்ருல், அவர்தான் முதன்முதலாக வேமனரின் கவிதைகளைச் சேகரித்து,ஒத்துப்பார்த்து ஒழுங்குப்படுத்திச் செவ்வைப்படுத்தி, அச்சிட்டு வெளியிட்டார். அக்கவிதைகளை ஆங்கிலத்திலும் இலத்தீன் மொழியிலும் முதன் முதலாக மொழி பெயர்த்தவரும் இவரே. தெலுங்கு இலக்கிய நிறுவனம் வேமனரை இனி என்றுமே புறக்கணிப்பதற்கு இயலாத முறையில் ஆற்றல்களைத் தன்னுடைய கவனத்தாலும் விடாமுயற்சி யாலும், ஆர்வத்தாலும் தொடங்கி வைத்தவரும் இவரேயாகும். **'வேமனரின் கவிதைகள்: நீதி, சமயம், அங்கதம் பற்றியவை'** என்ற தலைப்பில் தான் முதன்முயற்சியாக வெளியிட்ட நூலின் நூன்முகத்தில் தனக்கு நேரிட்ட சங்கடங்களையெல்லாம் கணக் கிட்டுக் கூறியுள்ளார். பொருத்தமான பகுதிகள் ஈண்டுத் தரப் பெறுகின்றன:

> ஒரு மொழியைக் கற்கத் தொடங்கும்பொழுது அந்த மொழிக்குரிய மக்களிடையே மிகப்பெருவழக்காகப் பயின்று வரும் நூல்களைப் பற்றி விசாரித்தறிவது நம்முடைய இயல்பே யாகும்; இந்த நூல்கள் யாதொரு சங்கடமுமின்றி வெளி நாட்டார் எளிதில் கருத்துணர்வதற்கேற்ற நடையில்அமைந் திருத்தல் வேண்டும். 1824-இல் தெலுங்கைப் பற்றி யான் மேற்கொண்ட இத்தகைய விசாரணைதான் இந்தத்தொகுப்பு நூலில் யான் சேகரித்த பாடல்களில் நன்கு அறிமுகமாவதற்கு வாய்ப்பு அளித்தது. வேமா அல்லது வேமனரின் (இந்த இரண்டு பெயர்களும் புழக்கத்திலிருந்தன)பல கைப்படிகள் என்கைக்குக் கிட்டின. என்னுடைய அரசு அலுவல்களுக்கிடையே கிட்டும்

ஓய்வுநேரங்களில் நான் அவற்றைப் பயின்று மொழிபெயர்க்க வும் முடிந்தது. எழுத்துப்பிழை, யாப்புப் பிழை, பொருட் பிழை முதலிய பல்வேறு 'பிழை மலிந்த சருக்கங்களாகக்' கிடந் தன அவைகள்; எந்த இரண்டு படிகளும் ஒன்றுபோல் ஒழுங்கு படுத்தி அமைந்த முறையினைப் பின்பற்றவில்லை; அவை விரிந்த நிலையில் இரண்டிலிருந்து எண்ணூறு திட்ப உரைகளில் வேறு பட்டிருந்தன. நான் மசூலிப்பட்டினத்தில் தங்கி இருந்தபொழுது அப்பகுதியில் கிடைத்த சில படிகளைச் சேகரித்த பிறகு படிப்படி யாக விசாகப்பட்டினம், நெல்லூர், குண்டூர், கடப்பை, சென்னை ஆகிய இடங்களிலிருந்தும் பிற படிகளைப் பெற்றுச் சேர்த்தேன். பின்னர் ஓர் அட்டவணையைத் தயாரிக்கச் செய்தேன். அதில் ஒன்பது பத்திகளில் பல்வேறு இடங்களில் கிடைத்த பாடல்கள் அவை கிடைத்த இடங்களைக் காட்டின; இங்ஙனம் அப்பாடல் களை நான் ஒத்துப்பார்க்க வழியமைத்துக்கொண்டேன். நான் கண்ட பாடல்களின் தொகை கிட்டத்தட்ட 2500 ஆகும். எனி னும் அவற்றை ஒப்பிட்டுப் பார்த்ததில் அவற்றின் தொகை 2000க்குச் சிறிது அதிகமாக இருந்ததைக் காட்டியது.

அதன்பிறகு அப்பாடல்கள் ஒரு திட்டமான ஒழுங்கில் அமைப்பது இன்றியமையாததாயிற்று. பெயர்த்தெழுதுவோர் ஒவ்வொருவரும் தாம் விரும்பியவாறு தேர்ந்தெடுத்துக்கொண் டனரென்பது தெளிவு; எந்த இடத்திலும் எவ்வித ஒழுங்கும் மேற்கொள்ளப்பெறவில்லை. நீண்ட யோசனைக்குப் பிறகு நான் முழுவதையும் இணைவிளக்கப் பொருத்தமானபடி சமயம், நீதி, அங்கதம், மறைமெய்ம்மை, பல்வகை என்ற ஐந்து தலைப்புக் களில் அமைத்துக்கொண்டேன்.

டாக்டர் ஜி.யு. போப்பும், மேஜர் ஆர்.எம். மாக்டஞல்டும் வேமனரை வியந்து போற்றிய அடுத்த இரண்டு ஐரோப்பியர்களா வர். முன்னதாகக் குறிப்பிட்டவர் மடாதிபதி டுபாயின் "**இந்து ஒழுக்கங்கள், வழக்கங்கள், ஆசாரங்கள்**" என்ற நூலின் தனது பதிப்பில் "வேமனரின் செய்யுளியற்றும் போக்கிலுள்ள இனிமை யையும் சந்த நயத்தையும் எதுவும் விஞ்ச முடியாது" என்று குறிப் பிட்டுள்ளார். பின்னர்க் குறிப்பிட்டவரின் கருத்துப்படி, "தெலுங்கு இலக்கியப் பரப்பு முழுவதை நோக்கினுல் வேமனரது எழுத்துக்கள் ஐரோப்பியர்களின் கவனத்தைக் கவர்ந்தது போல் வேறு எந்த நூலாசிரியரின் எழுத்துக்களும் கவர்ந்ததில்லை" என்ப தாகும்.

இரண்டாவதாக வேமனரை மொழி பெயர்த்த ஆங்கில மொழி பெயர்ப்பாளரும் ஒரு சார்லஸ் என்பவரே; அவர் பெயர் சார்லஸ் இ. கோவர் என்பது. அவரை ஒரு மொழிபெயர்ப்பாளர்

என்று வழங்குவது முற்றிலும் சரியன்று; காரணம், கோவரே நன்றியுடன் ஒப்புக்கொண்டபடி, சார்ல்ஸ் ஃபிலிப்பின் மொழி பெயர்ப்பே தன்னுடைய 'முக்கிய மொழிபெயர்ப்புக்கு "அடிப் படையாக" அமைந்தது. "தூய்மையாகப் பகுத்தறிவுள்ளவ ராக இருப்பதற்கும், தீவிரமான முறையில் ஒரே கடவுட்கொள் கையுடையவராக இருப்பதற்கும், விடாப்பிடியான முரட்டுக்குண முடையவராக இருப்பதற்கும் பொருத்தமான பொருளில் சொல் லைக்கையாள்வதற்குமாக" அவர் வேமனரைப் பாராட்டினுர். ஆயி னும் அவர் வேமனரை "நீதியுணர்ச்சியில் திருவள்ளுவருக்கு மிகக் கீழான நிலையிலும், கவிதை ஆற்றலில் இன்னும் மிகத் தொலைவிலும்" வைத்துப் பேசினுர். இந்த மதிப்பீடு சரியோ அன்றிச் சரியன்றோ, வின்சென்ட் ஏ. ஸ்மித் என்பார் தன்னுடைய **'ஆக்ஸ் ஃபோர்டு இந்திய வரலாறு'** என்னும் நூலில் மிகக் கடுமை யாகவும் ஐயத்திற்கிடமற்றதாகவும் சாதியைப் பற்றிப் பழித்துக் கூறும் ஓர் இந்திய எழுத்தாளரைக் குறிப்பிட விரும்பியபொழுது அவர் வேமரின்பால் கவனம் செலுத்தி 1871-இல் வெளியிடப் பெற்ற கோவரின் **'தென்னிந்தியாவின் நாட்டுப் பாடல்கள்'** என்ற நூலிலிருந்து நான்கு பாடல்களை மேற்கோளாகக் காட்டியதை சுவை பயப்பதாக உள்ளது.

வில்லியம் எச். கேம்ப்பெல் என்பார் வேமனரை மதிப்பிடுவ தில் பிரௌன் அல்லது கோவரை விடச் சிறந்த தீர்ப்பாளராகத் திகழ்ந்தார். சென்னைக் கிறித்துவக் கல்லூரி இதழில் தன்னுடைய கட்டுரையில் பிற செய்திகளுக்கிடையில் அவர் கூறியது:

> வேமனர் மக்களின் கவிஞர் என்பதை வற்புறுத்திக்கூற லாம். அவர் புலவர்கட்காக எழுதவில்லை; ஆனுல் எளிய கல்வி யறிவில்லாத கிராம மக்களுக்காகவே எழுதினுர். அவருடைய செய்தியின் மேம்பாட்டிற்கு ஏற்ப அவருடைய நடையிலும் எளிமையும் வேகமும் இருந்ததால் அவர் புகழுடன் திகழமுடிந் தது. வெறும் இலக்கியப் புகழைச் சிறிதும் கருதாது பண்டைய கவிதைபற்றிய விதிகளை ஏளனம் செய்தார். அங்ஙனம் செய்வதில் தனது கூரறிவினையும் காட்டினுர். இந்தியாவில் பண்டைய கவிதை உண்மையில் புகழுடன் திகழ முடியாது; பெரும்பாலான பொது மக்களுக்குக் கிட்டத்தட்ட முற்றிலும் அதனைப்புரிந்து கொள்ள முடியாத நிலைமையே காரணமாகும்... எள்ளல் குறிப் பின் ஆற்றல் காரணமாகவே வேமனர் மிகவும் புகழுடன் திகழ்ந்தார். மனிதர்களின் குறைபாடுகளையும் மூடத்தனத்தை யும் காண்பதற்கேற்ப அவர் கூரிய பார்வையைப் பெற்றிருந்தார். அவற்றை அவற்றின் இழிந்த தன்மையும் முட்டாள்தனமும் தெளிவாகப் புலப்படும் வண்ணம் விரிந்துரைக்கும் ஆற்றலும்

அவரிடம் அமைந்திருந்தது.... வேமனர் உண்மையில் முக்கிய மாக எள்ளி நகையாடுபவர் மட்டிலும் அல்லர்; உண்மையில் அவர் ஒரு சீர்திருத்தவாதியும்கூட. தன் நாட்டு மக்களின் முன் னேற்றத்தின் பொருட்டுத் தன்னிடம் வாழ்க்கைக் குறிக்கோள் ஒன்றிருப்பதை உணர்ந்தார்; அதனைத் தான் நிறைவேற்றுவதில் எந்தவிதச் சலுகையும் குறுக்கிடுவதற்கு அனுமதிப்பதில்லை... பெரும்பான்மையான இந்தியச் சிந்தனையாளர்களின் கொள் கைக்கு மாறாக வேமனரின் அகிலத்தைப் பற்றிய கொள்கை முக்கியமாக உலகமே கடவுள் என்ற மாயாவாதக் கொள்கை யைச் சார்ந்திருப்பதைவிடக் கடவுளுண்டு என்ற கொள்கையில் தான் அதிகமாகச் சார்ந்திருந்தது. யாவற்றிற்கும் மேலான உயிருக்கும் (பரமான்மா) தனிப்பட்டவர் உயிருக்கும்(சீவான்மா) உள்ள வேற்றுமையை அவர் ஏற்றுக்கொண்டார். யாவற்றிற்கும் மேலான ஆற்றல் ஒன்றின்கீழ் மனிதர்கள் யாவரும் கைப்பாவை கள் என்று கருதுவதினின்றும் தன்னைத் தவிர்க்கக்கூடிய மனித சித்தத்திற்கு ஓர் இடத்தையும் முக்கியத்துவத்தையும் ஒதுக்கி வைக்கின்றார்... மிக்க ஆற்றலுடனும் அக்கரையுடனும் வறட்டுத் துறவினைப் பலரறியப் பழித்துக்கூறினார்; அது ஒரு விக்லிஃபுக்கோ அல்லது ஒரு லூதருக்கோ செல்வாக்குத் தந்திருத் தல் கூடும்.

ஒழுங்காக வளர்ந்து வரும் வேமனரின் இலக்கியப் புகழ் ஒரு புறமும், இந்தியாவில் மாறிவரும் சமூக சமய நீதி பற்றிய சூழ் நிலை மற்றொருபுறமும் வேமனரின்மீது ஆய்ந்துகொண்ட மௌன வெறுப்பினைப் போற்றிக் காத்ததற்குத் தெலுங்கு இலக்கிய உயர் மட்டப் புலவர்கட்கு அதிகமான சிரமத்தைத் தந்தன. எல்லாவற் றையும்விட இலக்கியத் திறனாய்வு பற்றிய ஒரு புதிய நூலில் நெருக்கி நிரப்பப்பெற்ற வெடிமருந்து இதுகாறும் தாக்குதலுக்கு அசையாதிருந்த அரணில் முதல் பெரிய பள்ளத்தை உண்டாக்கி யது. **'கவித்வ தத்துவ விசாரமு'** என்ற தலைப்பினையுடைய நூல் முதன்முதலாக 1914-இல் டாக்டர் சி.ஆர். ரெட்டி என்ற பெரி யாரால் வெளியிடப்பெற்றது. தன்னுடைய தந்தையாரால் கற் பிக்கப்பெற்றுச் சிறு பருவம் முதற்கொண்டே டாக்டர் சி.ஆர். ரெட்டி பண்டைய தெலுங்கு இலக்கியங்களில் பழக்கப்பட்டவராக இருந்தார். பின்னர் சென்னையிலும் கேம்பிரிட்ஜிலும் அவர் பெற்ற கல்வி மேனாட்டு இலக்கியங்களில் மிக நல்லதாக இருக்கும் பகுதியில் நல்ல பழக்கத்தை உண்டாக்கியது. இயற்கையாகவே கூரிய அறிவும் ஒளிர்விடும் சொல்திறமும் அவரிடம் வாய்த்திருந் தன. மன இயல்பாலும் பயிற்சியாலும் தன்னுடைய நோக்கிலும் போக்கிலும் தற்காலத்திற்குரிய புதுமையைப்பெற்றிருந்தார். தன் னுடைய இலக்கியத் திறனாய்வு நூலில் தன்னுடைய இயற்கைத்

திறன்கள் யாவும் கொண்டிருக்குமாறு செய்திருந்தார். அஃது ஒரு வெடிகுண்டுபோல் வெடித்துப் பழைய பல தவறான எண்ணங்களையும் ஒருதலைச்சார்புடைய கருத்துக்களையும் ஊதி எறிந்தது; அது இன்னும் தெலுங்கு இலக்கியத் திறனாய்வில் தலைசிறந்த ஓர் உயர்தர இலக்கியமாகத் திகழ்கின்றது. ஒரு திருப்பு — கட்டத்தை உண்டாக்கும் அந்த நூலில் வேமனரை டாக்டர் ரெட்டி ஆந்திரம் அளித்த மிகச்சிறந்த முன்மாதிரியான கவிஞர்களுள் ஒருவர் என்பதாகப்போற்றியுள்ளார். உண்மையிலேயே படைப்புக் கற்பனையிலும், சொல் திறனிலும் நகைச்சுவையிலும், முன்மாதிரியிலும், துணிவாகக் கூறுவதிலும், மூடப்பழக்கங்களை அப்பட்டமாகத் திறந்துகாட்டும் திறனிலும் பாசாங்குகளை வெளிப்படுத்திக் காட்டுவதிலும் வேமனர் தெலுங்கு இலக்கியத்தில் தலைசிறந்தவராகத் திகழ்ந்தார்.

தங்களுடைய எதிர்த்தாக்குதல் சின்னாபின்னமாக உடைபட்டதும் வேமனரின் குரல்கள் பேராற்றல் வாய்ந்தவை என்றும், அதன் எதிரொலிப்பினைத் திக்குமுக்காடச் செய்ய இயலாதென்றும், அவர் தரும் செய்தி உயிருள்ளதென்றும், அனைத்தையும் உட்படுத்தியுள்ள அதனை அடக்கி வைக்க முடியாதென்றும், அவருடைய ஆளுமை மிகத் துடிப்புடையதென்றும், அது சிதைக்க முடியாத அளவுக்கு மிக்க இயக்க ஆற்றலைக் கொண்டதென்றும், தெலுங்கு இலக்கியத் தலைவர்கள் ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. சமய வெறியாலும், சமூகச் செருக்கினாலும், தவறான இலக்கிய மதிப்பீடுகளினாலும் அவர்கள் அறிவுக்குருடாக்கப் பெறுதிருப்பின் வேமனர் என்றும் சாவாத் தன்மையுடையவர் என்பதை மிக முன்னதாகவே அறிந்திருப்பர். அவருடைய சொல்லாற்றலையும், அவருடைய ஆளுமையின் செல்வாக்கினையும் தவிர, அவருக்குச் சாவாத்தன்மையை நல்குவதற்குத்தொடக்கத்திலிருந்தே வேறொரு வலு மூலத்தையும் கொண்டிருந்தார். அவருடைய வாழ்நாட் காலத்திலேயே அவர் ஒரு கட்டுக்கதையாகிவிட்டார்.

# 2. கட்டுக்கதைகளின் மடியில்

**"பழைய கட்டுக்கதைகளின் மடியில் உறங்குகிறேன்"**
**—கீட்ஸ்.**

**த**ன் காலத்திலேயே கட்டுக்கதையினுள் அடங்கிய வேமனர் இப்போது கட்டுக்கதைகளின் திரள்களில் அடங்கியுள்ளார். மலையளவுள்ள திரள்களில் அடங்கியுள்ளார் என்று கூடக் கூறலாம். அவர் பல்வேறு வகைகளில் இணையற்றவராகத் திகழ்ந்தார். நடத்தையில், ஆடை அணிவதில் அல்லது முற்றிலும் ஆடையற்றிருத்தலில், இயல்பான மனப்பாங்கில், தனிக்கோட்பாட்டில், இன்னும் பல வகைகளில் அவருடைய தனித்தன்மை தெளிவாகக் காணப்பட்டது என்று சொல்லலாம். பலர் அவரை ஒரு மகாத்மா என்றும், இன்னும் பலர் அவரை ஒரு வாய்வீச்சுக்காரன் என்றும், பைத்தியக்காரன் என்றும் சொல்லும் அளவுக்கு உண்மையிலேயே அவரது தனித்தன்மை தெளிவாகப் புலனுயிற்று. அத்தகைய ஒரு மனிதர் எக்காலத்திலிருப்பினும் எந்த இடத்திலிருப்பினும் கட்டுக்கதைகள் அவரைச் சுற்றி வேகமாகவும் அதிகமாகவும் திரள்கின்றன. மக்கள் திரளுக்குரிய செய்திப் போக்குவரத்துத் தொடர்பு மிகக்குறைவாகவுள்ள காலத்தில் எதையும் எளிதாக நம்பும் ஒரு சமூகத்தில் வேமனர் வாழ்ந்தார். ஆகவே, அவர் ஒவ்வொரு கட்டுக்கதையின் நடுப்பகுதியாகத் திகழ்ந்தார். அக்கட்டுக்கதைகள் மிகவும் முட்டாள் தனமாகவும், நம்பத்தகாதனவாகவும், இயல்புக்கு மாறுனவையாகவும், அருவருப்பாகவும் இருந்தன என்று கூறலாம்.

வேமனரைக் குருவாகவும், கடவுளாகவும் கருதும் சீடர்கட்குக் கட்டுக்கதைகளின் கதாநாயகராகத் திகழும் வேமனர் உண்மையான வேமனராகவே காணப்பெற்ருர். இமயமலை எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மையாக விளங்கினுர்; தெய்வ நிலையிலும் குறைவற்றவராகத் திகழ்ந்தார். வரலாற்று வேமனரைக் காண்பதற்குக் கட்டுக்கதைகளின்புறத்தே அவரைக்கொண்டுவந்து காண்பதற்கு முயன்ருல், அச்சீடர்கள் அம்முயற்சியை முறையற்ற அவச்செயலாகவும் கிட்டத்தட்ட தெய்வப் பழிப்பாகவும் கருதுகின்ற

னர். அவருடைய சீடர்களைத் தவிர இலட்சக்கணக்கான பிறரும் சிறிதும் மாருத அதே கருத்தினையே கொண்டுள்ளனர். காரணம், தெலுங்கில் திறனுய்வுடன்கூடிய ஒரு வாழ்க்கை-வரலாற்று நூலுக்கு எதிராகக் கட்டுக்கதைகளில் தொடங்கிக் கட்டுக்கதை களிலே முடியும் மிக விரிவாகப் புழங்கும் பத்துக்கு மேற்பட்ட வாழ்க்கை—வரலாற்று நூல்கள் நிலவுகின்றன. சி. இராமகிருஷ்ண ராவ் அவர்கள் வேமனரைப்பற்றி ஆங்கிலத்தில் எழுதியுள்ள ஒரேஒரு வாழ்க்கை வரலாறும் கட்டுக்கதைகளின் கோவையாகவே அமைந்துள்ளது. வேமனரின் வாழ்க்கை-வரலாற்று ஆசிரியர்களுள் மிகத்தொன்மை வாய்ந்தவர் மசூலிப்பட்டினத்தைச் சார்ந்த ஆர். பூர்ணயாச்சார்லு என்பவர். மாவட்டக் காவலர் அலுவலகத்தில் எழுத்தராகப் பணி புரிந்த இவர் குறைந்த கல்வி கற்றவர்; பண வசதியிலும் குறைந்தவர். ஆனுல் வேமனரிடம் கொண்டிருந்த பக்தியோ அளவற்றது. பிரௌன் என்பார் மேற்கொண்ட பணியைத் தொடர்ந்து ஆற்றும் பேரவாவால் தூண்டப்பெற்று, வேமனரின் பனையோலைக் கையெழுத்துப் படிகளுக்காக நாடு முழு வதும் அலைந்துதிரிந்தார்; வாய்மொழியாகப் புழக்கத்திலிருந்த நூற்றுக்கணக்கான பாடல்களை எழுதிக்கொண்டார்; கவிஞரின் வரலாற்றுச் செய்திகளாகத் தான் நம்பியவற்றையெல்லாம் எழுதித் தொகுத்துக்கொண்டார். பல்லாண்டுகளாக மேற்கொண்ட முயற்சி யின் விளைவாக 1913-இல் அக்காலத்தில் மிகப்பெரியதென்று கருதப்பெற்ற வேமனரின் கவிதைத் தொகுப்பினை வெளியிட்டார். அத்தொகுப்பில் 4,035 பாடல்கள் அடங்கியிருந்தன. பல கற்பனை யான வருணனைகளைக்கொண்ட வேமனரின் வாழ்க்கை வரலாற்றினை எழுதி வெளியிட்டார். அவர் பெருமிதமாகக் கருதிய இந்த வருணனைகள் (வியாசரின் தனிப் பற்றுக்குரிய உவமையில் கூறினுல்) வேமனரை ''மனிதர்களுள் ஓர் ஏறுபோல்'' காட்டின.

வேமனரின் ஏனைய வாழ்க்கை-வரலாறுகளைப்போலவே பூர் ணயாச்சார்லு அவர்கள் எழுதிய **"வேமனயோகீந்திர சரித்திரமு"** என்ற வாழ்க்கை வரலாறும், நம்முடைய பகுத்தறிவு மனத்தை உறங்கவிட்டுக் கற்பனைக் கதைகளின் அந்தி ஒளிவீசும் உலகில் சென்று உலவினுல், கவர்ச்சியால் மயங்கும் அளவுக்கு உற் சாகத்தை ஊட்டும் படியாக அமைந்துள்ளதைக் காண்போம். கலப்பற்ற அந்தக் களிப்பில் ஆழங்கால் படுவதற்காகவே, நாம் இப்பொழுது அந்த உலகில் புகுந்து வேமனரின் சீடர்களும் பக்தர்களும் காணும் வேமனரைக் காண்போம். ஆனுல் நாம் தேடிச்செல்லும் நடுநாயகரை நேருக்கு நேர் காண்பதற்கு முன்னர், காலத்தாலும் இடத்தாலும் அகன்று காணப்பெறும் உண்மையெனக் கருதமுடியாதபடி விசித்திரமாகத் திகழும் அந்த மாய உலகில் புகுந்து நெடுந்தொலைவுப் பயணத்தை மேற்

கொள்ள வேண்டியிருக்கும் என்பதை நாம் நினைவிலிருத்துதல் வேண்டும்.

நினைப்பிற்கெட்டாத நெடுங்காலத்திற்கு முன்னர் ஒருவர் புண்ணியப் பயணத்தை மேற்கொண்டார். அவருடைய பெயர் வேமர் என்பது. அவர் ஒரு வைசியர்; தெலுங்கில் அவரைக் ''கோமட்டி'' என்று வழங்குவர். அவர் நோக்கிச்சென்ற திருத் தலம் சீசைலமேயாகும். அத்தலம் கர்நூல் மாவட்டத்திலுள்ள ஒரு குன்று; அஃது இன்றும் ஓர் அடர்ந்த கானகமாகத் திகழ்கின் றது. அது கிருஷ்ணா நதியின் வளைந்து வளைந்து செல்லும் கரைகளை நோக்கிச் சரிவாக அமைந்துள்ளது. அதன் உச்சியில் ஒரு பழங்காலச் சிவன் கோயில் அமைந்துள்ளது. அத்திருக்கோயிலில் அருளுடைய மல்லிகார்ச்சுனர் வடிவில் அப்பெருமானைக் காணலாம். சிவ வழி பாட்டிற்கென ஒதுக்கப்பெற்ற சிவராத்திரியன்று ஆயிரக்கணக் கான பக்தர்கள் சீசைலத்தில் கூடுகின்றனர். அவர்கள் பகல் முழு வதும் பட்டினி கிடந்து இரவு முழுதும் உறங்காது விழித்தவண் ணம் விரதத்தை மேற்கொள்ளுகின்றனர். அவர்கள் கிருஷ்ணாநதி யின் நீலநிற நீரோட்டத்தில் தீர்த்தமாடி, தங்கள் நெற்றியிலும் புயங்களிலும் வெண்ணீறு பூசி, சங்குகளை ஊதியும் பேரிகைகளை யும் கைத்தாளங்களையும் முழக்கியும், ஆடியும் பாடியும் தங்கள் வழிபாடுகளை மேற்கொள்கின்றனர். பதின்மூன்றாவது நூற்றாண் டின் இறுதியில் அவ்விதம் வழிபாடு நடத்திய திருத்தலப் பயணி கோமட்டி வேமர் என்பவராகும்.

சிவராத்திரியின் மறுநாள் கோமட்டி வேமரைத் தவிர எல்லாத் திருத்தலப் பயணிகளும் தம்வீடு திரும்பிவிட்டனர். திருக் கோயிலிலும் அதன் சுற்றுப்புற இடங்களிலும் அவர் கபடமாக அடிக்கடிச் சென்று வருதல் கோயில் அர்ச்சகர்களின்பால் ஐயத்தை எழுப்பியது. அவர்கள் அவரைக் கோயிலைவிட்டு வெளியேறும்படிக் கட்டளையிட்டனர். ''அடியேனை ஏன் விரட்டுகின்றீர்கள்?'' என்று கோமட்டி வேமர் அவர்களைக் கெஞ்சும்பாவனையில் வினவினார். ''அடியேன் உண்மையான சிவபக்தன். இறைவனுடைய திருவரு ளைப்பெறும் வரையில் அடியேன் அவருக்கு வழிபாடு நடத்த விரும்புகின்றேன்'' என்றார். அர்ச்சகர்களும் மனமிளகி அவர் தங்கு வதற்கு இசைவு தந்தனர். ஆயினும் திருக்கோயிலின் வடபால் உள்ள அடர்ந்த காட்டினுள் நுழைய வேண்டாமெனக் கட்டளை யிட்டனர். ''அங்குப்பாம்புகள் அதிகமாக உள்ள; கானகத்தினூடே பொல்லாத பிராணிகள் அலைந்து திரிகின்றன'' என்று அவர்கள் அவரை எச்சரித்தனர். எச்சரிக்கையாக அமைந்த அவர்கள் கட்டளை கோமட்டி வேமருக்கு ஒரு சொற்குறிப்பாக அமைந்தது; அனுமதிக்கப்படாத அந்த நிலப் பகுதியில் நுழைவதற்கு முதல்

வாய்ப்பினை ஏற்படுத்திக்கொண்டார் அவர். தான் திரும்பும் வழி தவறிவிடக்கூடுமெனக் கருதி, ஒரு சிறிய பை நிறையக் கடுகுவிதைகளைக் கொண்டு சென்றார். அடர்ந்த புதர்க் காட்டினூடே புகுந்து செல்லுங்கால் வளைந்து வளைந்து பாம்பு போல் செல்லும் வழியெல்லாம் கடுகுவிதைகளை இறைத்துக் கொண்டே சென்றார். பல்வேறு தற்செயல் இடர்களுடன் நீண்ட விடாமுயற்சியுடன் தேடியபிறகு **புருடவேதி** என்ற ஒரு குளத்தைக் கண்டார். சீசைலத்திற்குத் தான் மேற்கொண்ட திருத்தலப் பயணத்தின் ஒரே தனிநோக்கம் உண்மையிலேயே இக்கண்டுபிடிப்பாகவே இருந்தது. தன் கண்டுபிடிப்பை உறுதிசெய்வதற்காக அவர் ஓர் இரும்புக்கோலை அந்தக் குளத்திலுள்ள பொன் மாற்றுச் சித்து பயக்கும் நீர்மத்தில் தோய்த்தார்! என்னவியப்பு! அந்த இரும்புக்கோல் பொற்கோலாக மாறியது. கரைபுரண்டோடும் களிப்புடன் இரண்டு மட்குடம் நிறைந்து வழியுமாறு அந்த மந்திர நீர்மத்தை நிரப்பிக்கொண்டு கடுகுநெறியின் வழியாகவே விரைந்து திரும்பினார்.

கோமட்டி வேமர் கோயிலையும் அதன் அர்ச்சகர்களையும் தவிர்ப்பான்வேண்டி அப்பாலுள்ள ஒரு சுற்று வழியை மேற்கொண்டுஎல்லைப்புறப்பகுதிவழியாக'அநுமகிரி'(அநுமக்கொண்ட) என்ற ஒரு சிற்றூரை அடைந்தார். அவர் அவ்வூரை அடைந்த நேரம் பகலவன் மறைந்த ஒரு மணி நேரத்திற்குப் பின்பாகும். அப்பொழுதுதான் அடர்ந்த இருட்படலம் உலகினைச் சூழ்ந்து கொண்டிருந்தது. அன்றிரவு தொண்டி அலியா ரெட்டி என்ற உழவரிடம் பாதுகாப்பிடத்தை நாடினார். (சில பதிப்புகளில் அந்த உழவர் தொண்டி அல்லாட ரெட்டி என்றும் குறிக்கப்பெறுகின்றார்). உழவர் தன் கால்நடைக் கொட்டிலைக் காட்ட, கோமட்டி வேமர் தான் கொணர்ந்த இரண்டு மட்குடங்களையும் சில உழுபடைகளின் பின்னால் மறைத்து வைத்துவிட்டு உணவு பெறுவதற்காகத் தன் சாதி மக்களைத் தேடிச்சென்றார். கோமட்டி வேமர் வெளியில் சென்றிருந்தபொழுது அலியா ரெட்டி என்பவர் தன் மாடுகட்குத் தீனி போடுவதற்காக மாட்டுத் தொழுவத்திற்குச் சென்றார். ஏதோ ஒரு பொருள் பொன்போல் பளபளப்பாக ஒளிர்வதைக் கண்டு பெருவியப்படைந்தார். அதன் அருகில் சென்றதும் தற்செயலாகப் **புருடவேதியுடன்** நேராக மோதியதன் விளைவாக கலப்பைக் கொழுக்களில் ஒன்று பொன்கொழுவாக மாறியிருப்பதைக் கண்ணுற்றார். அலியா ரெட்டியின் சிந்தனை விரைந்து செயற்படவே, அவர் அந்த இரண்டு குடங்களையும் தன் இல்லத்திற்கு மாற்றினார். கொட்டிலிலுள்ள கால்நடைகளை வெளியே செல்லவிட்டு, கொட்டிலின் கூரைக்குத் தீக்கொளுவினார். கூரை கொழுந்து விட்டெரிந்து வானத்தைச் செந்நிறமாக்கவே,

கோமட்டி வேமர் வேகமான பாய்ச்சலுடன் திரும்பினர். தன்னுடைய மதிப்புமிகுந்த இரண்டு குடங்களையும் காப்பாற்றும் நோக்கத்துடன் வெறிகொண்ட நிலையில் உக்கிரமான தீச்சுவாலையில் குதித்தார்; தீயில் மாண்டார்.

அலியாரெட்டி விழிப்பும் திறமையும் உடையவராதலின், திடீரென்று ஒரு செல்வந்தராகக் காட்சிஅளிக்க விரும்பவில்லை. பகுத்துணர்சிந்தையராய் அவர் **புருடவேதியைக்** கால இடைவெளி விட்டுப் பயன்படுத்தினர். நாளடைவில் பல வீடுகளையும், பல பண்ணைகளையும், பல மந்தைக் கால்நடைகளையும் சேர்த்தார். ஆனால், அவருடைய செல்வச் செழிப்புடன் துக்கங்களும் அவரிடம் குவிந்தன. கோமட்டி வேமர் பழி வாங்கும் பேயாக மாறித் தொடர்ந்து அஞ்சத்தக்க பேரிழப்புக்களை அவர் அடையுமாறு செய்தார். அவருடைய மக்கள் ஒருவர் மாற்றி ஒருவராக நோயுற்று இறந்தனர். அலியாரெட்டியோ பயங்கரமான ஆறுத் துயரில் ஆழ்ந்தார். புரோலயா என்ற ஒரேஒரு மகன்தான் எஞ்சியிருந்தான். அவனும் இறந்துவிடின் குடும்பச் சொத்தினை மரபுரிமையாகப் பெறுவதற்கோ அல்லது அக்குடும்பத்தின் தென்புலத்தாருக்கு எள்ளும் நீரும் இறைத்துக் கடன்கழிக்கவோ ஒருவரும் இலர். தம்முடைய அச்சத்தைப் பிறருடன்பகிர்ந்துகொள்ளவோ அல்லது அதன் மூலகாரணத்தை வெளியிடவோ முடியாத நிலையில் அவருடைய கடுந்துயரத்தின் பளு தாங்க முடியாத நிலையிலிருந்தது.

மிக அண்மையில் தன்னுடைய ஊழித் தீர்ப்பின் வெடிப் பொலியைத் தான் கேட்கக்கூடும் என்று அஞ்சிய நிலையில் அலியாரெட்டி ஓரிரவு உறங்கச்சென்றார். அவருக்கோ அமைதியான உறக்கம் பிடிக்கவில்லை. அந்த உறக்கத்தில் அவர் கனவொன்று கண்டார். அந்தக் கனவில் கோமட்டி வேமர் அச்சுறுத்தும் நிலையில் தோன்றினர். அலியா ரெட்டி அவருடைய கால்மலர்களில் திடீரென்று வீழ்ந்து, கண்ணீர் ஆறுகப் பெருகும் நிலையில் அவருடைய மன்னிப்பை இறைஞ்சினர். ''நான் உங்கள் மனக்குறையை ஆற்றுவதற்கு என்ன செய்யவேண்டும் என்று சொல்லுங்கள், தயவு செய்து சொல்லுங்கள்'' என்று முறையிட்டார். கோமட்டி வேமர் இறுதியில் ஒருவாறு இரக்கப்பட்டுத் தம்முடைய மன்னிப்புக்கு இரண்டு நிபந்தனைகளை விதித்தார். முதலாவதாக, அலியாரெட்டி கோமட்டி வேமரின் தங்கச்சிலையொன்று நிறுவி அதனை நாடோறும் தன்னுடைய குலத்தெய்வமாக வழிபடல்வேண்டும்; இரண்டாவதாக, அன்றும் எதிர்காலத்திலும் அவர் குடும்பத்திலுள்ள எல்லா ஆண்பாலாரும் கோமட்டி வேமர் என்ற பெயரினைத் தாங்கியிருத்தல்வேண்டும். இந்த இரண்டு நிபந்தனைகளையும் யாதொரு குறையுமின்றிக் கண்டிப்பாகக் கடைப்பிடித்தால் அலியாரெட்டியின் குடும்

பம் பெருகி வளனுடன் திகழும்; விரைவில் அஃது ஓர் அரசாக வளர்ந்து தலைசிறந்த முறையில் ஆட்சிபுரியும். அலியா ரெட்டி இந்த இரண்டு நிபந்தனைகட்கும் கட்டுப்படுவதற்கு உடனேஇசைந் தார். அடுத்த நாளே வேமரின் உருவச்சிலையைப் பொன்னால் அமைப் பதற்குப் பொற்கொல்லர்களை நியமித்தார். சின்னாட்குப் பின்னர் ஒரு நன்னாளில் பகட்டான பெருவிழா எடுத்து அந்தச் சிலையைத் தம்முடைய குடும்பத் திருவிடத்தில் பிரதிட்டை செய்தார்; அப் பொழுது தப்பிப் பிழைத்திருந்த புரோலயாரெட்டி என்ற தன் னுடைய மகனின் பெயரை புரோலயா வேமா ரெட்டி என்ற பெய ராக மாற்றினார்.

அந்தநாள்தொட்டுக் கோமட்டிவேமரின் ஆவி உருவம் அலியா ரெட்டிக்குத் தொல்லை தருவதை நிறுத்திக்கொண்டது. அதற்குப் பிறகு இரண்டு குமாரர்களை அவர் அடைந்தார். அவர்கட்கும் முறையே அனவோத்த வேமா ரெட்டி என்றும் அனவேமாரெட்டி என்றும் பெயர்களை இட்டார். மீண்டும் அவருக்கு மகிழ்ச்சிகரமான வாழ்க்கை கிட்டியது. மகிழ்ச்சியற்ற நினைவுகளுடன்கூடிய பழைய சுற்றுப்புறங்களைத் தவிர்க்கலாம் என்ற நோக்கத்துடன் தான் புதிய தோர் இடத்தில் குடிபுகுவது நன்று எனக் கருதினார். தன்னுடைய குடும்பத்துடனும் விலைமதிக்க முடியாத புருடவேதியடங்கியகுடங்க ளுடனும் கி.பி.1323-இல் குண்டூர்மாவட்டத்திலுள்ள ‘கொண்ட வீடு’ என்ற சிறியதொரு நகருக்குக் குடியேறினார்.

கொண்டவீடு சென்று அங்கு அமர்ந்தபிறகு ஓரிரண்டு ஆண்டுகளில் அலியாரெட்டி விண்ணுலகெய்தினார். காலதேவன் அவரை ஆட்கொண்டதற்கு முன்னரே புரோலய வேமர் என்ற அவருடைய திருக்குமாரரைக் கருவிலே திருவுடைய அரசனாகக் கண்டு மகிழ்ந்தார். புருடவேதியையும் அதனால் பெற்ற பொன்னை யும் தாராளமாகப் பயன்படுத்திப் புரோலயவேமர் கொண்ட வீட்டினைச் சுற்றி அரண்களை அமைத்தார்; படைகளைத் திரட்டி னார்; அண்டைநிலப் பகுதிகளை வென்றார். காகதீயப் பேரரசு சிதறிய தால் ஏற்பட்ட வன்மையற்ற நிலையைப் பயன்படுத்திக்கொண்டு தானே கி.பி.1328-இல் சுயேச்சையுள்ள முடியரசராகப் பறை யறைவித்துக்கொண்டார்.

பன்னிரெண்டாண்டுகட்குப் பிறகு புரோலய வேமர் விண்ணாடு புக்கார்; அவருடைய தம்பி அனவோத்த வேமா ரெட்டி அரியா சனத்திலமர்ந்தார். அஞ்சாநெஞ்சினையும் விடாமுயற்சியையும் கொண்ட இவர் பல போர்களை நிகழ்த்தி ஆட்சிப்பரப்பை இரு மடங் காக்கிக் கொண்டார். ஆனால் அவர் அடிக்கடி மேற்கொண்ட போர் நடவடிக்கைகளால் அரசுக் கருவூலம் செலவழிந்துவிட்டது. இந்த

இடர்ப்பாடான நிலையில் மந்திர நீர்மமாகிய புருடவேதியும் தீர்ந்து விட்டதால் தம் அண்ணனைப்போல் அதனைப் பயன்படுத்தவும் வழி இல்லை என்ற போதிலும் அவருக்கு எதிர்பாராத நற்பேறு ஏற்படச் செய்தது.

மாயமந்திரக் கலைகளில் வல்லுநரான யோகி ஒருவர் தனிமை யான ஓரிடத்தில் பலியொன்றினைத் தொடங்கினார். அது வெற்றி யுடன் நிறைவேறுவதற்குப் பலியாளாக ஒருமனிதர் தேவைப் பட்டார். ஆகவே, அவர் ஏராளமான செல்வம் தருவதாக வாக் களித்து ஓர் ஏழை ஆட்டிடையனை மயக்கி ஏமாற்றி அவனைப் பலிக் குழி உள்ள இடத்திற்கு இட்டுச்சென்று அவனைச் சீறியெழும் தீச் சுவாலையினுள் தள்ளுவதற்கு முனைந்தார். இருவரிடையேயும், நிகழ்ந்த பூசலில் ஆட்டிடையன் தப்பிப்போக யோகி தவறி அக் கினி குண்டத்தில் வீழ்ந்து சாம்பலானார். அடுத்தநாள் அதிகாலை யில் விடுப்பார்வத்தால் தூண்டப்பெற்ற ஆட்டிடையன் தன் மயி ரிழையில் உயிர் தப்பிய இடத்திற்குத் திரும்பிவந்தான். பலிக்குழி யில் ஆள் உயரத்தில் இரண்டு பொற்சிலைகள் இருப்பதைக் கண் டான். அவனால் அதனை நம்பக்கூட முடியவில்லை. இரவு வரும்வரை யிலும் அவன் பொறுமையின்றிக் காத்திருந்தான். இருள்சூழ்ந்து அமைதி நிலவியதும் தன் துணைவியையும் மக்களையும் அவ்விடத் திற்கு இட்டுச்சென்று இரண்டு சிலைகளையும் தன் குடிசைக்கு நகர்த் திச்சென்றான். அந்தச் சிலைகளினின்றும் சிறுசிறு துண்டுகளைநறுக்கி விற்றுத் தன் ஆட்டு மந்தையைப் பெருக்கியும் பிற வழிகளிலும் தன்னைச்செல்வந்தனுக்கிக்கொண்டான். முன்பில்லாத திடீரென்று காணப்பெற்ற ஆட்டிடையனின் செல்வ வளத்தின் அறிகுறிகளைப் பற்றிய செய்தி அனவோத்த வேமரின் செவிகளுக்கு எட்டவே, அவர் தம் ஆட்களை அனுப்பி ஆட்டிடையரின் குடிசையைச் சோதிக் கச்செய்தார். அவர்கள் பொற்சிலைகளைக் கண்டு அவற்றைக் கைப் பற்றினர். அதிலிருந்து அனவோத்த வேமரின் பணத்தட்டுப்பாடு பற்றிய கவலைகட்கும் ஒருமுடிவு ஏற்பட்டது.

மிகுபுகழ் வாய்ந்த முப்பது ஆண்டு ஆட்சிக்குப்பிறகு அன வோத்த வேமரும் கி.பி. 1370-இல் விண்ணுடு புக்கார். அவருடைய மகன் குமரகிரி வேமர் அந்தச் சமயத்தில் இருபத்தொரு வயது நிறையாத சிறுவராக இருந்தார். ஆகவே, அரசரின் தம்பி அன வேமர் என்பவர் பன்னிரெண்டு ஆண்டுகள் அரசாட்சி புரிந்தார். அதற்குப்பிறகு குமரகிரி வேமர் அரியணை ஏறினர். அவருடைய சிறப்பானபுகழ் எல்லாம் அவர் கவிஞர் வேமனர் என்பவரின் திருத் தந்தையார் என்பதே. மல்லம்மா என்ற அரசிமூலம் பெற்ற மூன்று ஆண் மக்களுள் வேமனரே மூன்றுவது கடைசி மகன். ஏனையோர் அனவோத்த வேமர் II அல்லது பெதகோமட்டி வேமரும் இராச்ச

வேமரும் ஆவர். ஒருவருக்குப்பின் ஒருவராக வேமனரின் இரண்டு அண்ணன்மார்களும் ஆட்சிப் பீடத்திலமர்ந்தனர். முன்னவர் கி.பி. 1396-இலும் பின்னவர் கி.பி. 1424-இலும் அரியணை ஏறினர். இராச்சவேமனர் தம்முடைய படைத்தலைவர் ஒருவரால் கொலை செய்யப்பெற்றதால் அரச மரபுக்கும் ஒருமுடிவு ஏற்பட்டது. கோமட்டி வேமரின் ஆவி முன்னறிந்து தெரிவித்தபடியே அலியா ரெட்டியின் குடும்பம் கி.பி.1328லிருந்து கி.பி.1428வரை, சரியாக நூறு ஆண்டுகள், ஆட்சி செய்தது.

கடைக்குட்டியாக இருந்தபடியாலும், மூன்று குமாரர்களுள் மிகவும் சுறுசுறுப்பாக இருந்தபடியாலும் வேமனர் பிள்ளைப்பருவத்தில் அளவற்ற அன்பு காட்டும் பெற்றோர்கள் அதிக இடங் கொடுத்து செல்லத்துடன் வளர்க்கப்பெற்றார். இந்த அளவற்ற உரிமையும் செல்லமும் அவரை முற்றிலும் கெடுத்தன. சிறுவனாக இருந்தபோது வேமனர் தான்தோன்றியாகவும் அடம் பிடிப்பவராகவும் காணப்பெற்றார். காளைப்பருவத்தில் அவருடைய முக்கிய தொழில் கன்னியர் வேட்டையாடுவதே; கன்னியர் இன்பத்தில் முரட்டுத்துணிச்சலுடன் ஆழங்கால் பட்டார். திருமணம் அவருடைய காமவெறியை மட்டுப்படுத்தும் என்று நம்பிய அவர்தம் பெற்றோர்கள் அவரைத் திருமணம்புரிந்துகொள்ளவேண்டும் என்று வற்புறுத்தினர். ஆனால் அவர் ஏதாவது ஒரு சிறு சாக்குப்போக்குச் சொல்லிப் பெற்றோர்கள் குறிப்பாகத் தெரிவிக்கும் ஒவ்வொரு சரியான மணத்துணைவியையும் மறுத்துவிட்டார். தன் பெற்றோர்களின் வயோதிக பருவத்தில் அவர் அவர்கட்குப் பல்வேறு மனத் துன்பங்களைத் தந்தார்; அவர்கள் இறந்த பிறகு அவர்மீது அவர்கள் கொண்டிருந்த சிறிதளவு கட்டுப்பாடும் அகன்றது. அவருடைய இரண்டு அண்ணன்மார்களும் அவரைத் தம் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவர இயலவில்லை. இராச்சவேமரின் துணைவியாகிய நரசமாம்பா என்ற அரசியாரிடம்மட்டிலும் அவர் சிறிதளவு மதிப்பு வைத்திருந்தார். அந்த அம்மையாரின் செல்வாக்கு தான் ஊர்சுற்றும் காமுகரைத் தத்துவக் கவிஞராக மாற்றியது.

இந்த மாற்றத்திற்குச் சற்று முன்னதாக வேமனர் ஒரு பரத்தை வீட்டில் வசித்து வந்தார். அவள் அவருடைய சத்தையும் சொத்தையும் இறுதிவரை உறிஞ்சிவிட்டாள். என்றபோதிலும் அவர் அவளுடையவஞ்சகங்களால் ஏமாற்றப்பட்டவராகவே இருந்தார்; அவளை மகிழ்விப்பதற்காக எதையும் செய்வதற்குத் தயாராக இருந்தார். ஆனால் ஒருநாள் வேமனர் தன் அண்ணியார் அரசி நரசமாம்பாவின் அணிகலன்களை யெல்லாம் கொண்டுவரின் தான் அவற்றைக் கொண்டு அணி செய்துகொள்ளலாம் என்று அவள் கேட்டபொழுது அவர் தீய இடர்ப்பாடான சிக்கலில் அகப்பட்டுக்கொண்டார்.

அந்தப் பரத்தைக்கு 'முடியாது' என்று சொல்லும் துணிவு வேம னருக்கு இல்லே; இந்த மானக்கேடான வேண்டுகோளுடன் நரசா மாம்பாவை அணுகவும் அவரால் இயலவில்லே. ஆதலால் அவர் அரண்மனேயில் இரண்டு நாட்களாக உண்ணவும் பருகவும்மறுத்து வெறுப்புக் காரணமாக பாராமுகமாயிருந்தார். பிடிவாதமான தூண்டுதல்கட்குப்பிறகு அரசி நரசமாம்பா அவருடைய பெருந் துயரின் காரணத்தை அறிந்து, தன்னுடைய மூக்குத்தியைத்தவிர எல்லா அரச அணிகலன்களேயும் அவரிடம் கொடுத்தார். உடனே வேமனர் அந்த அணிகலன்களேயெல்லாம் அப்பரத்தையிடம் கொண்டு சென்ருர். பரத்தையோ அவ்வணிகலன்களிடையே விட் டுப்போன உருப்படி இன்னதென்பதை விரைவில்அறிந்துகொண்டு அதையும் இரந்து பெற்றுவருமாறு அவரைத் திரும்பவும் அனுப்பி ஞள். சில நிபந்தனேகளின்பேரில் நரசமாம்பா அதனே அவரிடம் கொடுத்தார். எந்தக் காரணத்தை முன்னிட்டும் அதனேப் பரத் தையிடம் நேராக அளித்தல்கூடாது; ஆனுல் அதனே அவளுடைய பள்ளியறையின் வாயிற்படியான கீழ்ச்சட்டத்தில் வைத்துஅதனே அவள் பின்புறமாக வளேந்தவண்ணம் தனது உதடுகளால் கவ்வி எடுக்குமாறு செய்தல் வேண்டும். அங்ஙனம் அவள் கரணம் போட் டெடுக்கும் அருஞ்செயல்களே மேற்கொள்வதற்குமுன்னர் அவள் தன்னே நிர்வாணமாக்கிக்கொள்ளவேண்டும்; அந்நிலேயில் வேமனர் விடாமல் அவளேக் கூர்ந்து கவனித்தல் வேண்டும். அப்பரத்தை மரபினேச் சேர்ந்த பெரும்பாலான மகளிர் நாட்டியப் பாடத்தின் ஒரு பகுதியாகிய இந்த அருஞ்செயலேத் தாம் நாட்டியங் கற்கும் பொழுது கற்றுக்கொண்டிருக்கக்கூடுமாதலால், அப்பரத்தை இதனே எளிதாக ஆற்றுதல்முடியும். ஆனுல் நிர்வாண நிலேயில் அவளு டைய முறுக்கிய தசையின் காட்சி வேமனரிடம் ஒரு புரட்சிமனப் பான்மையைத் தோற்றுவித்தது; அந்தக் கணத்திலிருந்து என்றும் எல்லா இணேவிழைச்சுத் தொடர்புகளேயும் துறந்துவிடும் உறுதி யான சூளினே எடுத்துக்கொண்டார்.

வேமனர் அடைந்த அதிர்ச்சி மிக உறைப்பானது. அதனுல் அவர் மந்தமான சோர்வுடன் கூடிய உணர்வின்மை நிலேயில் ஆழ்ந்துவிட்டார். அதிலிருந்து அவரைக் கிளர்ந்தெழச் செய்வதற் காக, அரசி நரசமாம்பா அரசின் அணிகலன் செய்வோரின் பட் டறையை மேற்பார்வையிடும் பணியில் அமருமாறு பணித்தார். தன் அண்ணியாரிடம் கொண்ட மதிப்பின் காரணமாக வேமனர் விருப்பத்துடன் புதிய கடமைகளே மேற்கொண்டார். இந்நிலேயில் ஒருநாள் அபிராமன் என்ற பெயருடைய பொற்கொல்லன் காலந் தாழ்ந்து வருவதைக்கண்டார். வேமனரின் விடாப்பிடியான எச்சரிக் கைகள் யாவும் அவனிடம் பயன்பெறவில்லே. இங்ஙனம் அவன் கட் டுப்பாட்டினே மீறும் காரணத்தை வேமனர் வினவ, தன்னுடைய

சமய சம்பந்தமான கடமைகள் முக்கியமாக இருப்பதாகவும் தான் காலந்தாழ்ந்து வருவதை எல்லாக் காலத்திற்கும் மன்னிக்கமுடியா விடினும் இன்னும் சில நாட்களாவது மன்னிக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டான். இந்த உறுதியான, ஆயினும் இணக்கவணக் கமான, சாதாரண ஒரு வேலைக்காரனின் கீழ்ப்படிவதற்கான மறுப்பு வேமனரின் விடுப்பார்வத்தைத் தூண்டியது. இதனால் அவர் அதன் காரணத்தை அடியிலிருந்து காண வேண்டுமென்று உறுதிகொண்டார். அடுத்தநாள் காலையில் அவர், அபிராமனை நிழல்போல் பின்தொடர்ந்து சென்று, அவன் பொறுக்கியெடுத்த கனிவகைகளுடனும் காய்ச்சின பாலைக் கொண்டகலத்துடனும் ஒரு குகையில் நுழைவதைக் கண்ணுற்றார். ஒரு மரத்தின் பின்னால் மறைந்து நின்றுகொண்டு அபிராமன் தன்னுடைய படையற் பொருள்களை ஒரு யோகியின் திருவடிகளில் சமர்ப்பிப்பதைக் கண்டார். நீண்ட நேரம் கழித்து அந்த யோகி—இலம்பிகா சிவ யோகி என்பது அவரது திருநாமம்—தம்முடைய திருக்கண்களைத் திறந்து பின்வருமாறு சொன்னார்: ''அன்பனே, உன் பக்தியைக் கண்டு நான் அகமகிழ்ந்தேன். நாளை காலையில் நான் இவ்விடத்தை விட்டுப் புறப்படுகின்றேன். அதிகாலை தொடங்குவதற்கு முன்ன தாகவே இங்கு வந்து சேர்க. ஆன்மீகத் தீட்சையை உனக்கு வழங்குகின்றேன். மேலும் உன்னிடம் மனித எல்லைக்கு மீறிய ஆற்றல்களையும் தோற்றுமாறு செய்கின்றேன்''. இதனைச் செவி மடுத்தவுடன் வேமனர் அரண்மனைக்குத் திரும்பினார். அடுத்த நாள் காலையில் அபிராமனின்றித் தானே அந்த யோகியின் அநுக் கிரகத்தைப் பெறுபவனாக இருக்க வேண்டுமென்று உறுதிகொண் டார்.

அரண்மனைக்குத் திரும்பியதும் வேமனர் அரசி நரசமாம் பாவைத்தேடிச்சென்று அவரை அடைந்தார். அபிராமன் அரசு பட்டறையைவிட்டு அகலாது அன்றிரவு முழுவதும் தங்க வேண்டு மென்றும், அரசிக்கு அவசரத் தேவையாக இருக்கும் அணிகலன் ஒன்றினைச் செய்துமுடிக்கும் வரையில் அவன் பட்டறையை விட்டுப் போகலாகாது என்றும் ஆணை பிறப்பிக்குமாறு அரசரை ஒப்புக்கொள்ளச்செய்ய வேண்டுமென்றும், தம்முடைய உள்நோக் கத்தைப் பற்றி ஆராயக்கூடாது என்றும் அரசியைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டார். அங்ஙனமே ஆணை பிறப்பிக்கப்பெற்று அபி ராமன் அந்த யோகியின் முன்னர் செல்லுவதினின்றும் தடுக்கப் பெற்றான். அபிராமனுக்குப் பதிலாக வேமனர் அந்தநாட் காலை யில் குறிப்பிட்ட நேரத்தில் யோகியை அடைந்ததும் இலம்பிகா சிவயோகி இங்ஙனம் சொன்னார்: ''நல்லது. அந்த எளியவன் தன் வாழ்க்கையின் வாய்ப்பினை இழந்துவிட்டான். அன்பார்ந்த

இளைஞனே, நீ நற்பேறு பெற்றனை. என் முன்னே வந்து உப தேசம் பெறுவாயாக.''

ஒரு நொடிப்பொழுதில் ஒரு பழுத்த யோகியாக மாற்ற மடைந்து வேமனர் குகையை விட்டு வெளிப்போந்து நேராக அபிராமனைச் சென்றடைந்தார். அவனுக்கு முன்னால் கீழேவிழுந்து அடிபணிந்து வணங்கி அவனுடைய மன்னிப்பைக் கோரினார். கழிவிரக்கத்துடன் கன்னங்களில் கண்ணீர் ஆறாகப் பெருகிய வண்ணம், வேமனர் இவ்வாறு கூறினார்: ''அடியேன் உனக்குச் செய்த பெருந்தீங்கிற்கு ஈடாக, உன்னுடைய பெயர் என்றும் மறையாவண்ணம் செய்துவிடுகின்றேன்,'' இந்த வாக்கு நிறை வேற்றும் பாங்கில் வேமனர் தம்முடைய பாடல்களின் பல்லவி யாக அபிராமனின் பெயரை அமைத்தார்.

பெரிய யோகி நிலையில் வேமனர் இயற்கைமீறிய ஆற்றல்களை வெளிக்காட்டினார். அவர் காட்டு முலாம் பழங்களைப் பயிர் செய் தார்; அவர் அன்புடன் தன் சீடர்கட்கு வழங்கிய ஒவ்வொரு பழமும் பொன் விதைகளைக் கொண்டிருந்தது; ஆனால் அவர் தோட்டத்தினின்றும் களவாடப் பெற்ற ஒவ்வொரு பழத்திலும் புழுக்கள் நிறைந்திருக்கின்றன. சில சமயங்களில் அவர் தமக்கு விருந்தளிப்பவர்களின் இல்லங்களினுள் மலசலங்கழித்தார். அவரை அவர்கள் அருவருப்புடன் வெளியேற்றினால், அந்த மலத்தின் நாற்றம் எப்பொழுதுமே அந்த இடத்தைவிட்டு அகலாதிருந்தது; இதற்கு மாறாக அவர்கள் அந்த ஞானி குழந்தைத் தன்மையுள்ள தம் செயலால் தம்மைச் சிறப்பித்தார் என்று கருதினால் அந்த மலம் பொன்னாக மாறியது! பக்தியுடன் அவரை வரவேற்றால் அவருடைய சிறுநீரும் அங்ஙனமே திரவநிலைப் பொன்னாக மாறியது.

பகுத்தறிவுள்ள நம் மனம் தூங்கிய நிலையிலும் மலம் சிறுநீர் இவற்றின் வாடையைப் பொறுத்துக்கொள்ள முடிவதில்லை. கட்டா யத்தினால் நாம் இந்த இடத்தில் இயற்கை மீறின கட்டுக்கதை உலகினின்றும் வெளியேற வேண்டியதுதான்.

# 3. மந்தமான உறுதியற்ற விளக்குகள்

"இன்று இருள் மந்தமான உறுதியற்ற விளக்குகளால் ஒளி கொடுக்கப்பெறுகின்றன".

-ஏ. ஜி கார்டினர்

தம்முடைய வெறுமையை மறைப்பதற்காகவே கட்டுக் கதைகள் வரலாறு என்ற முகமூடியைத் தரித்துக்கொள்ளுகின்றன. ஆயினும் அந்த முகமூடி மிக மெல்லியதாக இருப்பதால் வெறுமை தெளிவாகவே புலனுகின்றது. வேமனரைப் பற்றிய கட்டுக்கதை கள் யாவும் இதற்கு எடுத்துக்காட்டாக அமைகின்றன. அவை பெருமையாக ஆண்டுக் கணக்குகளைக் காட்டுகின்றன; அவை அரசு மரபுடன் தம்மை இணைத்துக்கொள்ளுகின்றன. எனினும், அவை ஒருகணநேரமாயினும் திறந்தெரிந்து ஆய்தலுக்கு முன்னர் நிற்கமுடிகின்றதில்லை.

'வேமர்' அல்லது 'வேமனர்' என்ற பெயர் இன்று வரை யிலும் ரெட்டி வகுப்பினரிடையே நிலவும் சாதாரணப் பெயர் அல்ல. ஒரு நூற்றுண்டுக்காலம் ஆந்திர மாநிலத்தில் கடற்கரையை அடுத்த பெரும்பகுதியை ஆட்சிபுரிந்த ரெட்டி குடும்பத்தைச் சார்ந்தவர்கள் யாவரும் 'வேமர்களே'. அங்ஙனமே, நம் கவிஞரும் அப்பெயரால் வழங்கி வரலாயினர். ஆதலின், இக்கவிஞரும் அரச குடும்பத்தைச் சார்ந்த ஒருவராகவே இருத்தல் வேண்டும். அவர் அங்ஙனம் இராவிடினும், அந்தக் குடும்பத்துடன் தன்னை இணைத் துக்கொண்டதனுலேயே நேரடியாகவே அரச மதிப்பு நிலையை வழங்கி இருத்தல் வெண்டும். கவிஞருடைய பெயர் அரச குடும் பத்தைச் சார்ந்தவர்களின் பெயரைப்போலவே இருத்தல் நம்பக் கூடியதான தோற்றத்தையும் வரலாற்றுத் தன்மையையும் கொண்டு இணைப்பிற்குத் துணையாக உள்ளது. மேலும், சில ரெட்டி அரசர்கள் கவிஞர்களாகவும், புலவர்களாகவும் உரையாசிரியர் களாகவும் திகழ்ந்த செய்தி இந்த இணைப்பை உருக்குபோன்ற உறுதியான இணைப்புத் தோற்றத்தையும் அளித்துவிடுகின்றது.

ஆனல் 'கோமட்டி' என்ற பெயரடை எங்ஙனம் ரெட்டி அரசர்களில் ஒருவருடைய பெயரின் ஒரு பகுதியாக அமைந்தது?

முன்னர்க் கூறியதுபோல் 'கோமட்டி' என்ற சொல் 'வைசியர் என்ற சொல்லுக்குப் பரிணாமச்சொல்லாகும். அஃதாவது அது இந்துச்சாதிப் படிமரபில் மூன்றாவதாக இருப்பது. ரெட்டிகள் அடுத்து நிற்கும் 'சூத்திரர்' என்ற படியைச் சேர்ந்தவர்கள் ஆவர். இங்ஙனம் இருக்கும்போது ரெட்டி ஒரு கோமட்டியாக இருக்கும் தோற்றத்திற்கேற்ப ஒவ்வாத் தன்மையை எங்ஙனம் விளக்குவது? மேலும், இன்னார் என்று ஆள் அறியப்பெறாத ஒரு ரெட்டி உழவர் குடும்பத்தினர் மிக விரைவாகத் திகைப்பூட்டும் செல்வத்தையும் ஆட்சியையும் எங்ஙனம் அடைந்தனர்? இந்த இரண்டு வினாக் களையும் கட்டுக் கதைகள் தாம் விரும்பியவாறு ஒரு கோமட்டி வேமரையும் அவருடைய இரண்டு கல புருடவேதியையும் கொண்டு நிறைவு செய்துவிட்டன.

வரலாற்று அடிப்படையிலும் இலக்கிய அடிப்படையிலும் மேற்கொள்ளப்பெற்ற ஆராய்ச்சி ரெட்டி அரசர்களின் குடும்பப் பெயர் தொண்டி அல்லவென்றும், ஆனால் அது தாசட்டி என்றும்; புரோலய வேமருக்கு முன்னர் அவர் தந்தையாரின் பெயர் வேமர் என்பதாகவும்; புரோலய வேமரின் தலைநகர் கொண்டவீடு அல்ல வென்றும், ஆனால் அது அட்டங்கி என்றும்; புரோலயாவுக்குப் பின்னர், பட்டத்திற்கு வந்தவர் அனவோத்த வேமர் என்பதும்; சிலகாலம் கழித்து அட்டங்கியிலிருந்து கொண்டவீட்டிற்குத் தலைநகரை மாற்றியது புரோலய வேமரின் தம்பி அல்லர் என் பதும், ஆனால் அவர் அவருடைய திருக்குமாரர் என்பதும்; குமர கிரி வேமரை அடுத்து ஆட்சிபுரிந்த பெதகோமட்டி வேமர் என் பவர் அவருடைய குமாரர் அல்லர் என்பதும், அவர் அவருடைய சிற்றன்னையின் குமாரர் (cousin) என்பதும்; இறுதியாக அரச மரபின் இறுதி அரசராகிய இராச்சவேமர் என்பவர் பெத கோமட்டி வேமரின் தம்பி அல்லர் என்பதுமாகக் காட்டியுள்ளது. இது கட்டுக்கதைகள் கூறும் வரலாற்றிற்கு முற்றிலும் வேறுபட்ட தாகும். ''இந்த வரலாற்றுச் செய்திகள் யாவும் வேமனர் அரச மரபின் வழிவந்த இளவரசர் என்ற அறிவிப்பினை எங்ஙனம் தள்ளுபடி செய்கிறது'' என்று ஒருவர் வினவலாம். அதற்குரிய விடை மிகவும் எளிதானது. கட்டுக்கதைகள் யாவும் வேமனரைக் குமரகிரி வேமர் என்பவரின் மூன்றாவது குமாரர் என்றும் அவரே கடைக்குட்டியுமாவர் என்றும் கூறுகின்றன. இந்த அரசருக்கு மூன்று குமாரர்கள் இலர்; ஆனால் அவருக்கு ஒரே குமாரர்தான்; அவரும் இளம்பிராயத்திலேயே இறந்துவிட்டார்.

கட்டுக்கதைகளின் அடிமட்டத்தையே தகர்த்தெறிவது மிகவும் எளிதானதே; இயலாதது அன்றாயினும், வேமனரின் வர லாற்றுக்குரிய நம்பகமான செய்திகளைத் திரட்டுவதென்பது மிகச்

சிரமமான பணியாகும். சி. பி. பிரௌன் என்பவர் இந்த முயற்சியில் ஈடுபட்ட முதற் புலவராவார். மிகவும் அநுகூலமான சூழ்நிலைகளில் அவர் மிக அக்கறையுடன் முயற்சிகளை மேற்கொண்டபோதிலும்—நம்முடன் ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து, ஒருவகையில் தன் ஆய்வுகளை மேற்கொண்ட காலத்தில் ஒன்றரை நூற்றாண்டுகள் வேமனருக்குப் பக்கமாக இருந்தார் — அவரால் குறைவான அளவே பெற முடிந்தது. தான் தொகுத்து ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துக் குறிப்புகளுடன் கி. பி. 1829-இல் முதன் முதலாக வெளியிட்ட **"வேமனரின் நீதி, சமய அங்கதப் பாடல்கள்"** என்ற தலைப்பினைக் கொண்ட நூலின் நூன்முகத்தில் பிரௌன் இவ்வாறு கூறுகின்றார்:

*அவர் (வேமனர்) பிறப்பில் காப்பு அல்லது உழவர் பரம்பரையைச் சேர்ந்தவர். சிலர், சந்தனூல் (அல்லது கர்நூல்) நாட்டைச் சேர்ந்த அன வேம ரெட்டி என்ற தலைமை நிலையிலுள்ளவரின் குடும்பத்தைச் சார்ந்தவர் என்று உறுதியாகக் கூறுகின்றனர்; இந்தக் கவிஞரின் சகோதரர் கண்டிக்கோட்டை என்ற கோட்டையை ஆட்சி செய்தார் என்றும் அவர்கள் உரைக்கின்றனர். மற்றும் சிலர் சந்தநூலைச் சார்ந்த கிறிஷ்டிபாடு என்ற இடத்தைச் சார்ந்தவராக இருக்கலாம் என்றும் நம்புகின்றனர்; மேலும் சிலர் அவர் குண்டூரைச்சார்ந்த இனகொண்டாவைப் பிறப்பிடமாகக் கொண்டவர் என்றும் உரைக்கின்றனர்; ஆனால் நான் மட்டிலும் கடப்பை மாவட்டத்திலுள்ள சிட்வெல் என்ற இடத்தில் பிறந்தவர் என்று பலர் சொல்லக் கேட்டிருக்கின்றேன். ஆயினும், இந்த இடங்களிலெல்லாம் அவரைப்பற்றி உசாவி அறிவதற்கு வாய்ப்புகள் கிடைத்தன; என்றபோதிலும் நான் எத்தகைய செய்தியையும் அறியக்கூடவில்லை. எனினும், சில பாடற் பகுதிகளில் காணப் பெறும் வட்டார வழக்கு (dialect) இந்த நகரங்கள் யாவும் அமைந்திருக்கக்கூடிய தெலிங்கானாவின் தென்—மேற்குப் பகுதிகளைச் சார்ந்தவராக இருக்கலாமோ என்ற எண்ணத்தைத் தோற்றுவிக்கின்றது. நம் வரலாற்றுக் காலத்தில் அவர் பதினேழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்தவராக இருக்கலாம் என நம்பப் பெறுகின்றது.*

ஆனால் பிரௌன் தயாரித்து வெளியிடாத மொழிபெயர்ப்பு பாடல்களைக்கொண்ட பெரியதொகுதி ஒன்றில்,* அவர் கருத்து

---

*இது 1967-இல் ஆந்திர மாநில சாகித்திய அகாடமியாரால் (ஐதராபாத்) வெளியிடப்பெற்றுள்ளது. இதில் 1215 பாடல்கள் அவற்றின் ஆங்கில மொழி பெயர்ப்புடன் காணப் பெறுகின்றன.

இன்னும் மிகத் திட்டமாக உள்ளது. இதில் அவர் கண்டிக்கோட்டை என்ற இடத்திற்கருகில் வேமனர் பிறந்தார் என்பதைத் தான் நம்புவதாகச் சொல்லும் அளவுக்குத் தன்னை உட்படுத்திக்கொள்ளுகின்றார். மேலும் அவர் வேமனரின் பாடல்களின் சில அகச்சான்றுகளின் அடிப்படையில் வேமனர் பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் எழுதினார் என்றும், அவர் பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதிவரையில் வாழ்ந்தார் என்றும் முடிவுக்கு வரலாம் என்று நிலை நிறுத்துகின்றார். இங்கு நாம் வேமனரின் காலத்தினைப்பற்றிய தம் உறுதியான கருத்தினைப் பிரௌன் ஓரளவு மாற்றிக்கொண்டார் என்பதைக் காணமுடிகின்றது.

ஆனால், மீண்டும் பிரௌன் தம் கருத்தில் தடுமாறி வேமனரைப் பதினைந்தாம் நூற்றாண்டினைச் சார்ந்தவர் எனக்கொள்ளுகின்றார். **"வேமனரின் நீதி, சமய, அங்கதப் பாடல்கள்"** என்ற தொகுப்பு நூலின் இரண்டாம் பதிப்பினைக் கி. பி. 1839-இல் வெளியிட்டார். அதன்படிகள் கிடைப்பதற்கரியனவாக உள்ளன; ஆந்திர மாநிலத்தில் தனியார் பொறுப்பிலும் அரசின் பொறுப்பிலுமுள்ள எந்த நூலகத்திலும் ஒருபடிகூடக் கிடைக்கவில்லை. ஆனால் மேஜர் மேக்டனால்டு என்பவரின்மூலம் அதனைப்பற்றிய சில விவரங்களைச் சேகரிக்க முடிகின்றது. மேக்டனால்டு கூறுகின்றார்: ''இந்தப் பதிப்பில் மொழிபெயர்ப்பும் குறிப்புகளும் நீக்கப்பெற்றுள்ளன; ஆனால் சமய, நீதி பற்றிய பகுதிகளில் அதிகமான பாடல்கள் சேர்க்கப்பெற்றுள்ளன''. முதல் பதிப்பில் 693 பாடல்களே இருக்க, இரண்டாம் பதிப்பில் 1,163 பாடல்கள் உள்ளன. மேலும் மேக்டனால்டு கூறுவதாவது: ''அவருடைய இரண்டாம் பதிப்பில் வேமனரின் பாடல்கள் நான்கு நூற்றாண்டுகட்கு முற்பட்டவை என்ற பொதுவான நம்பிக்கை நிலவுகின்றதாகவும், தெலுங்கிலுள்ள **பசவபுராணத்தின்** ஆசிரியரும் இவரும் சமகாலத்தில் வாழ்ந்தவர் என்று ஜங்கமர்கள் கூறுவது சரியாக இருப்பின், இஃது அவருடைய காலத்தை இன்னும் முன்னுக்குக் கொண்டு செல்லுகின்றதாகவும் பிரௌன் கூறுகின்றார்.'' ஆகவே பிரௌனின் முதல் தற்காலிகக் கோட்பாட்டின்படி வேமனர் ஆங்கில எழுத்தாளராகிய பேக்கன், ஆங்கில நாடக ஆசிரியரான செகப்பிரியர் இவர்களின் கிட்டத்தட்ட ஒரே காலத்தவராகின்றார்; அவருடைய இரண்டாம் கோட்பாட்டின்படி மற்றொரு ஆங்கில எழுத்தாளராகிய சாசரின் காலத்தவராகின்றார். இந்த இரண்டு தற்காலிகக் கோட்பாடுகளையும் ஒப்புக்கொள்ளாது, மேக்டனால்டு தான் தனியாக மேற்கொண்ட ஆராய்ச்சிகளின் அடிப்படையில், வேமனர் பதினேழாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் பிறந்தவர் என்பதை நிலைநிறுத்துகின்றார்.

கோவர் என்பாரும் வேமனரின் காலத்தைப் பற்றிய தன் சொந்தக் கொள்கைகளைக் கொண்டுள்ளார். அவர் கூறுகின்றார்:

இஸ்லாம் சமயத்தைப்பற்றியும் முஸ்லிம் ஆட்சியைப் பற்றியும் குறிப்புகள் இல்லாமையும் பத்தாம் நூற்றுண்டிலும் அதற்கு அண்மையிலுமான காலத்திலிருந்த தமிழ்க் கவிஞர்கள் கையாண்ட பொருளையும் அவர்தம் நடையையும் கிட்டத்தட்ட ஒத்துள்ளமையும் வேமனர் வாழ்ந்த சரியான காலம் பன்னிரெண்டாம் நூற்றுண்டிற்குப் பின்னதாக இருத்தல் முடியாது என்று குறிப்பாக அறிவிக்கச் செய்கின்றன.

பிரௌன் வெளியிட்ட வேமனரின் கவிதைத் தொகுப்பின் இரண்டாம் பதிப்பைக் கோவர் பார்த்திருந்தால் தான்கொண்ட கொள்கைக்குப் பிரௌனின் ஆதரவையும் உரிமையாகக் கொண்டிருந்திருப்பார். அங்ஙனம் இருந்தபோதிலும் அவர் ''இஸ்லாமைப் பற்றியும் முஸ்லீம்களின் ஆட்சியைப் பற்றியும்'' குறிப்பிடவில்லை என்று கூறுவது தவறுகும். உண்மையில் வேமனரின் பாடல்களில் குறைந்தபட்சம் முஸ்லீம்களைப் பற்றிய மூன்று மேற்கோள்கள் உள்ளன.

கோவரைப் போலன்றி கேம்பெல் என்பார் ஒருவகையில் தெளிவில்லாதிருப்பினும் மேக்டனலுடன் பொதுவாக இணக்கமாகக் காணப்பெறுகின்றார். அவரும் வேமனரைக் கிட்டத்தட்ட பதினைரும் நூற்றுண்டின் நடுப்பகுதியைச் சார்ந்தவராகவே கருதுகின்றார். அவர் கூறுகின்றார்: ''வேமனர் கிட்டத்தட்ட 250 ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்தார் என்று பொதுவாக நம்பப் பெறுகின்றது.'' அவர் வேமனரின் பிறப்பிடத்தைக் குறித்து மிக உறுதியுடன் உள்ளார். அவர் கூறுவதாவது:

பல்வேறு இடங்கள் அவருடைய பிறப்பின் பெருமையை உரிமை கொண்டாடுகின்றன; ஆனால் சென்னைக்கு வடமேற்கில் 200 மைல் தொலைவிலுள்ளதும் கடப்பை மாவட்டத்தின் எல்லைக்குட்பட்டதுமான அடர்ந்த மலைப்பாங்கான பகுதியின் ஓரிடத்தில் அவர் பிறந்திருக்கவேண்டும் என்று சொல்வதைத் தவிர வேறு ஒரு திட்டமான முடிவுக்கு வருதல் இயலாது என்று யான் கருதுகின்றேன். கடப்பையும் சற்று வடபாலுள்ள கர்நூலும் அவர் வாழ்க்கை முழுவதும் செய்த பணியின் இடங்களாகும் என்பதற்கு யாதொரு ஐயமும் இல்லை. கடப்பை மாவட்டத்தின் புறக்கோடியின் தென்மேற்கிலுள்ள காட்டாரப் பள்ளி என்ற ஒரு சிற்றூரே அவரது பிறப்பிடமாகும் என்றும், அங்கு ஒரு குடும்பம் காணப்படுவது உறுதி என்றும், அக்குடும்பத்தைச் சார்ந்தவர்கள் தம்மை வேமனரின் மரபு வழியின

ராக உரிமை கொண்டாடுகின்றனர் என்றும், கவிஞரைச் சிறப்பிக்க விரும்புவோரிடமிருந்து அவர்கள் நன்கொடைப் பொருள்களைப் பெற்று வருகின்றனர் என்றும் உள்நாட்டு மரபு வழக்கொன்று கூறுகின்றது.

கேம்பெல் வருந்தியுழைக்கும் ஓர் ஆராய்ச்சியாளர். வேமனர் தமது இறுதி நாட்களைக் காட்டாரப் பள்ளியில் கழித்து அங்கேயே இறந்ததாக மரபு வழியாக அறியக்கிடப்பதால், அவர் அந்தச் சிற்றூருக்குச் சென்றார். அங்கு வேமனரினுடையது என்று கூறப் பெற்ற ஒரு கல்லறையைக் கண்டார்; வேமனரின் நேர்வழி வந்தவர் என்று உரிமை கொண்டாடி அக்கல்லறையைப் பாதுகாத்துவரும் ஒருவரைக் கண்டு பேசினார். வேமனரின் ''அச்சம்தரும் மரத்தா லான திருமேனி'' யொன்றினைக் கொண்ட கோயிலொன்று அக்கல்லறையின் அருகில் இருப்பதைக் கண்ணுற்றார். ''வேமனரே தங்கள் கடவுள் என்றும், அவர் ஒருவரையே தாம் வழிபடுவ தாகவும் உறுதியாகக் கூறின மக்களைக்'' கண்டார். காட்டாரப் பள்ளியினின்று திரும்பினவுடன் தான் கண்டவற்றையும் கேட்ட வற்றையும் அழகிய உரைநடையில் அமைத்தார்.

காம்பெல்லின் கவனத்திற்குக் கொண்டு வராவிடினும் வேம னரைத் தம் முன்னோர் என்று உரிமை கொண்டாடும் காட்டாரப் பள்ளிக் குடும்பத்தின் வசம் **'வேமன சரித்திரமு'** என்ற வரலாற்று நூல் ஒன்று உள்ளது. அது மிகவும் சேதமடைந்த நிலையிலுள்ள ஓலைச் சுவடிக் கையெழுத்துப்படியாகும். அதன் ஒரே ஒரு மற்றொரு படி காக்கி நாடாவிலுள்ள ஆந்திர சரசுவதி பரிஷத்தின் தொகுப்பி லுள்ளது. அதனைச் சோதித்துப் பார்க்கையில் இந்த **'வேமன சரித்திரமு'** என்ற நூல் மிகப் பிற்காலத்தில், அதாவது கி. பி. 1845-இல், ஒன்று சேர்த்துவைக்கப்பெற்றிருந்தது. **'வேமன யோகீந் திர சரித்திரமு'** என்ற நூலில் திரட்டிவைக்கப்பெற்றிருப்பதை விட முட்டாள்தனமானவையும் நம்பத்தகாதவையுமான பல கட்டுக் கதைகள் இந்த நூலில் நிறைந்து கிடக்கின்றன. மேலும் இதில் அடங்கியுள்ள சில வரலாற்றுச் செய்திகளும் துங்கவேமர் என்று வழங்கப்பெறும் மற்றொரு வேமரைப் பற்றியவையாகும். உண்மை யிலேயே, துங்கவேமரால் புனையப்பெற்ற நூற்றுக்கு மேற்பட்ட பாடல்கள் அது தன்னகத்தே கொண்டுள்ளது.

வேறு மேற்கத்திய புலவர்கட்குப் பின்னர் எழுதும் கிரியர் ஸன் என்பார் வேமனர் பதினாறும் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்று கூறுகின்றார். மற்றையோருடையவற்றைப் போலவே, இவரது கூற்றும் செவியறி தகவல்களையே அடிப்படையாகக் கொண்டதாகும்.

வேமனரைப்பற்றித் தம் ஆய்வு மனத்தைச் செலுத்திய முதல் தெலுங்கு ஆராய்ச்சிப் புலவர் கே. வி. இலக்குமணராவ் என்பவராகும். ஆந்திரத்தில் வரலாற்றுத் துறையிலும் இலக்கியத் துறையிலும் ஆராய்ச்சி முன்னவராக இருந்தவர் இவர்தான் என்று சொல்லலாம். இவர் காட்டிய நெறியைப் பின்பற்றி மற்றும் சிலரும் வேமனரைப்பற்றி அக்கறை கொண்டனர். இவர்களுள் வங்கூரி சுப்பாராவ், இராலபள்ளி அனந்தகிருஷ்ணசர்மா, சேஷாத்திரி ரமணகவுலு என்ற இரட்டைக் கவிஞர்கள், வேட்டூரி பிரபாகர சாஸ்திரி, பண்டாருதம்மய்யா, சங்கந்தி சேஷய்யா, வேதம் வேங்கடகிருஷ்ண சர்மா ஆகியோர் குறிப்பிடத்தக்கவர் கள். இவர்கள் எல்லோருமே தம்மால் இயன்றதை மிக நன்முகச் செய்தனர்; ஆனுல் வேமனரின் வாழ்க்கை வரலாற்றினைச் சூழ்ந் துள்ள இருட்படலத்தைப் போக்குவதற்கு அவர்கள் ஏற்றிய விளக்குகள் "மந்தமாகவும் நம்பமுடியாதவையாகவும்" இருந்தன. அவர்கள் தமக்குள் வேமனரை ஆந்திரம் முழுவதிலும் பிறந்தவ ராகவும் பதினைந்தாவது முதல் பதினெட்டாவது நூற்றுண்டுகளில் ஒவ்வொரு நூற்றுண்டிலும் இருந்தவராகவும் செய்தனர்!

இதுகாறும் வேமனரைப்பற்றிப் பகுத்தறிவுப் பாங்குடனும் அறிவியல் மனப்பான்மையுடனும் விரிவாக ஆராய்ச்சிசெய்த தெலுங்குப் புலவர்கள் வங்கூரி சுப்பாராவ் இராலபள்ளி அனந்த கிருஷ்ணசர்மா ஆகிய இருவர் ஆவர். இவர்களுள் முன்னர்க் குறிப்பிட்டவர் ஆராய்ச்சியுடன் பொருந்திய வேமனரின் வாழ்க்கை வரலாற்றைக் கி. பி. 1922இல் வெளியிட்டார்; பின்னர்க் குறிப் பிட்டவர் "சர் இரகுபதி வேங்கட்டரத்தினம் அறக்கட்டளைச் சொற்பொழிவுகளு"க்குரிய பொருளாக வேமனரைத் தேர்ந் தெடுத்துக் கி. பி. 1928இல் ஆந்திரப் பல்கலைக்கழகத்தின் ஆதர வின்கீழ் அப்பொழிவுகளை ஆற்றினுர். வேமனரைப்பற்றி எல்லா எழுத்தாளர்களுள் இந்த இரண்டுபேர்கள்தாம் பல்வேறு செய்தி களில், குறிப்பாக வேமனரின் காலத்தைப்பற்றியவற்றில், அறிவுக் கூர்மையுடன் மோதிக் கொள்ளுகின்றனர்!

வங்கூரியாரின் கருத்துப்படி வேமனர் பதினைந்தாவது நூற் ருண்டின் முற்பகுதியில் பிறந்தவர். அவர் சீநாதருக்கு இளையவர் களாக அவர் காலத்தில் வாழ்ந்தவர்களுள் ஒருவராவார். தம் முடைய முடிவுகளுக்கு இலக்குமணராவின் ஆதரவை உரிமையாகக் கொள்ளுகின்ருர் வங்கூரியார். வேறு இடைக்காலப் புலவர்கள் வேமனரைப்பற்றிக் காட்டியுள்ள சில மேற்கோள்களை இவர் அதிக மாகப் பயன்படுத்துகின்ருர். இந்தச் சான்று அதிகமாக ஆதரவு அளிப்பதாக இல்லை. நாம் ஏற்கெனவே பார்த்தவாறு இந்த நூற் ருண்டின் இரண்டாவது பத்தாண்டின் இடையிலிருந்துதான்

வேமனர் தெலுங்குப் புலவர் உலகத்தின் கவனத்திற்குக் கொண்டு வரப்பெற்றிருக்கின்றார்; தொடக்கக்காலத்தில் அவர் புறக்கணிக்கப் பெற்றார்; அல்லது அவர் ஒரு கவிஞரே அல்லர் என்று விலக்கப் பெற்றார். இந்த நிலைமையின் காரணமாக எந்த ஒரு பழங்காலக் கவிஞரோ, அல்லது மிகக் குறைவான நிலையில், துரகராமகவி, எடப்பாடி எர்ரப்பிரகடா போன்ற புலமைசான்ற கவிஞர்களுமோ எண்ணம் உருவாக்குமுறையில் வேமனரைப் பற்றி நன்மதிப்புடன் குறிப்பிடவில்லை. தம்முடைய பெயரில் 'வேமா' என்பதை ஒரு பகுதியாகக் கொண்டு கொண்டவீடு இராஜமகேந்திரபுரம் ஆகிய பகுதிகளை ஆண்ட ரெட்டி அரசர்கள் புலவர்களைப் போற்றும் புர வர்களாகத் திகழ்ந்தனர்; அவர்களுள் சிலர் தம்முடைய உரிமை யால் புகழ் மிக்க புலவர்களாகவும் கவிஞர்களாகவும் விளங்கினர். எந்த ஒரு இடைக்கால இலக்கியத்திலும் எந்த ஒரு **பூர்வ கவித்துதி யிலும்** (முற்காலப் புலவர்களைப் போற்றும் துதிப்பாடல்கள்) ''வேமரைப்''பற்றிய குறிப்பு அநேகமாக இந்த அரசர் மரபைச் சார்ந்த புலவர்கள், கவிஞர்கள் ஆகிய ஒருவரைப்பற்றிய குறிப் பாகவே இருக்கும்.

வேமனரின் காலத்தைப் பின்னால் தள்ளுவதற்கு வங்கூரி யார் பிடிவாதமான முயற்சியை மேற்கொள்ளுதலையும் இரால்ல பள்ளியாரிடம் அதனை முன்னுக்குத் தள்ளும் முனைப்பான போக் கினையும் காணலாம். இரால்லபள்ளியாரின் கருத்துப்படி வேமனர் பதினெட்டாவது நூற்றுண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவராதல் வேண்டும். மறுக்க முடியாத சான்றின்மையால் பிடிவாதமாக இருப்பது துடுக்கான செயலாகும்; அவருடைய பிறப்பு பற்றியும் (1652) அவருடைய இறப்பு பற்றியுமான (பதினெட்டாம் நூற் றுண்டின் முதல் இருபதாண்டுகள்) தம்முடைய தொடக்கக் கால வெளியீடுகளில் பிரௌன் அவர்கள் கொண்ட காலக் குறிப்புகள் சரியானவையாக இருக்கலாம்.

வேமனரின் பிறப்பிடத்தைப் பற்றிய விஷயத்தில் வேமனரின் பாடல்களில் காணப்பெறும் அகச்சான்றுகளை அடிப்படையாகக் கொண்டு வங்கூரியார் அவர் பிறப்பிடம் கொண்ட வீடு என்று சட்டென்று முடிவுகட்டுகின்றார்; ஆனால் இரால்லபள்ளியாரோ மாறுபட்ட சான்றினைக் காணும்வரை கொண்டவீட்டினைக் கவிஞ ரின் பிறப்பிடமாக ஒப்புக்கொள்ளலாம் என்று இணங்குகின்றார். விரிந்த நிலையில் மாறுபாடுகள் இல்லாத ஆயப்படும் பொருள் இஃது ஒன்றேயாகும். ஆனால் வேமனர் கொண்ட வீடு என்னும் இடத்தில் தமது தொடக்கக் கால வாழ்க்கையைக் கழித்தார் என்றும், ஆனால் அவர் மூகசிந்தப் பள்ளியில் பிறந்தார் என்றும் சிலர் கருதுகின்றனர். வேமனர் சிறு குழந்தையாக இருக்கும்

பொழுது அவர்தம் பெற்ருேர்கள் கொண்டவீடு என்னும் இடத்திற்குக் குடியேறினர் என்பது அவர்கள் கொண்டுள்ள கருத்தாகும். இந்த வாதத்தை நீளவிடாமல் செய்யக் கருதும் இரால்லபள்ளியார் வேமனர் எங்குப் பிறந்தாலும் அவர் தம்முடைய வாழ்நாளின் சிறந்த பகுதியை 'இராயர்சீமை' எனக் கருதப்பெறும் கடப்பை கர்நூல் என்ற மாவட்டங்களிலேயே கழித்தார் என்று கூறுகின்ருர்.

அதிக வாதத்திற்கிடமான மற்ருெரு முக்கியமான செய்தி அவருடைய சாதியைப் பற்றியதாகும். வேமனர் காப்பு மரபினர் என்கின்ருர் இரால்லபள்ளியார். அதற்கு மாருக வங்கூரியார் வேமனர் ரெட்டி வகுப்பைச் சார்ந்தவர் என்று உறுதிப்படுத்துகின்ருர். இருவருமே வேமனரைச் சான்ருேராகக் கொள்ளுகின்றனர். வேமனர் இருவருக்குமே சம அளவில் கடமைப்பட்டவராகின்ருர்; ஒருதடவை தன்னைக் காப்பு என்பதாகக் கூறிக்கொள்ளுகின்ருர்; பிறிதொரு தடவையில் தம்மை ரெட்டி என்றே மொழிகின்ருர். ஒரு சமயம் காப்பு ஆகவும் பிறிதொரு சமயம் ரெட்டியாகவும் இருப்பதால் வேமனர் ஐயப்பாட்டுக்கு இடமானவராக அமையவில்லை. அண்மைக்காலம் வரையிலும், உண்மையில் இந்த நூற்ருண்டின் தொடக்கக் காலம் வரையிலும், 'காப்பு', 'ரெட்டி' என்ற சொற்களும் ஒன்றற்கொன்ருகப் பரிமாற்றம் செய்யக் கூடியனவாக இருந்தன. எடுத்துக்காட்டாக, எட்கார் தர்ஸ்டன் என்பாரால் எழுதப்பெற்றுக் கி. பி. 1919-இல் வெளியான **"தென்னிந்தியச் சாதிகளும் குலங்களும்"** என்ற நூலில் 'ரெட்டி, என்ற பிரிவிற்குத் தனியான பதிவு செய்த குறிப்பு இல்லை; 'காப்பு' என்ற சொல்லுக்குக் கீழே அந்நூல் ரெட்டிகளைப் பற்றிய மரபுப் பண்பு வரலாறு, பழக்கங்கள், வழக்கங்கள் ஆகியவைபற்றிய ஒரு நீண்ட கட்டுரையைக் கொண்டுள்ளது. அது 'காப்பு', 'ரெட்டி' என்ற சொற்களை ஒரு பொருட் பன்மொழியாகப் (synonym) பயன்படுத்து கின்றது. பிரௌன் தொகுத்த **'தெலுங்கு-ஆங்கில அகராதி'** யில் 'காப்பு' என்ற சொல்லுக்குக் 'குத்தகை எடுத்தவர்', 'உழவர்' 'பயிர்செய்வோர்', 'நாட்டுப்புறத்துக்குரியவர்', 'பட்டிக்காட்டார்', 'குடியாள்', 'ஆள்', 'குடியிருப்போர்' என்ற பொருள்கள் காட்டப்பெற்றுள்ளன. இந்த எல்லாப் பொருள்களுள்ளும் 'உழவர்' என்ற பொருளே பொதுவில் அதிகமாகப் பயன்படுத்தப்பெற்றுள்ளது. புழக்கத்தில் 'உழவர்' என்ற பொருளில் அதிகமாகப் பயன்படுத்தப்பெறும் 'ரய்த்து' என்ற சொல் தெலுங்குச் சொல்லே அன்று; அது 'ரையத்' என்ற உருதுச்சொல் சிறிது எழுத்து மாற்றத்துடன் காணப்பெறுவதாகும். மிக அண்மைக்காலத்தில்தான் 'காப்பு' என்ற சொல் தனியான ஒதுங்கிய பொருளில் இல்லாவிடினும், சாதியைக் குறிக்கும் சொற்

பண்பில் முனைப்பாகப் பயன்படுத்தப் பெற்றுள்ளது. ஆகவே, நாம் வேமனரைக் காப்பு என்றும் சொல்லலாம்; ரெட்டி என்றும் குறிப்பிடலாம். என்றபோதிலும், தெளிவாகவும் விவரமாகவும் உள்ள கூற்று வற்புறுத்தப்பெற்ருல் அவரை ஒரு 'ரெட்டி—காப்பு' என்று சொல்லி வைக்கலாம். அதாவது வாழ்க்கைத் தொழிலில் உழவராக உள்ள ரெட்டி என்பது இதன் பொருளாகும்.

மேலும், வங்கூரியாரும் இரால்லப்பள்ளியாரும் வேமனர் இறந்த இடத்தைக் குறித்து மாறுபட்ட கருத்துகளைக் கொண்டுள்ளனர். வேமனர் தம்முடைய இறுதி நாட்களைக் காட்டாரப் பள்ளி என்ற இடத்தில் கழித்து அங்கேயே மரித்தார் என்று வங்கூரியார் கருதுகின்ருர். இதனை அவர் மிகத் தெளிவாகவும் விவரமாகவும் கூருவிடினும் காட்டாரப்பள்ளியிலுள்ள கல்லறை உண்மையிலேயே வேமனருடையது எனக் கருதுவதாகத் தெரிகின்றது. இந்தச் செய்தியைக் குறித்து இரால்லபள்ளியார் தீராத ஐயங்களைக் கொண்டுள்ளார். கேம்பெல்லைப் போலவே, இவரும் ஒருமுறை காட்டாரப்பள்ளிக்குச் சென்றிருந்தார். வேமனரைப் பற்றித் தம்முடைய ஆந்திரப் பல்கலைக்கழகச் சொற்பொழிவுகளுக்குப் பொருள் திரட்ட நேர்ந்தபொழுது நாற்பதாண்டுகட்கு முன்னர் இச்செயல் நிகழ்ந்தது. அப்பொழுது காட்டாரப்பள்ளியில் அர்ச்சகராக இருந்தவர் கோயிலும் கல்லறையும் வேமன கவியுடன் போலியான தொடர்பு கொண்டுள்ளதை ஒப்புக்கொண்டதாக இரால்லபள்ளியார் கூறுகின்ருர். ஆகவே, வேமனர் காட்டாரப்பள்ளியில் இறக்கவில்லை என்றும் அவர் இராயர்சீமையில் பிறிதோர் இடத்தில் இறந்திருக்கவேண்டும் என்றும் இரால்லபள்ளியார் தம் கொள்கையை நிலைநிறுத்துகின்ருர். குறிப்பான ஒப்புதலுடன், வேமனர் ஆதிசங்கரரைப் போலவே ஒரு குகையினுள் புகுந்து தமது உலக வாழ்க்கையை முடித்துக்கொண்டார் என்று காலஞ்சென்ற வேடூரி பிரபாகர சாஸ்திரி தன்னிடம் கூறியதாகவுள்ள ஒரு மரபு வழக்கினைச் சுட்டுகின்ருர் அவர். வேமனரின் சீடர்களுள் ஒரு பகுதியினர் இந்தக் குகை கடப்பை மாவட்டத்திலுள்ள பாமூர் என்ற சிற்றூரிலிருப்பதாகக் கூறுகின்றனர்.

இவையும் இவைபோன்ற பிற ஆய்படு பொருள்களும் இன்னும் தீவிரமாக வாதிடப் பெறுகின்றன. ஆராய்ச்சிப் புலவர்கள் சிறுசிறு குழுக்களாக இருந்து வாதிட்டுக் களைத்துப்போகும் வரையில் இந்த வாதத்திற்கு ஒருவித முடிவும் இருத்தல் முடியாது.

# 4. "அவர் ஒரு மனிதர்"

**அவரொருநற் பண்புடையார்; தகவுறுமச் சான்ருேர்**
**ஆற்றுபணி யனைத்திலுமிவ் வேற்றமறிந் திடலாம்**
**அவரைப்போல் மாண்புடைய மனிதர்களை யுலகத்**
**தன்புடனே தேடுகின்றேன்; காணவில்லை, அம்மா!**
**—செகப்பிரியர்**

ஓர் ஒழுங்கான வாழ்க்கை வரலாற்று ஆசிரியருக்கு இன்றி யமையாதவையாக இருக்கும் பிறந்தநாள், பிறந்த இடம், தந்தை யார் பெயர், அன்னையார் பெயர் போன்ற செய்திகளில் தெளிவாக வழிகண்டுவிட்டால் வேமனரின் பாடல்களில் காணப்பெறும் அகச் சான்றுகளை அடிப்படையாகக் கொண்டு அவருடைய வாழ்க்கை வரலாற்றினைச் சீராக அமைத்துவிடமுடியும். அவர் வாழ்க்கை யைப்பற்றிக் கூறும் கவிஞர். அவர் வாழ்க்கையை நேரடியாகக் கண்டவர். அவர் வாழ்க்கையைப் பற்றி வேடிக்கையாகப் பேசினுர்; கேலி செய்தார்; வாழ்க்கையைக் கண்டு இகழ்ச்சியாகச் சிரித் தார்; அதனேடும் அதனைப் பற்றியும் எள்ளி நகையாடினுர். அவர் வாழ்க்கையைக் கண்டு பெருமூச்சுவிட்டார்; அதில் துன்பப்பட் டார்; அதனைக் கண்டு அழவும் செய்தார். அவர் வாழ்க்கையுடன் போரிட்டார்; அதில் சில சமயம் வெற்றியடைந்தார்; சில சமயம் தோல்வியும் உற்ருர்; ஆனுல், எல்லாக் காலங்களிலும் ஒவ்வொரு நிலையிலும் வாழ்க்கையில் மகிழ்ச்சியடையவும் செய்தார். அவ ருக்கு வாழ்க்கை ஒரு சத்திய சோதனையாகவும் ஒரு புதிய கண்டுபிடிப்பின் நெடும் பயணமாகவும் இருந்தது. வேமனர் வாழ்க் கையில் மிக ஆவலாகவும் மிக விரிவாகவும் இடைவிடாமல் ஊசலாடியதால், அவர் வாழ்க்கையையும் தம்முடைய வாழ்க் கையையும் பொதுவான வாழ்க்கையையும் கவிதையில் அமைத்துக் காட்டினுர். ஓரிடத்தில் மாதிரியாக அமைந்துள்ள சொற்ருெட ரிலும், பிறிதோரிடத்தில் புலப்படச்செய்யும் கருத்திலும், வேருே ரிடத்தில் தனிப்பட்ட இயல்புடனுள்ள ஒப்புமையிலும் கணநேரத் தோற்றமாக அவருடைய வாழ்க்கையைக் காணலாம். அதனை நாம் அவருடைய அன்புக்குரிய தப்பெண்ணங்களிலும் வெளிப்படை யாக உள்ள உயர்வெண்ணங்களிலும் பார்க்கலாம். அவருடைய விருப்புகளிலிருந்தும், வெறுப்புகளிலிருந்தும், கடுந்துயரிலிருந்

தும் அதனை ஒன்ருக இணைத்துக்காணலாம். நம்முடைய கண்களை அகட்டியும், மனத்தை விழிப்பாகவும் வைத்துக்கொண்டு வரிகளுக் கிடையிலும் கருத்தினைக் காணும் நோக்குடன் இருத்தல் வேண்டும். இதனை மட்டிலும் நாம் மேற்கொண்டால் தம்மை உணர்த்திக் காட்டும் பெருங்கவிஞர்களுள் இவரும் ஒருவர் என்பதைக் கண்டறியலாம்.

தம்முடைய பாடல்களின் வாயிலாகத் தம்மைக் காட்டும் பொழுது வேமனர் ஓர் அரச குடும்பத்தின்வழி வந்தவரல்லர் என்பது புலனுகும். அவருடைய வாழ்க்கையின் பின்னணியில் தெளிவற்றுத் தோன்றுவது அரண்மனை அன்று என்பதையும் ஆனல் அது ஒரு பண்ணையேயாகும் என்பதையும் அறியலாம். அதுவும் ஒரு பெரிய பண்ணை அன்று எப்பதையும், ஆனல் ஒரு குடும்பத்தை நேர்மையான வாழ்க்கை நலத்துடன் வைக்கக்கூடிய அளவுக்குப் பெரிது என்பதையும் தெளியலாம். சற்றே ஒரு சிறிது கவனக்குறைவான பள்ளி வாழ்விற்குப் பிறகு வேமனர் பண்ணை அலுவல்களில் தம் தந்தையாருக்குத் துணைபுரியத் தொடங்குகின் ருர். ஒவ்வொரு நாள் காலையிலும் தம்முடைய பசுக்களையும் எருமை களையும் புல்வெளிக்கு ஓட்டிச் செல்வார்; மாலையில் அவற்றைத் திருப்பி ஓட்டிவருவார். ஏர்பிடிப்பதிலும், விதைப்பதிலும், களை நீக்குவதிலும் அவர் கைகொடுத்து உதவுவார். உயர்நிலையில் உட் காரும் இடத்தில் கையில் கவணுடன் நின்றுகொண்டு முற்றிவரும் கதிர்களைச் சூழும் பறவைகளை வெருட்டுவார். அறுவடையிலும் சூடடிப்பதிலும் மணிகளைத்தூற்றிப் பிரிப்பதிலும் அவர் உதவு வார். பருவ விளைபொருள்களை வீட்டிற்கு ஏற்றிவரும் மாட்டு வண்டியில் வண்டியோட்டி அமரும் இடத்தில் பெருமிதத்துடன் அமர்ந்துகொள்வார். தனக்கிடப்பெறும் பணி எதுவாக இருப் பினும் அதனை மகிழ்ச்சியுடன் செய்வார். பணியில் ஈடுபட்டிருக் கும்பொழுது பாடுவார். நாட்டுப் பாடல்களில் மேம்பட்டுத் திகழ் வார். திறந்த வெளி நாடகத்தையோ பாவைக்கூத்தையோ பார்ப்பதையும் ஊர்த்திருக்கோயிலில் நடைபெறும் இராமாயண —மகாபாரத சொற்பொழிவுகளைக் கேட்பதையும் எப்பொழுதும் அவர் தவறவிடுவதே இல்லை. அந்த இரண்டு பெருங் காப்பியங் கள் முழுவதும் அவருக்கு மனப்பாடமாய் இருந்தது.

அனைத்தையும்விட தம்முடைய வயது எல்லையை எட்டும் துடுக்கும் மிடுக்குமுடைய இளைஞர்களின் குழுவே வேமனருக்கு மட்டற்ற மகிழ்ச்சியைத் தந்தது. சில சமயங்களில் அவர் களுடைய விளையாட்டுகள் அமைத்தல், ஊர்க்குளத்தில் நீச்ச மடித்தல், அண்மையிலுள்ள குன்றுகட்கும் பள்ளத்தாக்குகட்கும் சுற்றுலாக்கள் ஏற்பாடு செய்தல் போன்ற செயல்களால் தம்

முடைய பண்ணை அலுவல்களைச் சோரவிடவும் செய்வார். உயர் வருணத்தார்களின் பகட்டான போலித்தனச் செயல்களை வெறுத்து எல்லோருடனும் எளிதாகக் கலந்து பழகுவார். பறவைகள் விலங்குகள் இவற்றின்மீது பற்று மீதூர்ந்து நிற்கிறார். பறவைகளில் காக்கையும் கூகையும் (ஆந்தை) விலங்குகளில் நாயும் பன்றியும் கழுதையும் அவருக்குப் பிடிக்காதவை. பேச்சில் கள்ளமற்றும் முடிவெடுப்பதில் சட்டென்றும் செயலில் துணிவு கொண்டும் வெளிச்செயல்களில் கருத்துடையவராகத் திகழ்வார். தன்னைப் பிறர் அவமதித்தலையோ கீழ்த்தரமான சமூகக் கொடுமைகளையோ அவர் பொறுத்துக் கொள்வதில்லை. ஊரில் எளியவரைக் கொடுமை செய்யும் முரடர்களுடன் அடிக்கடி மோதுவார். ஏதாவது ஒரு செயல் நோக்கத்தை மேற்கொண்டால் அது முடியும்வரை போரிட்டுத் தீர்ப்பார். அவர்தம் உயர் எழுச்சிகள் அவர்தம் தந்தையாரால் மூர்க்கத்தனம் எனத் தவறாகக் கருதப் பெற்றன.

வேமனர் தம் பெற்றோர்களிடம் அன்பையும் நன்மதிப்பையும் காட்டினார். அவர்தம் அன்னையாரின் அன்புக்குரிய செல்லக் குமாரர் அவர். அவரும் தன் செல்வன் தாராளமாகப் பாலும் தயிரும் திரட்டியெடுத்த வெண்ணெயும் கலந்த உணவை விரும்புகின்றான் என்பதை அறிந்துகொண்டு அவற்றைப் போதுமான அளவு வழங்குவார். அவர்தம் தந்தையார் மைந்தனின் முரட்டுத்தனத்தைப்பற்றிக் குறைகூறுங்கால் அவர்தம் அன்னையார் அவருக்காக ஏதாவது சாக்கு போக்குகளைக் கூறி அக்குறையைத் தவிர்ப்பார். தனிமையில், இத்தகைய எல்லாவகைத் தொல்லைகளையும் விளைவித்தல் கூடாது என்று மகனை வற்புறுத்தி வேண்டுவார். முன்—குமரப்பருவம் தாண்டும் வரையிலும் வேமனரின் வாழ்க்கை கவலையற்றும் மகிழ்ச்சியாகவும் உள்ளது. அதன் பிறகு திடீரென்று அன்னை இறப்பதால் அவருக்குப் பெருந்துயர் வந்தெய்துகின்றது. இருட்படலம் அவரைச் சூழ்கின்றது; தனிமையையும் கைவிடப் பெற்ற நிலைமையையும் அவர் உணர்கின்றார்.

ஆழமானதும் கூரியதுமான துக்கத்தினின்றும் வேமனர் மீள்வதற்கு முன்னர், அவர் தந்தையார் இரண்டாவது திருமணம் செய்துகொள்கின்றார். இது வேமனருக்குத் தாங்கொணாத் துயரை விளைவிக்கின்றது. தன் தந்தையார் 'மனைவியிலி' யாக இருத்தல் வேண்டுமென்று அவர் எதிர்பார்க்கவில்லை. "ஆனால் ஏன் இந்த நாணயமற்ற அவசரம்?" எனச் சிந்திக்கின்றார். "என் அன்னையார்மீது அவர் உண்மையான அன்பு கொண்டிருக்கவில்லையா? தான் ஒரு சிறு பருவப் பெண்ணை மணந்துகொள்ளலாம் என்று அவள் சாவதற்காகக் காத்திருந்தாரா?" இத்தகைய எண்ணங்கள் கடுமையானவை என்றும் கொடியவை என்றும் கருதி

அவற்றை அகற்றவே முயல்கின்றார்; ஆனால் அவை அவரைத் தொடரவே செய்கின்றன; ஆகவே அவர் இழிந்த மனப்போக்கில் படிப்படியாகக் கீழிறங்குகின்றார்.

வேமனரை எழுச்சியற்றவராகவும் அடிக்கடி மனம்மாறுகின்றவராகவும், ஓய்வுபெறுகின்றவர்போலவும் காணும் அவருடைய சிற்றன்னை தம்மீது வெறுப்புக் கொண்டிருக்கின்றாரோ எனக் கருதுகின்றார். புதிய மணப்பெண்ணாக மகிழ்ச்சிப் பெருக்கில் திளைக்கும் அவர், துயரம் நிறைந்த அவருடைய முகத்தைக்கண்டு அச்சந்தருகின்ற அளவுக்கு எரிச்சலூட்டும் தன்மையுடையவரா கின்றார். அவர்தம் எரிச்சலூட்டும் தன்மை விரைவில் ஆத்திர மாகவும் சினமாகவும் வளர்கின்றது. அவருடைய தந்தைக்குத் தெரியாமல் அவர் வேமனரைக் கொடுமையாக நடத்தத் தொடங்குகின்றார்; நாளடைவில் வெளிப்படையாகவும் இடைவிடாமலும் கொடுமையாக நடத்துகின்றார். அவர் என்ன சொன்னாலும் அல்லது எதைச் செய்தாலும் அவரிடம் குற்றத்தையே கண்டு ஓயாது திட்டுகின்றார். அவருக்கு முதல் நாள் இரவில் எஞ்சிய உணவையே இடுகின்றார். அகழெலிப்புற்றுபோன்ற மிகச்சிறிய தவறுகளையெல்லாம் மலைபோன்று பெரிதாக்குகின்றார்; அவருக்கு விரோதமாகவே அவர் தந்தையாரிடம் குற்றப்பத்திரிக்கை வாசிக்கின்றார். அவர் தந்தையாரால் நையப் புடைக்கப் பெறுங்கால் அவருடைய துன்பங்கண்டு தனக்குள் மகிழ்கின்றார். அவருடைய முதல் குழந்தை பிறந்தபிறகு, வேமனரின் நிலைமை மிகவும் மோசமாகின்றது. பெருமிதத்தன்மையும் உணர்ச்சியுமுடைய அவர் எதிர்த்து நின்றிருக்கலாம்; ஆனால் அவர் தம் அன்னைபால் கொண்ட அன்பும் மதிப்புணர்ச்சியும் தம்முடைய தந்தையின் வாழ்க்கையில் தம் அன்னை கொண்டிருந்த இடத்தைப் பிடித்துக்கொண்டு ஒரு பெண் தம்மீது சுமத்தும் இகழ்ச்சியுரைகளையும் வசைச் சொற்களையும் அமைதியுடன் தாங்கிக்கொள்ளவேண்டும் என்றே உணரச் செய்துவிடுகின்றன.

வேமனர் இப்பொழுது பின்—குமரப் பருவத்தை எட்டுகின்றார். தம் இல்லத்தில் அவர் அடையும் மகிழ்ச்சியற்ற நிலை அவரை ஒரு பரத்தையின் இல்லத்தை நாடச்செய்து விடுகின்றது. அவர் எதையும் அரைகுறையாகச் செய்பவரல்லராதலின், நாடறிந்த கயவராகி, இருபதுக்கு மேற்பட்ட வேசியருடன் துயில்கின்றார். அதன் பிறகு அவர் அவர்களுள் ஒருத்தியால் மயக்கப் பெறுகின்றார். அவளோ இளமையும் கவர்ச்சியும் உடையவள்; கலைத்திறம் மிக்கவள். அவள் பாட்டிசைக்கின்றாள்; தோடி ராகத்தில் மேம்பாடடைந்தவள். வீணையிலும் வல்லவள். முரட்டுத் தன்மையும் அருவருப்பான தோற்றத்தையும் உடைய வேமனர்

பால் கழிவிரக்கத்தை வளர்த்துக்கொள்கின்றாள். அவருடைய மூர்க்கத்தன்மையைக் குறைக்கவும் அவரை நாகரிகப்படுத்தவும் முயல்கின்றாள். செல்வந்தரல்லாத ஒரே ஓர் இளைஞனிடம் அதிகமாகச் சிக்கிக்கொண்டமை பரத்தையின் அன்னையைத் தொந்தரவடையச் செய்கின்றது. தாம் பெறும் மகிழ்ச்சிக்காக கட்டணங்கள் செலுத்தினார் என்பதற்கு ஐயமில்லை; ஆனால் அவர் செலுத்திய கட்டணங்கள் ஓர் ஒழுங்குமுறையில் இல்லை; நிறைவுடையனவாகவும் இல்லை. முற்றிலும் செலுத்தத் தவறும் ஒரு காலமும் வந்து சேர்கின்றது. உடனே தாய்க்கிழவி (பரத்தையின் தாய்) அவருடைய வருகைகட்குத் தடை உத்தரவு போடுகின்றாள். வேமனர் பதுங்கிச்செல்ல முயல்கின்றார்; ஆனால் கூரிய பார்வையுடைய அந்தக் கிழப்பூனை அவரைத் துரத்தி அடிக்கின்றது. வேமனர் மனம் உடைந்து சோர்வுறுகின்றார். அருவருப்புத் தோற்றமுடைய அந்தக் கிழவியைக் கொன்று தீர்த்துவிட வேண்டுமென்றும் சிந்திக்கின்றார் வேமனர். இந்நிலையில் அந்த இளம் பரத்தை வேறொரு கள்ளக்காதலனுடன் தொடர்புகொண்டு விடுகின்றாள். வேமனரின் ஏமாற்றமும் வெறுப்பும் ஒருவகையில் முழுமை எய்திவிடுகின்றன.

திருந்திய மனநிலையில் தன் மைந்தனைக் காணும் வேமனரின் தந்தையார் அவரை மணவாழ்க்கையில் கட்டாயப்படுத்தி நுழைத்துவிடுகின்றார். இல்லற வாழ்க்கையின் முதல் சில ஆண்டுகள் நாட்டுப்புற வாழ்க்கைச் சித்திரமாக அமைகின்றன. ஒரு குழந்தை பிறக்கின்றது; மீண்டும் ஒரு குழந்தைக்குத் தந்தையாகின்றார் வேமனர். மகிழ்ச்சியான மனநிறைவுடன் கூடிய வாழ்க்கையைப் பற்றிக் கனவு காண்கின்றார் கவிஞர். ஆனால் முரட்டுத்தனமான அந்தக் கனவினின்றும் எழுப்பப்பெறுகின்றார். வேமனருடைய துணைவிக்கும் அவருடைய சிற்றன்னைக்கும் இடையே இடைவிடாத குடும்பச் சச்சரவுகள் தோன்றுகின்றன. ஒரு நாளாவது,—ஏன்? ஒரு மணிநேரம்கூட,—ஏதாவது அருவருப்பான காட்சியின்றிக் கழிவதில்லை. கூட்டுக் குடும்பவாழ்க்கை இனி இயலாதெனக் கருதிய வேமனர் தனிக்குடித்தனத்தைத் தொடங்குகின்றார். அந்த ஏற்பாட்டினாலும் தொந்தரவுகட்கு ஒரு முடிவு ஏற்படவில்லை; அவை பெருகத்தான் செய்கின்றன. தம்முடைய துணைவி சோம்பியிருப்பவளாகவும் பொருள்களை வீணடிப்பவளாகவும் இருந்து குடும்பப் பொறுப்பைக் கண்காணிக்கும் திறமையின்றி இருப்பதைக் காண்கின்றார். மட்டின்றி உணவினை விரும்பும் அவருடைய சுவைக்கேற்றவாறு அவளுடைய சமையல் வெறுக்கத்தக்கதாக உள்ளது. உணவு படைப்பதும் வெறுக்கத்தக்கதாக அமைகின்றது. எப்பொழுதுமே அவள் அவரை வைது தொந்தரவு செய்கின்றாள்; அவரைத் தொந்தரவு செய்யும் நிமித்தம் குழந்

தைகளை நையப்புடைக்கின்றாள். நற்பழக்கமற்ற அக்குழந்தைகள் அவருடைய மகிழ்வற்ற நிலையை மேலும் அதிகரிக்கச் செய்கின்றனர்.

கூட்டுக் குடும்பத்தினின்றும் பிரிந்துசென்ற பிறகு வேமனர் தம் பங்கிற்குப் பிரிந்த பண்ணையை விடாமுயற்சியுடன் பேணி வளர்க்கின்றார். அதில் நல்ல பண வருவாயை நல்கும் பயிர்களான கரும்பு, எண்ணெய் விதைகள் போன்றவற்றை விளைவிக்கின்றார். அதன் பிறகு வீட்டில் வளர்ந்துவரும் மகிழ்வற்ற நிலைமையின் காரணமாக அவர் பண்ணையைப் புறக்கணிக்கின்றார். அதனால் அதன் விளைச்சல் குறைந்துகொண்டே போகின்றது. குடும்பத்தில் மேலும் பல குழந்தைகள் சேர்ந்தமையால் அதன் வரவு செலவுத் திட்டம் ஏறிக்கொண்டே போகின்றது. கடன் வாங்கிய பணத்தைக் கொண்டு ஒருவாறு காலத்தைத் தள்ளுகின்றார். அதன் பிறகு ஓர் ஆண்டு கரும்புப் பயிர் பெருவாரி நோயால் சீரழிக்கப் பெறுகின்றது; அதன்மீது போட்ட முதலீடு முழுவதும் முழு இழப்பாகின்றது. கடன் கொடுத்தவர்கள் கடனைத் திருப்பித் தரவேண்டுமென்று கூப்பாடுபோடுகின்றனர். வீட்டின் மீதும் பண்ணையின்மீதும் உள்ள ஈட்டினை முடித்துக்கொண்டு விடுவதாக அச்சுறுத்துகின்றனர்.

இடர்நிறைந்த இந்நிலையில் வேமனர் பொன்மாற்றுச் சித்தின் மீது ஆசைகாட்டப்பெற்றுக் கவரப்பெறுகின்றார். தாழ்ந்த உலோகங்களைப் பொன்னாக மாற்றும் இரகசியத்தை அறிந்திருப்பதாகக் கூறும் மாந்தரைத் தேடி அலைகின்றார். ஏமாற்றுகின்றவர்கள் மாறி மாறி அவரை ஏமாற்றுகின்றனர். இறுதியாக, மானிடன் என்ற பொருளை பொன்னைவிட மிக விலையுயர்ந்த பொருளாக (அஃதாவது நல்ல கருத்து நிறைந்த வாழ்க்கையாக) மாற்றுவதைக் காட்டும் ஞானாசிரியர் ஒருவரைக் கண்டறிகின்றார்.

இது வேமனரின் வாழ்க்கையின் விசித்திரமான புத்தாக்கம் என்று படுகின்றதா? வேறுவிதமாகக் கூறினால், பகுத்தறிவுக்குப் பொருந்தி நம்பக்கூடியதாக இருந்தபோதிலும் இதுவும் ஒரு புதிய கட்டுக் கதையாகத் தோன்றுகின்றதா? ஆம் என்று சொல்லலாம்; இல்லை எனவும் கூறலாம். இந்தக் கதையின் ஒவ்வொரு தனிப்பட்ட நிகழ்ச்சியினின்றும் வேமனரின் கவிதையில் ஓர் அடிப்படையைக் காணமுடிகின்றது. அவருடைய பயிர்த்தொழிலின் நெருங்கிய பழக்கம்பற்றியும், அவருடைய உணவுச் சுவைகள் பற்றியும், அவர் அன்பு காட்டும் சில பறவைகள் பிராணிகள் பற்றியும், அவர் வெறுக்கும் பிறவற்றைப்பற்றியும், இசைக்கலையில் அவர் சொக்கியிருக்கும் தன்மைபற்றியும், குறிப்பாகத் தோடி ராகத்தில் அவருக்கு நாட்டம் அதிகம் உண்டு என்பதுபற்றியும், இன்னோ

ரன்ன சிறுசிறு செய்திகள் பற்றியும் சான்றுகள் தெளிவாக உள்ளன; அவை ஏராளமாகவும் உள்ளன. அவர் இளமையா யிருக்கும்போதே அன்னை இறந்தமை, சிற்றன்னையால் அவர் அடைந்த கொடுமை, பரத்தையின்பால் அவர் அறிவு மயங்கிக் கிடந்தமை, மகிழ்ச்சியற்ற குடும்ப வாழ்க்கை, பணத்தட்டுப் பாட்டால் நேரிட்ட தொல்லைகள், இரசவாதத்தில் அவர் நாட்டம் கொண்டமை போன்ற சில பெரு நிகழ்ச்சிகள் மட்டிலும் காரணம் காட்டாது விடப்பெற்றுள்ளன. இனி ஒவ்வொன்றுக அவற்றை விளக்குவோம்.

வேமனரது கோட்பாட்டில் அன்னையின்பால் காட்டவேண்டிய அன்பும் உயர் மதிப்பும் முக்கியமான குறிப்பாகும். ''அன்னையை நன்கு அறிபவர் இறைவனை அறிபவராவார்'' என்கின்ருர் அவர். சாதாரணமாக இது ஒரு பொதுவான வாசகமாகக் கொள்ளப் பெறலாம். ஆனுல் ஒரு தெளிவான சுய அனுபவம் இவண் குறிப் பிடப்பெறும் பாடலொன்றில் அமைந்துள்ளது; ''உங்கள் அன்னை உயிரோடிருக்கும்பொழுது நீங்கள் அன்புக்கு உரியவராக அதிகம் போற்றப்பெறுகின்றீர்கள்; அவர் மறைந்தபிறகு உங்களைப்பற்றி யாரும் கவலைகொள்வதில்லை; காலம் இணக்கமாக இருக்கும் பொழுது நீங்கள் நல்லனவற்றையெல்லாம் அடைதல்வேண்டும்'' என்றவற்றில் இதனைக் காணலாம். அன்னையார் இறந்த பிறகு இங்ஙனம் வேமனர் கேவலமாகவும் கொடுமையாகவும் புறக்கணிக் கப் பெருதிருப்பின் அவர் இத்தகைய பாடலொன்றை எழுதி யிருந்திருப்பாரா? தன்னுடைய அன்னையார் உயிரோடிருக்குங் கால் தான் ஒரு சிறந்த தகுதியுள்ள மகன் என்பதை மெய்ப்பிக்க வில்லை என்பதற்கு அறிகுறியாக இதில் ஒரு பெருமூச்சு, துன்பம் மிகுந்த புலம்பல், நம் காதில் விழவில்லையா?

இதற்குச் சமமாகச் சிறப்புப்பொருள் தரும் மற்ருெரு பாட லின் கருத்து இது: ''என்றும் சிற்றன்னை உங்களிடம் ஒரு குறை யையே காண்கின்ருள். உங்களுடைய அன்னை உங்கள்பால் காட்டும் பொறுமையை எப்பொழுதுமே அவள் காட்டாள். நுண் நோக்குகளை வளர்த்துக்கொள்ளவேண்டுமாயின் நீங்கள் மனித இயல்பினை ஆழ்ந்து காணல் வேண்டும்''. தாயற்ற பிள்ளையாக இருந்து சிற்றன்னையின் கொடுமையை நீண்டகாலமாகப் பொறுக்க முடியாது அநுபவித்த ஒருவரைத் தவிர, பிறரால் இத்தகைய பாடல் எழுதியிருந்திருக்க முடியாது.

இனி, பரத்தையின் கிளைக்கதைபற்றிய குறிப்புகள் மிகவும் வெளிப்படையாகவும் நேர்முறையிலும் காணப்பெறுகின்றன. ''ஒரு பரத்தை உங்களிடம் அன்பு காட்டலாம்; அவள் உங்களைப் பாராட்டவும் செய்யலாம்; ஆனுல் அச்செயல் அவள் தன்னுடைய

அன்னையாரிடமிருந்து வெளிப்படும் பழியுரைகளை அணுகவிடாமல் தடுத்தமையாகாது. பரத்தையொருத்தியின் அன்னை சாவதற்கு முன்னர் ஒருவர் அவளிடம் சிக்கிக்கொள்ளுதல் எவ்வளவு துயர் மிகுந்த நிலையாகும்?'' என்பது ஒரு பாடலின் கருத்தாகும். உறுதியாகவே பரத்தையின் கிளைக்கதையின் முற்பகுதிக்கு இது காரணமாக அமைகின்றது எனலாம்; இதன் பிற்பகுதியின் அடிப்படை அடியிற் காணும் பாடலில் காணப் பெறுகின்றது: ''கள்ளக் காதலன் ஒருவன் அன்பு குறைந்து வெறுப்பால் தன் வைப்பாட்டியை விட்டு விலகின் பிறகு, அவளது அழிவுபற்றி அவன் ஏன் தொந்தரவுபடவேண்டும்? இலையிலிருந்த உணவை உண்ட பிறகு அதனைத் தெருவில் வீசி எறிகின்றாய். அது சாய்க் கடையில் விழுந்தால் அதனால் உனக்கு ஆவது என்ன?'' வேமனர் தன்னுடைய பெருமிதம் புண்பட்ட காரணமாகத் தானாகவே, பரத்தை அல்லாமல், தம்முடைய உறவிற்கு முடிவுகட்டினதை இந்தப் பாடல் குறிப்பிடுவதாகக் கருதுவது அறிவுக்குப் பொருந்த வில்லையா?

பணத்தட்டுப்பாட்டால் நேரிடும் தொல்லைகளைப் பற்றிய தெளிவான சான்று அவர் கடன்படுவதைக் கடிந்து கூறுவதாகும். ''கடனின்றி வாழும் ஒருவனே மக்களுள் மிக்க செல்வந்தனாவான்'' என்று அவர் கூறுகின்றார் ஒரு பாடலில்.

இங்ஙனமே அவருடைய குடும்ப வாழ்க்கை மிகமிக மகிழ்ச்சி யற்றதாக இருந்தது என்று உய்த்துணர்வதற்கு அவரது பாடல் களில் பல குறிப்புகளைக் காண்கிறோம். அது மகிழ்ச்சியற்றதாக அமைவதற்கு அவர் அதற்கு ஒரு நேர்மையான முயற்சியை மேற் கொள்ளவில்லை என்பது மட்டிலும் ஒரு காரணம் அன்று. அவரது தொடக்க கால வாழ்க்கையிலும், இறைவனைத் தேடி அலைபவன் தந்தையையும் அன்னையையும், துணைவியையும் குழந்தைகளையும், உண்மையில் எல்லோரையும் எல்லாவற்றையும் கைவிட்டொழிக்க வேண்டும் என்ற நம்பிக்கை வந்த காலம்வரையிலும், வேமனர் மணவாழ்க்கையை உயர்வாகவே கருதினார். ''ஒருவனுக்கு அன்பு நிறைந்த துணைவியும் குழந்தைகளும் இருந்தால் அவன் இறை வனின் இருப்பிடத்தின்மீது பேரவாக்கொள்வது ஏன்?'' என்று ஒரு பாடலில் கேட்கின்றார். தனது பிற்கால வாழ்க்கை யில் ஒருவர் அடங்காப்பிடாரிகளையும் வம்புச் சண்டையிடுகின்ற பெண்களையும் தகுதியற்ற பிள்ளைகளையும் பற்றி வசை புராணம் பாடுவாரேயானால் மகிழ்வற்ற மணமேயன்றி வேறு எது அவரிடம் அத்தகைய கசப்பினை உண்டாக்கியிருக்கும்? அடிக்கடி மக்கள் நாவில் தாண்டவமாடும் பாடலொன்றில் குற்றங்கண்டு தொந் தரவு கொடுக்கும் மனைவியைக் கிள்ளும் செருப்புடனும், பெண்டிர் அணியும் குல்லாயினுள்ளிருக்கும் குளவியுடனும், கண்ணில்விழுந்த

மணல்துகளுடனும், தசையில் ஏறியுள்ள முள்ளுடனும் ஒப்பிடு கின்றார்.

இனி வேமனரின் வாழ்க்கை வரலாற்றுப் புத்தமைப்பில்* காரணம் காட்டி விளக்கவேண்டியது இரசவாதத்தில் அவருக் கிருந்த அக்கறையைப் பற்றியாகும். நூற்றுக்கணக்கான பாடல் கள் இந்த உண்மைக்குச் சான்று பகர்கின்றன. அவருடைய சீடர் களில் சிலர் இன்றும் இரசவாத வாய்பாடுகளைப் பொறுமை யாகத் தேடியெடுப்பதில் முயன்று கொண்டுள்ளனர்; சில பாடல் களின் மறைபொருளான அடிகளில் அவை புதைந்து கிடப்ப தாக அவர்கள் நம்புகின்றனர்.

வேமனருக்கு வாழ்க்கை மென்மையான வழியாக அமைய வில்லை; அது பல்வேறு மேடுபள்ளங்களையும் அபாயகரமான முடக்கு களையும் கொண்ட கரடுமுரடான சாலையாகவே இருந்தது. மீண்டும் மீண்டும் அந்த வழியில் அடிவைத்து நடக்கவே செய் தார்; விழுந்தார். ஆனால் ஒவ்வொரு தடவையிலும் தாமாகவே எழுந்து தம் முன்னேக்கிய பாதையில் பயணத்தைத் தொடர்ந் தார். துன்பங்களிலும் கடுந்துயர்களிலும் கண்ணீர் சிந்துவதிலும் ஒவ்வொருவரும் பெறும் பங்கைவிட இவருக்கு அதிகமான பங்கு இருக்கவே செய்தது. அவை யாவும் அவரைத் திண்மையுடைய வராக்கி விரிந்த நோக்குடனும் பலர் புகழ்ந்து கூறும் கருத்துடனும் துணிவானதும் மரபொழுங்கிற்கு மீறிய தத்துவத்துடனும் கூடிய தனித் தன்மைவாய்ந்த மனிதராகப் பண்படுத்தின.

அவருடைய தத்துவத்தின் குவிமையம் மனிதனைப்பற்றிய தாகவே இருந்தது. "**இந்தியாவின் இதயம்**" என்ற தனது சிறிய நூலில் டாக்டர் எல். டி. பார்னெட் சரியாகக் கூறியதுபோல் வேமனர் ''மனிதனைப் பற்றியல்லாத பிறவற்றில் கருத்தில்லாத வராகவே காணப்பெறுகின்றார்.'' வேமனரைப்பற்றியும் அவரது மனிதப்பற்றுச் சிந்தனைபற்றியும் பார்னட்டின் பாராட்டு கீழ்க் கண்டவாறு கூறும் அளவுக்கு மனவெழுச்சியுடையதாக இருந்தது.

> மனித இனத்தைப் பற்றிக்கூறும் ஆசிரியர்களும் ஒழுக்க உரையாற்றுவோர்களும் இதயங்களைச் சோதிப்போரால் (இறை வனால்) ஒரு தராசில் வைத்து எடை காணப்பெற்றால், தெலிங் கானவைச் சேர்ந்த பணிவான இந்தச் சிறு வேளாளரைவிட மிகு புகழும் வீறும் உடைய ஆன்மாக்கள் யாவரும் குறைந்த மதிப் புடையவராகவே காணப்பெறுவர்.

---

* இந்தப் புத்தமைப்பின் ஒரு பகுதியை எழுதுவதற்கு திரு இரால்லபள்ளி அனந்த கிருட்டிண சர்மாவுக்கு மிகவும் கடமைப்பட்டுள்ளேன்.

# 5. இருட்படலத்தின் இரட்டை இரவு

"இருட்படலமும் ஒளி மூடாக்குகளும்
கொண்ட இரட்டை இரவு"

—மில்ட்டன்

வேமனரை ஒரு மனிதராகவும், கவிஞராகவும், தத்துவ ஞானியாகவும் முழுமையாக அறிந்துகொள்ள வேண்டுமானால் அவர் வாழ்ந்த காலத்தைப் பற்றிச் சிறிதளவாவது அறிந்து கொள்ளவேண்டும்; காரணம், அவரது வாழ்க்கை கலை சிந்தனை ஆகியவை அதில் வேர்விட்டுக் கிடக்கின்றன. முரணாகக் காணப்படினும், தனித்திறமையுடையவர் மட்டிலுமே தம் காலத்தில் வேர்களை விட்டும் அதிலிருந்து உயிர் தரும் நீர்மத்தையும் உணவினையும் எடுத்துக்கொண்டு காலத்தையும் கடந்து ஈறில்லாத காலத்திலும் அடியெடுத்து வைக்க முடியும். வேர் இல்லாத மனிதன் மிகச் செழிப்பான திறமைக்கூறுடையவனாக இருந்தபோதிலும், இங்கு இல்லாமலும் அங்கு இல்லாமலும் இருப்பான்; அவன் சாதாரண மாகத் தன்னைக் கடந்து செல்லும் வன்காற்று வீச்சால் அடித்து வீக்கப்பெற்று இறுதியாகச் சூனிய நிலையின் சுற்றுப்புறத்திற்கு வீசிச் செலுத்தப்பெறுவான்.

தம் காலத்தில் உறுதியாக வேரூன்றி நிற்பவராதலின் வேமனர் (தாமஸ் கிரேயைப்பற்றி ராபர்ட் லிண்ட் கூறுவது போல்) தம் அனுபவத்தால் இவ்வாறு அறிந்தார்: ''கவிதை என்பது வெறுமையான இலக்கியப் பயிற்சியன்று; உண்மையாக இருப்பதன் விம்பக்காட்சியாகும்; காலத்திற்கும் இடத்திற்கும் அப்பாற்பட்ட மாதிரிகளைப் பற்றிய வீணான வியந்து பாராட்டலிலும் அது அமையவில்லை. அது தன்னுடைய மூச்சைப் போலவும் நாட்டைப்போலவும் மிக அண்மையிலிருப்பது''; அவர் தம்முடைய கவிதைப் படைப்பில் தம்முடைய காலத்தை முழுமையாக பிரதிபலித்தார். நாம் ஏற்கனவே பார்த்ததுபோல் வேமனரின் வாழ்க்கை வரலாறுபற்றிய கதையை அவருடைய கவிதையைத் திறனாய்ந்து கற்றல் மூலம் புதிதாக அமைத்துக் காட்டலாம்; அங்ஙனமே அவர் வாழ்ந்த, எழுதிய, கற்பித்த காலத்தைப் பற்றிய

தெளிவான நல்ல நம்பகமான ஓவியம் ஒன்றினை அதிலிருந்து பெற லாம். அந்தக் காலம் சோர்வுற்ற, சிறுமைப்பட்ட, நாகரீகமற்ற, அருவருப்பான காலமாகும். உலகப்பொருள்களிலும் ஆன்ம உணர்விலும் ஏழ்மைப்பட்டதாகவும், சிந்தனையிலும் பேச்சிலும் நாகரிகமற்றும், ஒவ்வொரு கூறிலும் அருவருக்கத் தக்கதாக வும் இருந்த காலமாகும் அது. இந்தியாவின் ஏனைய பகுதிகளிலி ருந்ததுபோல ஆந்திராவிலும் நிலவிய இடைக்காலத்தின் இறுதி யானதும் மிகமிக மோசமானதுமான கட்டமாகும். உண்மையி லேயே அந்தக் காலம் ''இருட்படலமும் ஒளிமூடாக்குகளும், கொண்ட ஓர் இரட்டை இரவாகும்.''

வேமனரின் கவிதை மூலம் நாம் கணநேரத் தோற்றத்தில் காணும் அவர் காலத்திய சமயநிலையின் பரந்த காட்சி இதுவாகும்: பிறப்பிலேயே வேமனர் எதிர்ப்பார்வமுள்ள சீர்திருத்த நோக் குடைய சிவ வழிபாட்டு முறையான வீரசைவ சமயத்தைத் தழுவி யவர்; ஆனல் அவர் காலத்தில் அந்த வழிபாட்டுமுறையில் எதிர்ப் பார்வமும் இல்லை; சீர்திருத்த நோக்கமும் இல்லை. பன்னிரெண் டாம் நூற்றுண்டில் கர்நாடக மாநிலத்தைச் சார்ந்த பசவர் என் பவரால் நிறுவப்பெற்ற அந்த வழிபாட்டுமுறை பல–தெய்வ வணக் கத்தை ஏளனம் செய்கின்றது, வேதத்தில் நுவலப்பெறும் பலிகளை கண்டு வருந்துகின்றது, கள்ளக் குருக்களின் தந்திரத்தைப் பழித் துரைக்கின்றது, சாதி வேறுபாடுகளையும் ஆண் பெண்களிடையே யுள்ள சமமின்மைகளையும் புறக்கணிக்கின்றது, தீண்டாமையைக் கடிந்துரைக்கின்றது, கடுமையான எல்லாத் துறவு நிலைகளையும் எதிர்க்கின்றது. அதனுடைய கோட்பாடுகள் எல்லாம் எதிர்மறை யானவை அல்ல; உடன்பாட்டுக்கூறுகளில், அது அனுபவத்தால் பெறும் அறிவினையும், அறிவின் அடிப்படையிலமைந்த திட நம்பிக் கையினையும், கலப்பு மணங்களால் பெறும் சமூக சமத்துவத்தை யும், குடும்ப வாழ்க்கையின் திருநிலைத் தூய்மையையும், உடலுழைப் பின் மதிப்பினையும், நன்னெறிசார்ந்த நற்குண வளர்ப்பினையும் ஆதரிக்கின்றது. அது மனிதப் பண்புணர்ச்சியில் தோய்ந்து எல்லா வற்றையும் உட்படுத்திய சகோதரத்துவத்திற்காகப் பாடுபடுகின் றது. பசவரின் வீரசைவ சமயம் முதன்முதலாகப் பண்டிதர் சீபதி, பண்டிதர் மல்லிகார்ச்சுனர், பலகுரிக்கி சோமநாதர் முதலியோர் களால் ஆந்திர மாநிலத்திற்குக் கொணரப்பெற்று வேகமாகப் பரவி வருகின்றது. சமூக ஏணியில் ஒரு பக்கத்திலுள்ள பிராமணர் முதல் மறுபக்கத்திலுள்ள தீண்டத்தகாதவர்கள் வரை எல்லோரும் அச் சமயத்தின்பால் ஈர்க்கப்பெறுகின்றனர். அது புதியதொரு புலர்விடி யலை முன்னறிவிக்கின்றது; புதிய சிந்தனையின் குவிமையமாக அமை கின்றது; வல்லமை வாய்ந்த ஒரு சீர்திருத்த இயக்கத்தைத் தோற்றுவிக்கின்றது.

நாளடைவில் வீரசைவ சமயம் தன்குறிக்கோள் நெறியைத் தவறவிடுகின்றது, அது வேமனர் காலத்தை அடைகின்றபொழுது மூலமுன்மாதிரியின் நையாண்டிக்கோலங்கொள்ளுகின்றது. சமய உட்பிரிவுகளின் வேறுபாடுகளை ஒழிக்கவேண்டும் என்ற நோக்கத்தில் தோல்வியடைந்து, ஏற்கனவே அதிகமாகப் பிளவுகொண்டுள்ள இந்து சமூகத்தில் பிறிதொரு உட்பிரிவினைப்—வீர சைவர்கள் என்ற பிரிவு—புதிதாகச் சேர்த்துக்கொண்டுவிடுகின்றது. உண்மையில், அது இரண்டு பிரிவுகளைச் சேர்த்துக்கொண்டது என்றே சொல்லலாம். காரணம், வீரசைவர்களும் சாதிகளின் அடிப்படையில் இரண்டு பிரிவுகளாயினர். அரத்தியர்கள் என்போர் பிராமணர்கள்; ஜங்கமர்கள் என்போர் பிராமணரல்லாதவர்கள். மேலும் அது புதியதொரு சடங்குமுறைகளையும் புதியதொரு புரோகித வகுப்பினரையும், ஏராளமான புதிய கட்டுக்கதைகளையும் புராணத் தொகுதிகளையும், புதிதாக உற்பத்தியான மூடநம்பிக்கைத்தொகுதிகளையும் உண்டாக்கியுள்ளது. அந்தக் கோட்பாட்டின் உயிரான உள்தத்துவத்திற்குக் காட்டப்பெறுவதைவிடப் புறம்பான பகுதிகட்கே அதிகக் கவனம் செலுத்தப்பெறுகின்றது. ஒருவர் லிங்கத்தை உடலிடங்கொண்டு மேனியெல்லாம் வெண்ணீற்றைப் பூசிக்கொண்டாலும், ஒருநாளில் வரையறுத்த இடைவேளைகளில் சிவநாமத்தை மனனம் செய்தாலும், தெளிவாகக் குறிப்பிடப் பெற்ற நாட்களில் பட்டினி கிடந்து விரதத்தை மேற்கொண்டு குறிப்பிட்ட திருத்தலங்கட்குச் சிற்சில சமயங்களில் பயணங்களை மேற்கொண்டாலும், நம்பிக்கையுடன் அவர் கடமைகளைப் போதுமான அளவு நிறைவேற்றிவிட்டவராகின்றார். சுருக்கமாகக் கூறினால், சமயம் திட்டமாக அமைந்த கபட நாடகமாகின்றது. இங்ஙனம் அதிர்ச்சி தரும் நிகழ்ச்சிகளின் நிலைமையைக்கண்டு வேமனர் பொறுமையற்றநிலையை அடக்கமுடியாமல் கேட்கின்றார்: ''சமயச் சடங்குகளை உண்மையற்ற ஆசார முறையால் மேற்கொள்வதனாலும், உண்மையற்றமுறையில் சிவனை வணங்குவதனாலும் பயன் என்ன? தூய்மையற்ற பாண்டத்தில் சமைக்கப்பெற்ற உணவினால் யாது பயன்?'' விரிந்த நோக்கமுள்ள மனப்பான்மையையும் பிற சமய நம்பிக்கையைப் பொறுத்துக்கொள்ளும் மனப்பான்மையையும் வற்புறுத்தி வேண்டும் வேமனர் கூறுகின்றார்: '' 'குண்டா' என்று தெலுங்கில் வழங்கினாலும் 'கும்பம்' என்று வடமொழியில் கூறினாலும் இரண்டும் ஒரே பொருளைக்குறிக்கின்றன. அங்ஙனமே 'கொண்ட' என்றும், 'பருவதம்' என்றும் வழங்கும் சொற்கள் மலையையே காட்டுகின்றன. மேலும் 'உப்பு' என்றாலும் 'லவனம்' என்றாலும் அச்சொற்கள் உப்பு என்ற பொருளையே தெரிவிக்கின்றன. வெவ்வேறு பெயர்களைக்கொண்டபோதிலும் இறைவன் என்பவர் ஒருவரேயாவார்.'' தன்னுடன் நெருங்கிப் பழகும்

வீரசைவர்களிடம் தாம் வற்புறுத்தி வேண்டுவது வீணே என்பதைக் காணும் வேமனர் இவ்வாறு வெகுண்டு பேசுகின்றார்: ''நமது ஆறு சிந்தனை அமைப்புகளில் வீர சைவத்திற்கு நிகரானது ஒன்றுமில்லை; பல்வேறு சமயவஞ்சகர்களுள் லிங்கம் தரிப்போரை எவரும் விஞ்ச முடியாது.''

விஷ்ணுவின் வழிபாட்டு முறை அல்லது ''வைணவம்'' என்று வழங்கப்பெறும் முறையும் அடிப்படையிலேயே மாற்றியமைக்க விரும்பும் சீர்திருத்த இயக்கமாக உயர்ந்த குறிக்கோள்களுடன் தோன்றுகின்றது; அதுவும் வேமனர் காலத்தில் தனது மூல அறிவுச் சுடரை இழக்கின்றது. அது முற்றிலும் சோர்வுற்ற நிலையை அடைந்தது என்பதற்கு ஒரே ஒரு சான்றினைத் தரலாம். அந்த அமைப்பினுள்ளேயே சமய உட்பிரிவுகள் மிகவும் வெறுக்கத்தக்கனவாகவும், மடத்தனமாகவும் வளர்ந்து, ஒரே விஷ்ணுவின் அடியார்களாக இருந்தபோதிலும், நஞ்சைப்போல் ஒருவரை ஒருவர் வெறுக்கின்றனர். நாம் மதிப்பிடும் காலத்திற்குச் சற்று பின்னருள்ள காலத்தில் பிரௌன் குறிப்பிட்டுள்ளபடி அவர்கட்கிடையே எழும் மாறுபாட்டின் முக்கிய செய்தி தத்தம் கோட்பாட்டிற்கு உரிய அடையாளம் எந்த வடிவத்திலிருக்க வேண்டும் என்பதாகும். அதாவது, ஒவ்வொருவரும் காலையில் தீர்த்தமாடியபிறகு தமது நெற்றியில் தீட்டிக்கொள்ளும் அடையாளமாகும். (பிரௌனின் கூற்றுப்படி) ''அவர்களிடையே எழுந்த பூசல் கேடளாவிய குழப்பங்களையும் பல உயிர்களின் இழப்பையும் விளைவிக்கும் அளவுக்கு மனக்கசப்பை உண்டாக்கியுள்ளது''.

போட்டியிடும் சமயங்களான சைவம், வைணவம் என்ற சமய உட்பரிவுகளிடையே நிலவும் பழம்பகைகள் மிகமிகக் கொடியவையாகும். சிலசமயங்களில் அவை முற்றுகையிட்ட போர்களில் கொண்டு செலுத்தி அறிவற்ற படுகொலையில் முடிந்துள்ளன. கடுந் தாக்குதல்கட்கு முன்னர் கொந்தளிக்கும் பகையும் உணர்ச்சி மிகுதியும் நிலவுகின்றன; உண்மையில் அவ்விடைக்காலங்கள் ஆயுதம் தாங்கிய தற்காலிகப்போர் நிறுத்தக் காலங்களாகும். நம்பத்தகாததுபோல காணப்பெறினும், ஒரு சைவரின் உடலை ஒரு வைணவரின் உடல் எப்படியோ தொட்டுக்கொள்ள நேர்ந்தால் அவர் தீர்த்தமாடித் தூய்மைபடுத்திக்கொள்ளவேண்டும். இங்ஙனமே, ஒரு வைணவரின் தொடுகை ஒரு சைவரின் தூய்மையைக்கெடுத்து விடுகின்றது. இந்தத் தூய்மையான அவக்கேட்டினால் அதிர்ச்சியடைந்த வேமனர் கேட்கின்றார்: ''ஒரு சைவரையும் ஒரு வைணவரையும் ஒரேகாலத்தில் காலன் கொண்டுபோனால் சைவரின் உடல் புதைக்கப்படுகின்றது, வைணவரின் உடல் எரிக்கப்படுகிறது என்ற வேறுபாட்டைத்தவிர அவர்களிடையே வேறு என்ன வேறு

பாடு உள்ளது? அப்படி இருக்கும்போது இறைவன் பெயரால் ஏன் சச்சரவு செய்துகொள்ளவேண்டும்?'' அவர் இன்னும் ஒருபடி மேல் சென்று கூறுகின்றார்: ''நம்முடைய சமயங்கள் பல; ஆனால் எவையும் உறுதியானவையும் அல்ல, நிலையானவையும் அல்ல. நிலையானவையாக இருப்பவை நம்முடைய நல்வினைகளும் தீவினைகளும் மட்டிலுமே. முடிவான பகுப்பாய்வால் எந்த ஒரு சமயமும் உண்மையைத் தன் உரிமையாகக்கொள்ளவில்லை.'' சமயத்தின்பால் தனி நலத்தை உரிமையாகக் கொண்டுள்ளவர்களிடம் காரணம் காட்டி வாதிடுவதில் ஒருக்கால் யாதொரு பயனும் இராது எனக் கருதுபவர், சமயவாதிகளிடம் விழிப்புடனிருத்தல் வேண்டுமென்று பொதுமக்களை எச்சரிக்கின்றார். ''சமயத்தை வைத்து வாணிகம் செய்து ஏமாற்றுபவர்கள் ஆயிரக்கணக்காக உள்ளனர். அவர்கள் மீன்களைக் கொத்தித் தின்னும் கொக்குக் கூட்டத்தைப் போல் வெளிக்கிளம்பியிருப்பதால் அவர்களிடம் கவனமாக நடந்து கொள்ளுங்கள்'' என்றும் அவர் கூறுகின்றார்.

சைவமும், வைணவமும் மதிப்பிழந்ததைப்போல் வேதபலிகளும் மீண்டும் நம் கவனத்திற்குமுன் வருகின்றன. பழையஅளவுப்படி இல்லாவிடினும், அவை அடிக்கடிச் செய்யப்பெறுகின்றன. வேமனரும் தாம் ஒளிவுமறைவுஇன்றிப் பேசுகின்ற முறையிலேயே பெருகிவரும் இப்போக்கிற்கு எதிராகக் கடிந்து பேசுகின்றார். ''மிக உயர்ந்த நிலையில் இருப்பதாகக் கூறும் உங்கள் உரிமை எங்குள்ளது?'' என்று வேதப் புரோகிதர்களை நோக்கிக் கேட்கின்றார். ''அது பலி என்ற பெயரால் ஆதரவற்ற நிலையிலுள்ள பிராணிகளைக் கொல்லுவதிலும் அவற்றின் இறைச்சியை உங்கள் திருநிலையான நெருப்பில் சுட்டு உண்பதிலும் உள்ளதா?'' என்கின்றார். தாக்குதலுக்கு திரும்பியவர், ''நீங்கள் உரிமை கொண்டாடுகின்றபடி சிங்கங்கள் போல் பலமாக இருப்பின் ஆதரவற்ற ஆடுகளின் கழுத்துகளை முறுக்கிப் பிழிவதில் சிங்கத்திற்குரிய பலத்தைக்காட்ட முடியுமா?'' என்று கேட்கின்றார். பிறிதோர் இடத்தில், ''உயர்தரமான நோக்கத்தில் ஆன்ம தியாகம் பலிகளனைத்திலும் மிகச்சிறந்ததல்லவா?'' என்று வினவுகின்றார். வேதபலி இடுபவர் உம்பர் உலகில் அவ்வுலகிற்குரிய ஆடலணங்கான அரம்பையின் காதற்சுகங்களை அனுபவிப்பார் என்று நம்பப்பெறுகின்றது. இந்த நம்பிக்கையைக் குறித்து வேமனர்: ''தந்தையும் மகனும் பலிகளை மேற்கொண்டால், இருவரும் உம்பருலகினை அடைந்து, இருவரும் அரம்பையரை அணைவர். இதனால் அவர்கள் தகாப்புணர்ச்சி மேற்கொண்ட குற்றத்திற்கு ஆளாகின்றனரல்லவா?'' என்று திகைக்கும் வினாவை விடுக்கின்றார். அவர் காலத்திய சமய நம்பிக்கைகளை அடிக்கடியும் விடாதும் பல்வேறு முனைகளில் வேமனர் தாக்குவது அந்த நம்பிக்

கைகள் எவ்வளவு இழிவான நிலைக்கு இறங்கியுள்ளன என்பதன் அளவுக்குறியாக அமைகின்றது.

அவர் காலத்திய சமூக—அரசியல் நிலைமைகளும் நன்முறையில் இல்லை. நடுவரசின் மேலாண்மை உரிமை இல்லை; நாடு சிறு சிறு பகுதிகளாகச் சிற்றரசர்களின் ஆட்சியிலிருந்தது. அவர்கள் மிகவும் ஆற்றல் அற்றவர்களாக இருந்தனர். ''எந்த முரடனும் பணிவச்சமின்றி ஆட்சிபுரியும் சிற்றரசனை எதிர்த்து நிற்கலாம்'' என்பது வேமனரின் கூற்று. ஆட்சியிலுள்ள ஆற்றலற்ற எல்லா மனிதர்களைப்போலவே இந்தச் சிற்றரசர்களும் வெடுவெடுப்புள்ளவர்களாகவும் மனம்போன போக்குடையவர்களாகவும் உள்ளனர். தம்மைச் சுற்றிப் பலவகையான புகழ்பாடும்போலிக் கூட்டங்களைக் கொண்டுள்ளனர். அவர்களுடைய முக்கிய உணவாகிய முகப்புகழ்ச்சியை வாரிக் கட்டிக் கொள்ளுகின்றனர்; ஓய்வானதும் மகிழ்வுடையதுமான வாழ்க்கையை நடத்துகின்றனர்; துயருறுவோர் பழிக்குப்பழி வாங்க இயலாது என்பது உறுதியாதலால் அவர்கள் மக்களைக் கொடுமை செய்து வருத்துகின்றனர். தெளிவாக அத்தகைய ஒரு சிற்றரசைக் குறிப்பிடும் வேமனர் கூறுகின்றார்: ''அவருடைய திருக்குமாரர் ஒரு போக்கிரி, அவருடைய நண்பர் ஒரு கோள்சொல்லி, அவர் அறிவற்றவர், அவருடைய அமைச்சரோ ஒழுக்கமற்றவர். உண்மையாகவே, பெரிய குரங்குவகைக் கூட்டத்துடன் இருக்கும்பொழுது சாதாரணக் குரங்கு ஒருபொழுதும் மகிழ்ச்சியுடன் இருத்தல் முடியாது.'' பிறிதொரு பாடலில் அவர் கூறுவது இது: ''அதிகாரத்தில் உள்ள மூடன் ஒருவன் தகுதிஉள்ள அனைவரையும் வேலையிலிருந்து நீக்கிவிடுகின்றான் உண்மையாகவே செருப்பைக் கடிக்க விரும்பும் நாய் கரும்பின் சுவையை எங்ஙனம் அறியமுடியும்?'' இறுதியாக அவர்: ''உயிருக்கு ஊறு விளைவிக்கும் நாகத்துடன் கொள்ளும் உறவைவிடக் கீழானதால், சிற்றரசரை நம்பவும் வேண்டாம்; அவருக்குப் பணி செய்யவும்வேண்டாம்'' என்று நம்மை எச்சரிக்கின்றார்.

இத்தகைய மனவுறுதியில்லாத கொடிய சிற்றரசர்களின் கொடுங்கோலாட்சியில் உயிருக்கோ சொத்துக்கோ பாதுகாப்பு இல்லை. கொள்ளைக்காரர்கள் நாட்டுப்புறங்களைச் சூறையாடுகின்றனர்; அவர்கள் தண்டிக்கப்பெறுவது இல்லை. அவர்களைப்பார்த்து வேமனர் பேசுகின்றார்: ''நீங்கள் மக்களை கொன்றும் உறுப்புக் குறைச்செய்தும் வருகின்றீர்கள், சிற்றூர்களைக் கொள்ளையடிக்கின்றீர்கள். இப்பொழுது நீங்கள் தங்குதடையற்றுச் செல்லலாம். ஆனால் யமனுடைய சீற்றத்தினின்றும் தப்பமுடியுமா?'' இறுதி தீர்ப்பினைப்பற்றிய எச்சரிக்கைகள் கடின சித்தமுடைய குற்றவாளிகளைக் கொள்ளையடிக்கும் தொழிலினின்றும் அச்சத்தால் பின்

வாங்கச்செய்தல் அரிதாக இருப்பதுபோல், வேமனரின் எச்சரிக்கை செவிடன் காதில் ஊதிய சங்கொலிபோலாகி இருக்கலாம். பொது வாகச் சட்டத்தை மீறி நடக்கும் நிலை தன்னுடன் அடிக்கடி நிக ழும் வற்கடங்களும் கொள்ளைநோய்களும் உட்பட வழக்கமாக நிகழும் எல்லாவிதஆரிடர்களையும் விளைவிக்கின்றது. வாழ்க்கையி லும் ஊக்கம் குறைகின்றது. அங்ஙனமே கலைகளும் கைத்தொழில் களும் மறையத் தொடங்குகின்றன, கல்வியும் குறைகின்றது. ''மக்கள் பசியால் வாடுகின்றபொழுது கலைகளும் கைத்தொழில் களும் எங்ஙனம் செழிக்க முடியும்? கல்வியில் வளர்ச்சி எங்ஙனம் காணமுடியும்? சுடப்பெறாத மட்சட்டியில் எங்ஙனம் நீர் தங்க முடியும்?'' என்று வேமனர் கேட்கின்றார்.

இத்தகைய இருட்படலம் சூழ்ந்த நலிவுற்றகாலத்தில் தோன் றிய வேமனர் ஒற்றையாகவே எதிர்த்து நின்றதும் தெளிவான கடுஞ்சொற்களால் பலரறியப் பழித்துக்கூறியதும் அவர் செல்வாக் கிற்குப் பலவகையில் சேர்ந்துதவக் காண்கின்றோம். சிலசமயங்களில், அவர் தொனியில் மழுங்கலாகவும், சொற்களில் கடுமையாகவும், கருத்துரைப்பதில் கண்டிப்பாகவும் இருந்தாலும் இதனால் அவர் மழுங்கியும் கடுமையாகவும் கண்டிப்பாகவும் இருந்தார் என்பதா காது; இயல்பாக அவர் குடிப்பண்புடையவராகவும் அன்புடைய வராகவும் பொறுமையுடையவராகவும் இருந்தார்; உண்மையில் அவருடைய மென்மையான மேம்பட்ட உணர்ச்சியே, அவரை வாய்வீச்சுக்காரன் என்றும் பித்தேறிய கிறுக்கன் என்றும் அவர் மீது வீசப்பெற்ற பட்டப்பெயர்களையும் பொருட்படுத்தாது, தன் காலத்திய இழிநிலையை எதிர்த்து அவர் ஆன்மாவைக் கதறியழியச் செய்தது. அந்தப் பட்டப்பெயர்களையே தன்னுடைய பட்டப் பெயர்களாக்கிக்கொண்டு தன்னுடைய அரிதான நீள்நோக்கிற் கேற்ப உண்மையாக வாழ்ந்தார். ஒருக்கால் இவர் இடைக்கால இந்தியாவின் தத்துவக் கவிஞர்களுள் இறுதியானவராக இருந் தாரோ என்று சொல்லலாம். நிச்சயமாக அவர்கள் மிகப்பெரிய வர்களுள் ஒருவராகவே இருந்தார் என்பதற்கு ஐயம் இல்லை.

# 6. கவிஞர் பேசினர்

**உடனடியாகத் தோன்றிய எண்ணத்தையே
கவிஞர் பேசினர்**

**—எமர்சன்**

**தெலுங்கு** *இலக்கியத்தின் தலைவர்கள் இப்போது வேமனரை ஒரு கவிஞராக, ஆனால் ஒரு சில்லறைக் கவிஞராக ஒப்புக் கொள்ளுகின்றனர். அவர்கள் கருத்துப்படி அவர் மிகவும் குறிப்பிடத்தக்க சதகக் கவிஞர்களுள் மிகச் சிறந்தவராவார். வேமனரின் பாடல்கள் சதக—மாதிரிக் கவிதைகளை ஒத்துள்ளன என்பது உண்மையே; அவை பொதுவான பல்லவியைக் கொண்டுள்ளன; சில அரிய சந்தர்ப்பங்களில் அது மாறுங்கால், அந்த மாற்றமும் சிறியஅளவில்தான் உள்ளது. ஆனால் அவருடைய கவிதையின் வடிவத்தை விட்டுவிட்டு அதன் உயிரோட்டம் மட்டிலும் கருதப்பெறுமேயாயின் சுண்ணக்காம்பினின்றும் பாலாடைக் கட்டி வேறுபடுகின்றதைப்போலச் சதகக் கவிஞர்களினின்றும், இவர் வேறுபட்டவராகின்ருர். நூற்றுக்கணக்கான சதகக் கவிஞர்கள் இருக்கவே செய்கின்றனர்; பெரும்பாலும் அவர்கள் யாவரும் புகழ்பாடும் கவிஞர்களேயாவர்; அவர்கள் யாவரும் தம் தனிப்பற்றுக்குரிய தெய்வத்தையோ அல்லது செல்வச்சிறப்புடைய தம் புரவலர்களையோ பாடுவர். அவர்கள் அடிக்கடி செய்வதுபோல ஒழுக்கத்துறையில் தம் கருத்தினைச் செலுத்துங்கால், அவர்தம் நீதிமொழிகள் பள்ளிச்சிறுவர்கள் பார்த்தெழுதும் குறிப்பேட்டு முதுமொழியின் சப்பிட்ட தரத்திற்கு மேல் உயர்வதில்லை. அவர்தம் மனங்கள்ஆழமற்றும் வறண்டும் கிடக்கின்றன; அவர்தம் நடையோ கால் நடைதான்; அவர்தம் கவிதையோ கல்விச்செருக்குடையது. வேமனரோ இதற்கு முற்றிலும் மாருக, உள்ளுணர்வுகளில் சுயமாகவும், இயற்கையை உற்றுநோக்கலில் அறிவுக்கூர்மையாகவும், மனவெழுச்சித் துலக்கத்தில் விரைவாகவும் உண்மையாகவும், சிந்தனையில் நுண்ணறிவு கொண்டும், எடுத்தியம்புவதில் துணிவாகவும் இருக்கின்ருர்.* **'தெலுங்கு இலக்கியம்'** *என்ற தமது நூலில் சதகக் கவிஞர் என்றும் 'சதக எழுத்தாளர்களுள் மன்னர்' என்றும் பி. செஞ்சையாவும் ராஜா எம். புஜங்கராவும் கூறுவது மிகக் குறைவான மதிப்பீடாகும். டாக்டர் சி. ஆர். ரெட்டி இந்த நூலின் நூன்முகத்தில் ''நம் வான மண்டலத்தின் முதன்மையான* **விண்**

மீன்'' என்று கூறுவது மிகச் சரியான மதிப்பீடாகும். புராணத்தையோ, பிரபந்தத்தையோ அவர் எழுதியிராதிருக்கலாம்; எனினும் அவரை உயர்தரக் கவிஞர் என்றே வழங்கலாம். அவர் கவிதை உயர்தர நிறைவை எய்தியுள்ளது; அவர்தரும் செய்தியோ எல்லாவற்றையும் உட்படுத்திய உயர்தரச் செய்தியாக உள்ளது **'ஆங்கில இலக்கிய வரலாறு'** என்ற நூலின் கூட்டாசிரியராகிய கஸாமியன் என்பவரிடமிருந்து கடன் வாங்கிய தொடரால் குறிப்பிட்டால் வேமனர் ''உயர்வான உயர்தர மரபுவழி இலக்கியத்தன்மை''யை எய்தியுள்ளார் எனலாம். ராபர்ட் பர்ன்ஸ் என்பாரைப்பற்றிக் குறிப்பிடும் கஸாமியன் இவ்வாறு கூறுகின்றார்: ''பர்ன்ஸ் என்பார் இயற்றிய இலக்கியத்தின் தன்மை, சொல்லின் கலைச்சுவை புலப்படக் கூறினால், உயர்வான உயர்தர மரபுவழி இலக்கியத் தன்மையை எய்தியுள்ளது; இந்த உயர்தர மரபுவழி இலக்கியத் தன்மை முற்றிலும் தன்னிறைவு எய்தியிருப்பதால் எந்தக்கோட்பாட்டுக் கிளையையும் விதியையும் சாராது தன்னுண்மையுடன் திகழ்கின்றது.'' பர்ன்ஸைப் போலவே வேமனரும் உழவர் இனத்தைச் சார்ந்திருப்பதாலும் அவரைப்போலவே சிறப்புத்திறமையுடையவராதலாலும் அவரும் தனக்கே உரிய, தன்னுடைய ''உயர்வான உயர்தர மரபுவழி இலக்கியத் தன்மை'' யைப் படைத்துள்ளார்; அதுவும் ''முற்றிலும் தன்னிறைவு'' எய்தியுள்ளது.

வேமனர் தன்னுடைய கவிதையை எழுதினாரல்லர்; அதனை வாய்மொழியாகவே கூறினார். வோர்ட்ஸ் வொர்த் போலன்றி இவரிடம் கவிதை என்பது ''அமைதியான நிலையில் திரும்பவும் நினைவூட்டும் மனவெழுச்சிகள்'' அன்று; அது மனவெழுச்சிகள் வெண்சூட்டு நிலையிலுள்ளபோது தோன்றியதாகும். அவர்கொண்ட அதிக ஈடுபாட்டினால் அவர்தம் மனஎழுச்சிகள் அமைதிகொள்ளவில்லை. அவரிடம் எண்ணம் உருவானவுடன், அவர் மேற்கொள்ளும் பங்கு கவிஞரின் பங்குஅல்ல; மறைமெய்யைக் கொண்டவரின் பங்கை ஏற்கின்றார்; வருவதுரைக்கும் தீர்க்கதரிசியாகின்றார். ஆகவே, அவர் எந்தக் கவிதைக் கொள்கையிலும் தம் கவனத்தைச்செலுத்துவதில்லை; பரதர், தண்டியார், அபிநவகுப்தர், ஹேமசந்திரர், போஜர் போன்ற அணிஇலக்கணத்தில் தனித்திறமை வாய்ந்தவர்களின் பெயர்களைக்கூடக் கேள்வியுற்றிருக்கமாட்டார். எனினும், அவர் மிகச்சிறந்த கவிதையையே ''பேசினார்''; காரணம், பிறப்பிலேயே அவர் கவிஞராதலால் தன்னுடைய இதயத்தில் உண்மையாகவும் ஆழமாகவும் கிளர்ந்தெழும் உணர்ச்சிகளைக் கவிதைச் சொற்களாகத் தராமல் இருக்கமுடியாது. இதன் காரணமாக, அவருடைய கவிதை சிலசமயம் மிகப்பெரிய வெள்ளமாகவும் சிலசமயம் வெடித்துக் கிளம்பும் எரிமலையாகவும், சிலசமயம் கடல்

களைத் தாக்கும் சூறுவளிக் காற்ருகவும் உள்ளது; இந்த அளவு கோலின் அடுத்தகோடியில் அது விரைவான மாற்றங்களை ஏற்றுக் கோடைக்குப்பிறகு தோன்றும் முதல் மாரியாகவும், குளிர்ந்து வீசும் தென்றலாகவும், அதிகாலையில் கேட்கப்பெறும் பறவை களின் பாட்டாகவும் அமைந்துவிடுகின்றது.

1950-ல் சென்னை வாஞெலியில் ஒலிபரப்பான பேச்சில் டாக்டர் சி.ஆர்.ரெட்டிஅவர்கள் கூறுவதுபோல்,வேமனர் ''இயற் கையைப்பற்றிப் பாடும் கவிஞராகவும் இயல்பான கவிஞராகவும் திகழ்கின்ருர்''. இங்கு அவரது திறஞய்வு மதிப்பீட்டின் ஒரு சில வாக்கியங்களை அப்படியே மேற்கோளாகக்காட்டுவோம்:

> படித்தவர் தான் என்ற போதிலும் அவர் ஒரு புலவர் அல்ல. ஆஞல், ஆழ்ந்த சிந்தனையையுடையவர்; வாழ்க்கையையும், அதன் உலகியல் பற்றியனவும் ஆன்மிக இயல்பற்றியனவுமான பிரச்சினைகளை ஆழ்ந்து சிந்திக்கும் ஆற்றலையும் ஊடுருவிப்பார்க் கும் உள்ளுணர்வையும் பெற்றவர். இத்தகைய திறன்களைக் கருவிலே அமையப்பெற்ற இவருடைய கவிதை சிந்தனையிலும் நடையிலும் சுயமானது; முற்றிலும் தாஞக இயல்பாக எழு வது; கறைப்படுத்தப் பெருதனவும் தூய்மையானதுவுமான ஊற் ருக இருப்பது. மூன்று வரிகளில் முழுக் கவிதையைத் தருகின் ருர். சுருக்கமே சொல்திறனின் ஆன்மாவாஞல், இந்த உலகில் இதைவிடப் பெரிய சொல்திறன் இருந்ததில்லை. அவருடைய உவமைகளும் உருவகங்களும் காடுகளிலும் வயல்களிலும், நாட் டுப்புறக் காட்சிகளிலும் இயற்கையான சூழ்நிலைகளிலுமிருந்தே எழுந்தவை. அவர் இயற்கைக் கவிஞர்; இயல்பான கவிஞரும் கூட.

வேமனரின் சிந்தனையை வெறுப்பவர்களும்கூட அவருடைய கவிதையின் சொல்வளம் இணையற்றதென்பதை ஒப்புக்கொண்டே யாகவேண்டும். அவர்கவிதை இழிவின்றி எளிமையாகவும், தெவிட் டுதலின்றி இனிமையாகவும் உள்ளது. அஃது எல்லாவிதக் கலையு யிர்ப்பண்பையும் பல்வகைப் பெருக்கத்தையும் கொண்ட பெருவழக் கானபேச்சின் தன்மையையுடையது; முதல் இயலில் குறிப்பிட்டது போல் அத்தகைய பேச்சில் அவர் தலைசிறந்த முதல்வராவார். சில இடங்கள் அவர் கவிதை தெளிவுக்குறைவுள்ளது என்பது உண்மையே; ஆஞல் அவர் உயர்வான மறைமெய்ம்மை சார்ந்த அநுபவங்களைக்கூறும் போதுதான் இங்ஙனம் நேரிடுகின்றது. இயல்பாகவே மறை மெய்ம்மை சார்ந்த அநுபவங்கள் யாவும் தனிமுறை உரிமையுடையவை; அவற்றை ஒருவர் உணரலாம் அல்லது உணராது போகலாம். அவற்றை உணர்பவர்கட்கு அவை உண்மையானவையாதலின் அவற்றின் விளக்கவுரை தேவை

இல்லை; அவற்றை உணராதவர்கட்கு அவை உண்மையற்றவை, புரியாதவை; குறியீடுகளின் துணையின்றி எல்லா மறை மெய்ம்மை யாளர்களும், அவர்கள் இந்துக்களாயினும், கிறித்தவர்களாயினும், சூஃபிகளாயினும், ஒரு மறைமெய்ம்மை சார்ந்த அநுபவத்தின் சரி யான இயல்பினைப் பிறருக்கு எடுத்துரைப்பது தமது ஆற்றலுக்கு அப்பாற்பட்டது என்பதைக் காண்பார்கள். பிற மறைமெய்ம்மை யாளர்களைப் போலவே, வேமனரும் தமக்கேயுரிய குறியீடுகளைக் கையாளுகின்றார். ''உறக்கத்துக்கு அப்பால் உறக்கம்'', ''அறிவுக்கு மேல் அறிவு'', ''பரந்த வெளியினுள் பரந்தவெளி'', ''நோக்கி னுள் நோக்கு'', ''திரைக்குப் பின்னால் ஒளி'', ''உடலினுள் ஆன்மா, ஆன்மாவினுள் உடல்''— அவர் கையாளும் பல குறியீடுகளில் இவை சிலவாகும். பொதுவாகக் கருதுமிடத்து வேமனரின் மறை மெய்ம்மை சார்ந்த பாடல்கள் தெளிவற்றிருப்பினும், மீமெய்ம் மையியல் சார்ந்த (sur realistic) கவிதையை விடவும், கருத் தியற் கலையை விடவும் அவை அதிகத் தெளிவற்றவை அல்ல. சில விஷயங்களைக் குறிப்பினால் தெரிவிக்கலாமேயன்றி விளக்கம் செய்தல் இயலாது என்பதை ஒப்புக்கொள்ளாமலேயே வேமனரின் சீடர் களில் சிலர் விளக்கமுடியாதனவற்றை விளக்குவதில் முயன்று தம்மை ஏளனத்திற்குள்ளாக்கிக் கொள்ளுகின்றனர்.

தன்னுடைய கவிதைக்கு வேமனரால் தேர்ந்தெடுக்கப்பெற்ற யாப்பு **'ஆட்டவெலதி'** என்பதாகும். அஃது அவரால் புனையப் பெறவில்லை; அஃது மக்களிடையே வழங்கிவந்த மிகப்பழைய யாப் பாகும். அதன் சொல்லுக்குச் சொல் சரியான பொருள் ''நாட் டியமாடும் ஆரணங்கு'' என்பதாகும். நன்னயரிலிருந்து கீழ் நோக்கி வந்தால், நூற்றுக்கணக்கான கவிஞர்கள் அதனைப் பயன் படுத்தியுள்ளனர்; ஆனால் வேமனரைத் தவிர ஒருவராலும் அதனை வேமனரைப்போல் ''நாட்டியமாடச்'' செய்ய இயலவில்லை. காளி தாசருக்கு **'மந்தா கிராந்தா'** என்ற யாப்பு அமைவதுபோலவும், பவபூதிக்கு **'சிகரிணி'** அமைவது போலவும் திக்கனுவுக்குக் **'கந் தம்'** அமைவதுபோலவும், ''**சீசம்**'' சீநாதருக்கு அமைவதுபோல வும் வேமனருக்கு **'ஆட்டவெலதி'** அமைகின்றது. ஆங்கில இலக் கியத்தினின்றும் ஒரு போகான இரண்டு எடுத்துக்காட்டுகளைக் குறிப் பிடலாம். செகப்பிரியர் எதுகையில்லாத செய்யுட்களையும் (செந் தொடைப் பா), போப் வீரகாவியம் சார்ந்த ஈரடிப்பாவையும் கையாண்டதைப்போலவே வேமனரும் அதே செப்பிடு வித்தையை **'ஆட்டவெலதியிடம்'** கையாண்டார். வீரகாவியம் சார்ந்த ஈரடிப் பாவைப்பற்றிப் பேசும் லிட்டன் ஸ்ட்ரேச்சி என்பார் ''அது போப்பின் கையில் அதன் இயல்பில் முடிவான நிறைவினை—அதன் இறுதியான சிறப்பினை—அதன் தலைசிறந்த நிறைவேற்றத்தை

அடைந்தது'' என்று கூறுவார். அங்ஙனமே வேமனரின் கையில் '**ஆட்டவெலதி**' அச்சிறப்பினை அடைந்தது. வேமனருக்கு முன்னர் எந்த ஒரு தெலுங்குக் கவிஞராலும் அதன் இயல்பான எளிமை யையும் அணியின்மையையும் அதன் சந்தத்தையும் இடையொழுக் கினையும் முழுமையாக உணரவோ அல்லது முழுமையாகப் பயன் படுத்திக்கொள்ளவோ இயலவில்லை.

வேமனரின் பாடல்களைச் சேகரித்து வெளியிட்ட பதிப்பு களில் '**ஆட்டவெலதி**'யைத் தவிர வேறு யாப்புகளிலும் புனையப் பெற்ற பாடல்களைக் காண்கிறோம். ஆனால் அவை அவருடைய முதன்மையான பகுதியுடன் எந்த அளவிலாவது அருகில் வரமுடிய வில்லை. அவை அவருடைய மாதிரியாக அமைந்த எளிமையிலும் நேர்மையிலும், குத்திக்காட்டும் பண்பிலும் குறைபடுகின்றன. இத்தகைய எல்லாப் பாடல்களுமே போலியானவை என்று கருதப் பெறல் வேண்டும் என்று இரால்லபள்ளியர் குறிப்பாகக் கூறுகின் றார்; அவர் கூறுவது சரியேயாகும்.

வேமனர் தன்னுடைய '**ஆட்டவெலதிப்**' பாடலைக் கை நேர்த்தியுடன் கையாளும் முறை டாக்டர் ஜி. பி. கிருஷ்ண ராவ் என்பாரால் திறமையுடன் இங்ஙனம் சுருக்கமாகக் கூறப்பெறு கின்றது:

> பொதுவாகக் கூறுமிடத்து, அவர் (வேமனர்) தன் '**ஆட்ட வெலதி'யின்** முதல் இரண்டு வரிகளைத்தான் உணர்த்தவேண் டும் எனக் கருதும் கருத்தினைக் கூறுவதற்காக ஒதுக்கி வைக்கின் றார்; அதனைப் படிப்போர் மனதில் ஆழப்பதித்தற்கு ஒளிதுலங் கும் ஒப்புமையை மூன்றாவது வரியில் தருகின்றார். நான்காவது வரி ஓர் அணிகலன்போல்—மகுடம்போல்—அமைகின்றது. இங் ஙனம் பாகுபாடு செய்து ஆராயுங்கால் பாடலின் முழு அழகும் மூன்றாவது வரியில் தாம் பெற்றுள்ள ஒரே ஒரு ஒப்புமையில்— எடுத்துக்காட்டில்—அமைகின்றது என்பது தெளிவாகும். அவர் நன்கு எறியும் எறிபடை சிலசமயம் குறி தப்பினும் தப்பலாம்; ஆனால் அவரது ஒப்புமை தப்பவே தப்பாது. பேரளவில் அவ ருடைய கவிதைத் திறனும் பெருமையும் அதில்தான் சார்ந்துள் ளன. அவருடைய கையில் அது புதுமையையும் செழிப்பையும் பெற்றுள்ளது; அடிக்கடி அது பொருள்செறி தொடர்வடி வத்தை எய்திப் படிப்போரை வியப்பில் ஆழ்த்துகின்றது. காளி தாசரை ஓர் உவமைக்கவிஞர் என்றால், வேமனரை ஓர் ஒப் புமைக் கவிஞர் என்று சொல்லலாம்.

வேமனர் தமது ஒவ்வொரு பாடலிலும் ஒப்புமையைக் கையாளவில்லை என்றபோதிலும் பெரும்பாலானவற்றில் அதனைக்

கையாண்டுள்ளார் என்று நிலவும் பொதுக்கருத்தினை டாக்டர் கிருஷ்ணராவ் அவர்களும் ஒப்புக்கொண்டுள்ளார் என்பது தெளிவு. ஆனால் ஒரு புள்ளிவிவரப் பகுப்பாய்வால் பதினைந்து விழுக்காடு கவிதைகள் மட்டிலும்தான் ஒப்புமையைத் தாங்கிக்கொண்டுள் ளன என்று தெரியவருகின்றது. ஆனால் இவற்றிலும் சொல்லமைப் பில் சிறு மாற்றத்துடன் அல்லது மாற்றமேயின்றிக் கூறியது கூறலே அமைந்துள்ளது. மேலும், வேமனருக்கே உரிய வெறுப் பினை விளைவிக்கும் நாயும் கழுதையும் ஒரு சில ஒப்புமைகளில் சிறப்பாகத் தோன்றுகின்றன. ஆனால் வேமனர் எப்பொழுதுமே இந்த ஒப்புமைகளைக் கையாளுகின்றார் என்ற எண்ணத்தைத் தரும் அளவுக்கு மிகப்பொருத்தமாகவும் ஒளிதுலங்கும் முறையிலும் சில சமயங்களில் மகிழ்ச்சியுடன் வியப்பூட்டும் வகையிலும் அவர்அவற் றைக் கையாளுகின்றார். அவருடைய பாடற்கோலத்தின் அமைப்பு பற்றி இன்னும் ஒரு குறிப்பினை ஈண்டுக் காட்டலாம். விவாதமுறை யில் வேமனர் மிகத் திறமையுள்ளவர் என்பது உண்மையே. ஆனால் சிலர் கூறுவதுபோல் கிட்டத்தட்ட தனது எல்லாப் பாடல்களி லுமே முதலடியில் கருத்தைக் கூறுதலும் இரண்டாவது அடியில் முரணை அமைத்தலும் மூன்றாவது அடியில் இணைப்பைக் காட்ட லும் அமைந்துள்ளன என்று கருத்தினைத் தெரிவிப்பது சரியன்று. உண்மையில் அவருடைய பாடல்களில் நூற்றுக்கு மேற்படாதவை களில்தான் குறிப்பிட்ட இந்தக்கோலம் காணப்பெறுகின்றது.

மொழி பெயர்ப்பில் கவிதைகள் அழகும் வேகமும் இழந்தா லும், வேமனரின் மூன்றாவது வரிகளில் சிலவற்றை—வினா வடிவில் அமைந்துள்ளவற்றை—இவ்விடத்தில் எடுத்துக்கூறலாம். விளக்கினை ஏற்றாத வரையில் இருட்டினை எங்ஙனம் ஓட்டமுடியும்? ஒரு நாயின் வாலில் தொங்கிக்கொண்டு கோதாவரி ஆற்றினைக் கடக்க முடி யுமா? குரங்கால் யானையை விடுவித்தல் கூடுமா? பாலினால் கழுவிக் கரியை வெண்மையாக்க முடியுமா? ஏரி வற்றிவிடின் கொக்குகள் அதனைத் துறந்துவிடாவா? சிறுவர் தாங்கினால் தீவட்டி சிறிதாவது குறைந்த ஒளியுடன் பிரகாசிக்குமா? ஓநாயின் சாவுக்கு ஆடு ஏன் பரிந்து புலம்பவேண்டும்? நாய்வாலை நிமிர்த்த முடியுமா? பொம்மை கட்கு நீதி புகட்டமுடியுமா? நறுமணப்பொருள்களின் சுமையைத் தாங்கி வருவதனால் கழுதை சற்று உயர்ந்ததாகுமா? மேலிருந்து கீழ் நோக்கி சுவர் கட்டமுடியுமா? எவ்வளவு உயரத்திற்குவேண்டு மானாலும் ஒரு பந்தைத் தூக்கி எறிந்தால், அது அங்கே தங்கி விடுமா? தங்க மோதிரம் வெண்கல மோதிரத்தைப்போல் உரத்த ஒலியினை உண்டாக்குமா? ஒரு பெரிய மலையும் உருக்காட்டும் ஆடி யினுள் சிறியதாகத் தோன்றவில்லையா? கோதாவரி நதியில் மூழ்கி நாய் சிங்கமாக முடியுமா? சேற்றில் புரண்டு களிக்கும் பன்றி

பன்னீரின் பெருமையை உணர முடியுமா? எருமைக்கடா எவ்வளவு பெரிதாக இருப்பினும் அஃது ஒரு யானைக்குச்சம மாக முடியுமா? ஆணின் வேலையைச் செய்வதால் பெண் ஆணாக முடியுமா? உணவைப் பரிமாறும் கரண்டி அதன் சுவையை எங்ஙனம் அறியமுடியும்? ஆலமரம் பெரிதாக இருந்தபோதிலும் அதன் விதை மிகச் சிறியதாக இருக்கவில்லையா? தலைகள் வழுவழுப்பாகச் சிரைக்கப் பெற்றிருந்தாலும் சிந்தனைகள் தூய்மையானவையாக முடியுமா? வேமனவின் பாடல்களில் மூன்றாவது வரியில் அமையும் இவையும் இவை போன்ற பலவும் தெலுங்கில் பெருவழக்காகத் திகழும் பழமொழிகளாகும்.

வேமனரின் பிற கொடைகள் ஒருபுறம்இருக்க, அவரிடம் நகைச்சுவை உணர்வு உரமாக அமைந்திருந்தது. ''என்னிடம் நகைச்சுவை உணர்வு மட்டிலும் அமைந்திராவிடில் நீண்ட நாட்களுக்கு முன்னரே தற்கொலை புரிந்து கொண்டிருந்திருப்பேன்'' என்று காந்தியடிகள் ஒருமுறை கூறினார். இந்தச் சொற்கள் வேமனரிடமிருந்தும் வந்திருத்தல்கூடும். வேமனரும் அத்தகைய உயர் நோக்கமுடையவர்; தான் ஆதரித்த உயர்நோக்கங்களில் தன்னை மிகவும் உள்ளடக்கிக் கொண்டிருந்தவர்; ஆகவே அவரிடம் வேடிக்கையாகப் பேசவும் சிரிக்கவுமான அறிவுத்திறன் அமைந்திராவிடில் அவரும் தற்கொலைபுரிந்துகொண்டிருப்பார். இந்தத் திறனும் அவருடைய கவிதைக்குத் தன் சொந்த வேகத்தை அளிக்கத்தான் செய்தது. கஞ்சப் பிரபுக்கள் அவருடைய நகைச்சுவைக்குத் தனிப்பட்ட இலக்காகின்றனர். அவர்களைப் பற்றி அவர் கூறுகின்றார்: ''கஞ்சப் பிரபு ஒருவரை ஒழித்துக்கட்டவிரும்பினால் அவருக்கு நஞ்சூட்ட வேண்டியதில்லை; அல்லது வேறு தீவிரமான நடவடிக்கையையும் மேற்கொள்ள வேண்டியதில்லை. ஒரு பெரிய நன்கொடை வழங்குமாறு கேளுங்கள்; இந்த அதிர்ச்சியே உடனே அவரைக்கொன்றுவிடும். வறட்டுப் பசுவினிடம் பால் கறக்க விரும்பினால், உங்கட்குக் கிடைப்பதெல்லாம் விலாவெலும்புகளில் உதைதான்; ஒரு கஞ்சப் பிரபுவினிடமும் இதைவிட அதிகமாக ஒன்றும் நிகழப்போவதில்லை. கஞ்சப்பிரபுவின் குடும்பத்தில் நிகழும் சாவு மிக உரக்கமும் நெடு நேரமும் அழச்செய்கின்றது; காரணம், இழவு வினைக்குரியசெலவுகள் பற்றிய எண்ணத்தினால் அவருடைய இதயம் கீரப்படும்.'' உண்மையான ஆன்மீக அறிவுரைஞர் தனிமையான இடங்களில் தான் காணப்பெறுவர் என்ற கருத்தினால் தங்களை ஏமாற்றிக் கொள்பவர்களைக் கேலிசெய்யும் கவிஞர் கூறுகின்றார்: ''வானுலகத்திற்கு வழிகாட்டும் ஆசாரியர் ஒருவரைக் காணலாம் என்று நம்பிக்கையால் சொக்கியவண்ணம் ஓர் இருளடைந்த குகையினுள் புகுவீர்களாயின், நீங்கள் விரும்பும் நேரத்தைவிட மிக விரை

வாகவே முரட்டுத்தன்மை வாய்ந்த விலங்கு ஒன்று விரைந்து செய லாற்றிவிடும்.'' சார்லஸ் டிக்கென்ஸைப்பற்றி கூறப்படுவதுபோல் வேமனரின் நகைச்சுவை ''ஓரளவு சமயப் பரப்பாளரின் நகைச் சுவையே''யாகும்; சிரிப்பினை எழுப்புவதில் மட்டிலும் அது முய லாமல் ஒரு தெளிவான நோக்கத்திற்கு உடந்தையாகவும் நின்று உதவுகின்றது.

வேமனர் மேலும் தனது ஆயுதச்சாலையில் சமமான அளவில் கேடு விளைவிக்கக்கூடிய எள்ளல், வஞ்சப்புகழ்ச்சி என்ற இரண்டு ஆயுதங்களைக் கொண்டிருந்தார். டாக்டர் ரெட்டி கூறுவதுபோல், வேமனர் ''மூடநம்பிக்கையுடன் தொடர்பு கொள்ளுங்கால் வாதம் புரிவதால் பயன் இல்லை; காரணம், மூடநம்பிக்கை பகுத்தறிவி னால் திருந்தக்கூடியதன்று என்ற வால்டயர் கூறிய பெருமிதமான முதுமொழியில்''முழுநம்பிக்கை கொண்டிருந்தார். ஆகவே வால் டயரைப்போலவே ''வேமனரும் வாதம்புரிவதில்லை.ஆனால் மிகத் தீவிரமாகத் தாக்கிச் சாக செய்யக்கூடிய காயத்தை உண்டாக்கி இழிவான மேன்மைக்கு உரிமை கொண்டாடும் போலிக்கொள்கை களை ஏளனத்திற்கு இடமாக்குகின்றார்.'' வேமனரின் எள்ளலுக் கும் வஞ்சப்புகழ்ச்சிக்கும் நூற்றுக்கணக்கான எடுத்துக்காட்டுகள் தரலாம். உள்ளார்ந்த உயிர் நிலையைப் புறக்கணித்து சமயத்திற்குப் புறம்பான பகுதிகளைப் பின்பற்றுபவர்களை நோக்கி வேமனர் கூறு வது: அடிக்கடி நீராடலால் வீடுபேற்றினை அடைய முடியுமா? அப்படியானால் மீன்கள் யாவும் காப்பாற்றப்பெறுதல் வேண்டும். உடம்பெல்லாம் திருநீற்றைப் பூசிக்கொண்டு வீடு பேற்றினை அடையமுடியுமா? அப்படியானால் கழுதையும் சாம்பலில் புரள் கின்றது.சைவ உணவுக்கொள்கையினின்று சமயத்தை உண்டாக்கிக் கொண்டு உடல்பற்றிய நிறைவினை அடையக்கூடுமா? அப்படி யானால், வெள்ளாடுகள் உங்களைவிட அதிக முன்னேற்றம் அடை கின்றன.ஒரு சூத்திரருடைய மகனும் கட்டாயம் சூத்திரராகஇருக்க வேண்டுமானால் வசிட்டரை எங்ஙனம்அந்தணர்களில் சிறந்தவராகக் கருதமுடியும்? தேவலோகத்து ஆடலணங்காயினும் ஊர்வசி என்ற சூத்திரப் பெண்ணின் மகனல்லவா அவர்? மேலும் தீண்டத்தகா தார் வகுப்பைச் சார்ந்த பெண்ணின் கணவரும் தீண்டாதாராகவே நடத்தப்பட வேண்டுமானால், வசிட்டரைப்பற்றி நீங்கள் எங்ஙனம் பெருமிதங்கொள்ள முடியும்? அவருடைய துணைவி அருந்ததி தீண் டாதார் வகுப்பைச் சார்ந்த பெண்ணன்றோ? நீங்கள் வேதபலியை நிறைவேற்றுவதாக இருந்தாலும், அல்லது திருத்தலப் பயணமாக ஒரு திவ்விய தேசத்துக்குச் சென்றாலும் மயிர்வினைஞர் சிரைப்ப தற்காகவும், புரோகிதர் உங்கள் ஆன்மாவைக் காப்பதற்காகவும் நீரைத் தெளிக்கின்றார்கள். புரோகிதரால் தெளிக்கப்பெற்ற நீர்

அதிகப்பயன்தரத்தக்கதென்று ஒருவரும் சொல்ல முடியாது; ஆனுல் மயிர்வினைஞரால் தெளிக்கப்பெற்ற நீர் அதிகப்பயன் விளைவித்தது என்பதற்கு நன்முறையில் சிரைக்கப்பெற்ற உங்கள் தலையே தெளிவான சான்ருக அமைகின்றது. அடுத்து, புராணத் தொகுதிகளின் பால் தன் கவனத்தைச் செலுத்திய வேமனர் கூறுகின்ருர்: திருமால் திருப்பாற்கடலின்மீது படுத்து இளைப்பாறுகின்ருர் என்பதை நீங்கள் நம்புகின்றீர்கள். அப்படியிருக்கும்போது அவர் கண்ணனுக இருந்தபோது ஆயர் மனைகளில் பாலை ஏன் களவாடினுர்? களவாடிய பால் அதிகமாகச் சுவைக்கின்றது என்பதற்காகவா அவர் அங்ஙனம் செய்தது? அஃது ஒரு சூழ்ச்சிச்செயல் என்று ஐயுருமல், இராமர் தன் இளம் துணைவியைத் தனியேவிட்டுப் பொன் மானைத் தொடர்ந்து சென்ருர். அப்படியானுல், சிந்தனையற்றவர் எங்ஙனம் கடவுளாக இருக்கமுடியும்? நீங்கள் நம்புவதுபோல் நெருப்புக்கணையொன்றினைச் செலுத்தி இராமர் கடல்நீரை வற்றச் செய்யவில்லையா? அப்போது அவர் ஏன் கடலைக் கடக்கவில்லை? வழி தெளிவாக இருக்கும்போது பாலத்தை ஏன் கட்டினுர்? நான்முகன் ஒருவருக்குச் செல்வத்தையும் பிறிதொருவருக்கு ஈகைப் பண்பையும் தருகின்ருர். வேண்டுமென்றே தவருகச் செய்யும் பண்பு ஒரு கடவுளிடம் இருப்பது என்னே!

டாக்டர் ரெட்டி அவர்கள் கூறுவதுபோல், ''வேமனரின் நடை இங்ஙனம் கசப்பும் காரசாரமுமான ஏளனத்திலிருந்து மென்மையான ஏளனம் வரையிலும், பணிவிணக்கமுடைய வஞ்சப் புகழ்ச்சி வரையிலும், இனிய நகைச்சுவை வரையிலும் பரவிச் செல்லுகின்றது.'' அவர் எடுத்துக்கூறும் பொருள்களும் அங்ஙனமே விரிந்து செல்லுகின்றன. மனிதத் தொடர்பும் மனித நலமும் இல்லாத எதுவும் அவருக்குப் பயனற்றதாகவே அமைந்தது. கதேயைக் குறித்து மாத்யூ ஆர்னோல்டு சொன்னுர்:

அவரொருநன் மனிதர்;எல்லாச் செயல்களிலும் என்றும்
அனைவருக்கும் தனிப்பரிவு காட்டுகின்ற பண்பர்;
அவரைப்போல் மாண்புடைய பிறமனிதர் தம்மை
அகிலத்தில் எவ்விடத்தும் யான்கண்ட தில்லை.

இடரின்கண் வீழ்ந்துகிடக் கும்மனித இனத்தை
எடுத்துக்கொண் டங்கங்கே இளைத்தகுறை பாட்டைப்
படரளிக்கும் பெரும்புண்ணைத் தெளிவாகக் கண்டார்
பரிவுடனே தன்விரலை அங்கங்கே சுட்டி.

''மக்களே நீவிர் வருந்தி நாளும்
மிக்க துன்பம் மேவி வாடுதல்
இங்குதான் இங்குதான் இங்குதான் என்பார்.''

அங்ஙனமே, வேமனரும் சொன்னார். அவர் மனித நோய்களைக் கண்டறிந்ததுடன் அவற்றிற்கு மருந்துகளையும் குறிப்பாகத் தெரிவித்தார். மனிதனுக்குத் தொண்டு புரிவதில் அவர் எப்பொழுதும் முன்நோக்கியே சென்று கொண்டிருந்தார். ஊர்ஊராகவும், சிற்றூர் சிற்றூராகவும், வீடுவீடாகவும் சென்றார். எல்லா இடங்களிலும் மனிதனிடமே பேசினார்; அப்பேச்சினைக் கவிதையாகவே பேசினார். பதிவு செய்யும் நோக்கத்துடன் பேசவில்லையாதலின், அவர் கவிதைகளைப் பதிவு செய்வதில் அக்கறை எடுத்துக்கொள்ள வில்லை. அவர்மீது கொண்டுள்ள அன்பு காரணமாகவும் மதிப்புணர்ச்சி காரணமாகவும் அவர் சீடர்களில் சிலர் அக்கவிதைகளைக் குறித்து வைத்தனர். கற்றவர்கள் இல்லையாதலின் அவர்கள் பனையோலைகளில் எழுதி வைத்ததெல்லாம் சிலசமயங்களில் பிழைகள் மலிந்தவையாகவே அமைந்தன. மூலப்படிகளிலிருந்து மேல்படிகள் எடுத்தபொழுது மேலும் அதிக பிழைகள் நுழையலாயின. படியெடுக்கும் சிலர் ஒரு சொல் அல்லது வரி தெளிவில்லாதிருந்தால் அவர்களே வேறொரு சொல் அல்லது வரியைச்செருகி நிலைமையை மேலும் சீர்கேடாக்கினர். இதற்கெல்லாம் மேலாக வேமனரைப் பாராட்டுபவர்களும் குறைவுபடுத்துபவர்களுமாகச் சேர்ந்து தங்களுடைய பாடல்களையே போலியாகச் செருகிவிட்டனர்.

பிரௌன் காலத்திலிருந்து மூன்றாயிரத்துக்கு மேற்பட்ட பாடல்களைப் புதிதாகக் கண்டறியப்பெற்ற கையெழுத்துப்படிகளினின்றும் சிலரிடம் வாய்மொழிப் புழக்கமாக இருந்தவற்றிலிருந்தும் சேகரம் செய்யப்பெற்றன. அவற்றுள் எத்தனைப் பாடல்கள் உண்மையாகவே அவருடையவை என்பதுபற்றி இன்னும் தீவிரமான ஐயத்திற்கிடமாக உள்ளது. பிரௌன் திரட்டியவற்றிலும் கூட ஒரு கணிசமான தொகை ஐயமற்ற இடைச்செருகலான பாடல்களேயாகும். என்றபோதிலும் வேமனரின் பாடல்களடங்கிய திறனாய்ந்த திட்டமான பதிப்பொன்றைக் கொண்டுவர இதுகாறும் யாதொரு முயற்சியும் மேற்கொள்ளப்பெறவில்லை. அவருடைய வெளியீட்டாளர்கள் செய்ததெல்லாம் பிரௌன் பதிப்பிலிருந்த மூலப்பகுதியை நேர்மையின்றி மாறுதல் செய்ததேயாகும்.

நிகழ்ச்சிகளின் வருந்தத்தக்க நிலையைச் சரிப்படுத்துவதில் ஏதாவது செய்வதற்கு இது தக்க காலமாகும். உண்மையானவை போல் தோன்றும் **கந்தம்** என்ற யாப்பில் அமைந்த சில பாடல்கள் நீங்கலாக **'ஆட்டவெலதி'** என்ற யாப்பிலமையாத எல்லாப் பாடல்களும் நீக்கப்பெற்றும், ஒரே கருத்து திரும்பத்திரும்ப வரும் பாடல்களுள் சிறந்தவற்றை மட்டிலும் விடாமல் வைத்திருந்தும், வேமனரின் அடிப்படையான திட நம்பிக்கைகட்கு எதிரான

கருத்துகளைத் தெரிவிக்கும் எல்லாப் பாடல்களும் இடைச்செருக லானவை என்று வீசியெறிப் பெற்றும் திருத்தத்தை மேற்கொண் டால், எஞ்சியவை யாவும் எல்லா வகையிலும் இரண்டாயிரத் திற்கு மேற்படா. இவற்றை ஒன்றுக இணைப்பதில் வேமனரை மேம்படச் செய்யவேண்டும் என்ற நோக்கத்தில் தப்புவழியான முயற்சியை மேற்கொள்ளலாகாது. அவர் மக்களிடம் மக்கள் மொழியிலேயே பேசினுர். அதனுல் அதன் பேச்சுவகை வனப்புக் கூறு முழுவதும் காப்பாற்றப்பெறுதல் வேண்டும். இலக்கண, யாப்பு விதிகளை விடச் சுருக்கத்திலும் பயனுள்ள வேகத்திலுமே அவர் அக்கறைகொண்டார்; அந்த விதிகள் புறக்கணிக்கப்பெறல் வேண்டும் என்று அவர் கருதினுல் சிறிதும் தயக்கமின்றிஅவ்வாறே செய்தார். இங்ஙனம் அவருடைய விதிமீறல்கள் யாவும் ஆழ்ந்து ஆராய்ந்து செய்யப்பெற்றவையாதலின், அவர் பாடல்களைத் திருத்துவதில் ஒன்றும் மேற்கொள்ளப்பெறலாகாது. அவரதுவாணு ளில் ஒரு நிலையில் யாரோ ஒரு பிடிவாதக்காரரால் இலக்கண விதி கள்பற்றி அவர் குறைகூறப்பெற்றிருக்கலாம்; இல்லாவிடில், அவர் எதிர்த்துக்கூறியிருக்கமாட்டார். ''அந்த இழிந்த பாதகன் ஓர் உயர்தரக் கவிஞர்போல் கவிதைகள் இயற்ற முடியாது; எனினும் குறைகாணத் துணிகின்றுன். பானைகளின் குவியல் ஒரு நாயால் உருட்டித் தள்ளப்பெறலாம்; ஆனுல் அதனுல் குவியல் அமைக்க முடியுமா?'' ஆகவே, இப்பொழுது தேவைப்படுவது வேமனரை இலக்கண விதிகள் யாப்பு விதிகள் ஆகியவற்றுலான ஒடுக்கமான உறையினுள் அடக்குவதல்ல; பதிப்பிப்பதில் நவீன அறிவியல் முறைகளின்படி அவருடைய பாடல்களின் ஒரு திட்டமான பதிப் பொன்றினைத் தயாரிப்பதே உடன் தேவைப்படுவது.

வேமனரின் கையெழுத்துப் படிகள் இழிநிலை வரம்பினைத் தொடும் அளவுக்குச் சில பாடல்களைக் கொண்டுள்ளன. அவசியம் நேரிடுங்கால் அவர் கூர்மையாகவும், காரசாரமாகவும், கடிப்புடைய தாகவும் இருக்க நேரிடுகின்றது. ஆனுல் ஒழுக்கக்கேட்டிற்குச் சலுகை கொடுக்கின்றுர் என்ற குற்றத்திற்கு ஆளாக இருந்திருக்க முடியாது. அதில் கும்மாளத்துடன் கூத்தாடுவோரை அவர் தெளி வாகவே கடிகின்றுர். அவர்களை நாகரிகமற்றவர்கள் என்கின்றுர்; சேற்றில் புரளும் பன்றிகள் எனக் குறிப்பிடுகின்றுர். ஆகவே, அவ ருடைய திட்டமான மதிப்பு ஒழுக்கக்கேடு இன்றி இருக்குமாறு அமைதல் வேண்டும்.

வேமனருக்கு நேர்மையாக இருக்க வேண்டுமாயின், இரச வாதத்தைப்பற்றிப் பிதற்றும் பாடல்களும் நீக்கப்பெறுதல் வேண் டும். ஞானம் எய்திச் சீர்படாத நாட்களில், எளிதாகவும், விரை வாகவும் செல்வ நிலை எய்துவதற்கு அவர் **புருடவேதியின்** மீது

நம்பிக்கை கொண்டிருக்கலாம். ஆனால் அந்தப் பொய்த் தோற்றக் கொள்கையைக் கைவிடாதிருந்தால், எந்த வடிவத்திலிருந்தாலும் அறியாமையையும் மூடநம்பிக்கையையும் கண்டிக்கும் ஒரு பேரா சானாக அவர் திகழ்ந்திருக்கமுடியாது. ஆகவே, நாம் இரச வாதத்தைப்பற்றிய வாய்பாடுகளைக் கொண்டுள்ளவைபோல் தோன்றும் பாடல்கள் யாவும் செருகு கவிகள் என்றே ஊகிக்க வேண்டும். உண்மையாகவே அவை வேமனரது கவிதைகளாகவே இருப்பினும், தன் சீடர்களுள் அறிவற்றும் பேராசையும்கொண்டு இரசவாதத்தின் இரகசியங்களைக் கூறுமாறு தொந்தரவு செய்யும் ஒரு சிலரை ஏமாற்றுவதற்காகவே அவர் அவற்றை இயற்றி இருக்கலாம். எப்படியிருந்தபோதிலும், முட்டாள்தனமான அந்தப் பாடல்களையும்கூட கைவிட்டேயாகவேண்டும்.

இவையெல்லாம் செய்யப்பெற்ற பின்னரும்கூட, வேமனரின் கவிதைகளில் அதிக அளவு தங்கத்துடன் சிறிதளவு மாசும் மண்டியும் சேர்ந்திருத்தலையும் காணலாம். கவிஞர்களிலேயே மிகச்சிறந்தவர்களும்கூட இதனைத் தவிர்க்கமுடியாது. அதிலும் சிறப்பாகத் தன்னுடைய 'உடனடியான சிந்தனையை' முயற்சியின்றிப் பாடும் கவிஞராக இருப்பின், அவருடைய நூல் பண்படாத் தன்மையுடன் திகழத்தான் செய்யும். மேலும் நாம் ஏற்கனவே கூறியதுபோல, வேமனர் இலக்கியத்தைவிட வாழ்க்கையைப் பற்றியே கவலை கொண்டவராக இருந்தார். ஒரு கலைஞரைப் போலன்றி ஒரு வீரனைப் போலவே அவர் சொற்களைக் கையாளுகின்றார். வாதத்தில் விருப்பற்றிருக்கும் நிலையில், அவர் அறம் உரைக்கும் பண்பாளராகின்றார்; இந்நிலையும் அவருடைய கவிதைகளைப் பண்படாத தன்மையில் கொண்டு செலுத்தும். கவிஞர்களைப் பற்றியும் கவிதையைப்பற்றியும் அவர் குறிப்பிடுங்கால், ஒருவர் ஒப்பற்ற மதிப்புடன் திகழக்கூடிய ஒரே ஒரு கவிதையை எழுதினாலும் அவர் ஒரு சிறந்த கவிஞராகவே கொள்ளப்பெறுதல் வேண்டும் என்கின்றார். ''ஒரு கூடை நிறைய இருக்கும் கண்ணாடிக் கற்களால் யாது பயன்? ஒரே ஒரு நீலமணி எல்லையில்லாத மதிப்புடன் இருக்கவில்லையா?'' என்று கேட்கின்றார் அவர். ஆனால், வேமனர் இவ்வுலகிற்கு, ஒரு நீலமணியை மட்டும் அல்ல, நூற்றுக்கணக்கான விலை மதிப்பிட முடியாத நீலமணிகளை வழங்கிவிட்டார்.

# 7. இயற்கையின் மெய்விளக்க அறிஞர்

**''இயற்கையின் மெய்விளக்கத்துறை அறிஞர்களுள் ஒருவரும், மட்டுமதிப்பற்ற இயற்கையறிவுடன் கூடியவருமாகிய ஒரு நாட்டுப்புறத்தார்.''—ஹோரஸ்**

*கற்றுத்துறைபோய புலவராக இல்லாதபோதிலும் பிரஸ்தான திரயத்தைப்பற்றி[1] (மூன்று முக்கிய நூல்களைப்பற்றி) அறியாமையுடையவராக இருந்தபோதிலும், வேமனர் தன் சொந்த உரிமைப்படி ஒரு மெய்விளக்க அறிஞராகவே திகழ்ந்தார். இந்த இயலின் தலைப்பில் மேற்கோளாகக்காட்டிய ஹோரஸின் சொற்களில், ''இயற்கையின் மெய்விளக்கத்துறை அறிஞர்களுள் ஒருவர்'' என்று அவரை நாம் வழங்கலாம். வாழ்க்கையைப் பற்றிய அவருடைய புதுப்பாங்குடைய உள்நோக்குகளும் மிகுந்த நுகர்வறிவுகளும் சமூக மெய்விளக்கம், நன்னெறி மெய்விளக்கம், சமய மெய்விளக்கம் என்ற மூன்று மெய்விளக்கத்துறைகளைக் கண்டறிவதற்கு ஆற்றலளித்துள்ளன. இந்த மூன்றனுள் ஏதாவது ஒன்றைக்கூட ஓர் ஒழுங்கமைப்பாகச் செய்யவில்லை என்பது உண்மையே; எந்த ஓர் ஒழுங்கமைப்பில் முயன்றாலும் அவருடைய தனித்திறமை குழம்பிய பாங்கில் புரட்சி செய்தது; மனப்பான்மையும் வெடிக்கக்கூடிய நிலையில் இருந்தது. உண்மையில் தன்னுடைய அறிவிப்புகளிலேயே ஒன்றுக்கொன்று முரணாகவுள்ளவற்றையும் கூட அகற்றுவதில், முயற்சி எடுக்கவில்லை. அவற்றில் அவருடைய கவனம் ஈர்க்கப்பெற்றிருப்பின், அவரும் வால்ட் விட்மனோடு சேர்ந்து பின்வருமாறு கூறியிருந்திருப்பார்:*

> *நானே என்னை மறுத்துரைக்கின்றேனா?*
> *மிகவும் நல்லது நானே மறுத்துரைக்கின்றேன்.*
> *[நான் மிகப்பெரியவன், எண்ணிறந்த தன்மைகள்*
> *என்பாலுள்ளன.]*

---

[1] *மூன்று முக்கிய நூல்களாவன: உபநிடதங்கள், பிரம்ம சூத்திரங்கள், பகவத்கீதை. இவை இந்திய மெய்விளக்கத் துறையின் மரபுப்படியமைந்த நூல்களாகும்.*

சமூகமெய்விளக்க அறிஞரான வேமனர் மனித சமத்துவ ஆதரிப்பாளராகத் திகழ்கின்றார். பல படிகளையும் இழிவுகளையும், குலமரபுச் சின்னங்களையும் விலக்குகளையும் கொண்ட சாதி அமைப்பினை ஒழித்துக்கட்டாதவரை சமத்துவ நிலை ஏற்படாது என்பதைத் தீவிரமாகவே நம்புகின்றார் அவர். பரந்த நிலையில் சாதி அமைப்பிற்கு எதிரான அவர் வாதங்கள் இவையாகும்: சூத்திரர்களைப் போலவே பெண்களும் வேதங்களைப் பயில்வதைத் தவிர்க்கப்பெற்றால் அவர்கள் மதிப்பு நிலையும் சூத்திரர்களின் மதிப்பு நிலையைவிட அதிகம் உயராது. அப்படியிருக்கும்போது ஒரு பெண்ணின் மகன் அல்லது ஒரு பெண்ணின் கணவன் சூத்திரனேயன்றி வேறு எங்ஙனம் இருக்கமுடியும்? மேலும், ஒவ்வொருவரும் பிறப்பில் சூத்திரனே என்று சொல்லப்படுகின்றது. அப்படிஇருக்கும்போது, பூணூல் சூட்டும் விழா ஒன்று எங்ஙனம் மதிப்பு நிலையை அளிக்கின்றது? உறுதியாகவே, முக்கியமாக இருக்க வேண்டியது ஒருவருடைய நடத்தையேயன்றிச் சாதி அன்று. ஒழுக்கக்கேடடைந்த மனிதன் உண்மையில் தீண்டத்தகாதவன் (மலம்). மேலும், உங்களைப் போலவே, ஒரே தசை, குருதியினின்று உங்கள் மலமும் ஆக்கப்பட்டதன்றோ? நான் உங்களை வேண்டுவதெல்லாம் தீண்டத்தகாதவரிடத்தில் உறையும் பரம்பொருளின் சாதி என்ன? என்பது. நன்னெறியுடன் வாழும் தீண்டத்தகாதவர், இழிவானவராகவும் வழக்கமாகப் பொய்யுரைப்பவராகவும் உள்ள மிக உயர்ந்த சாதியைச் சார்ந்த ஒருவரைவிட உண்மையிலேயே பன்மடங்கு உயர்ந்தவராகின்றார். இப்படியிருக்க, ஒருவர் தன் உயர்ந்த சாதியைக் குறித்தோ, வேறு ஒருவரின் தாழ்ந்த சாதியைக் குறித்தோ ஏன் பெருமையடித்துக்கொள்ள வேண்டும்? எல்லோரும் இறைவனுடைய குழந்தைகளன்றோ? பிறப்பிலும் மீண்டும் இறப்பிலும் அவர்கள் யாவரும் ஒரே நிலையில்தானே உள்ளனர்? யாரொருவர் தன் சாதியைத் துறக்கின்றாரோ அவர்தான் இறைவனுக்குரியவராகின்றார்.

சாதியைத் தவிர, பொருளாதார அடிப்படையிலுள்ள வகுப்புவகையும் பிரிப்புச் சக்தியுடையது என்ற உண்மை வேமனர் அறியாததன்று. உண்மையிலேயே, சாதியைவிட வகுப்புவகையே மனிதர்கட்கிடையே மிகவும் அகன்ற இடைவெளியை உண்டாக்குகின்றது என்று நம்புகின்றார். ''எவ்வளவு தாழ்ந்த சாதியினராக இருந்தாலும், பணக்காரர் முதன்மையாகத் திகழ்கின்றார்; அதற்கு நேர்மாறாக எவ்வளவு உயர்ந்த சாதியினராக இருந்தாலும் ஏழையாயிருப்பவர் ஊக்கம் குன்றிப்போகின்றார்'' என்கின்றார் வேமனர். முட்டாள்கள் தமது சாதி, கால்வழி, புலமை இவற்றைக் குறித்துத் தற்புகழ்ச்சியாகக் கூறிக்கொண்டாலும் உண்மையில்

அவர்கள் பணக்காரர்களிடம் தன்மதிப்பற்ற அடிமைகளாகவே உள்ளனர் என்கின்றார் அவர். பணக்காரர் ஒருவரிடத்தில் அவர்கள் ஒவ்வொரு நற்குணத்தையும் கலைத்திற நிறைவையும் காண்கின்றனர்; அல்லது காண்கின்றதாகப் பாசாங்கு செய்கின்றனர். அழகில் மதனவேள் என்றும், பலத்தில் வீமன் என்றும் புகழ்மாலை சூட்டுகின்றனர். வேமனர் அத்தகைய கெஞ்சிநிற்கும் கயவர்களை இழிவாகக் கருதினாலும், செல்வத்தை இகழ்ந்து கூறினாரிலர். அவரைப்போன்ற ஏனைய பெரும்பான்மையான ஆசிரியர்களைப் போலன்றி செல்வத்தை விட வறுமையே அதிகமாகத் தூய்மையைக்கெடுக்கும் செல்வாக்கினையுடையது என்று கருதுகின்றார். ''ஈன்று புறந்தந்த அன்னைக்கும் அவள் செல்வ மக்களுக்கும் இடையிலும்கூடப் பணம் கசப்பினை விளைவிக்கும் மூலமுதலாக அமைகின்றது என்பது உண்மையே. பணம் மட்டிலும் மகிழ்ச்சியைத் தருவதில்லை என்று சிலர் நிலைநிறுத்துவதிலும் உண்மை உண்டு. இந்த இரண்டு உண்மைகளையும் ஒப்புக்கொள்கின்றோம்; பணம் இல்லாமல் எப்படி ஒருவர் காலம் தள்ளுவது?'' என்கின்றார். ஒருவர் தாமாகவே வறுமையைத் தேர்ந்தெடுத்துக்கொண்டால் அது முற்றிலும் வேறுபட்ட செய்தியாகும்; அப்பொழுது வறுமை அவரை உயர்த்துகின்றது. வேறு வழியேயின்றி ஒருவர் ஏழையாக இருக்க நேர்ந்தால் அவர் உடல்சார்ந்த நிலையிலும் ஒழுக்கம் சார்ந்தநிலையிலும் மோசமாகத் தொடங்குகின்றார். ''ஏழையொருவர் நேர்மையாகவோ, துணிவாகவோ இருத்தல் முடியாது. அவர் தனது துணைவி, மக்கள் இவர்களுடைய நன்மதிப்பைப் பேணுவதும் அரிது; தன்னுடைய சுயமதிப்பைப் பேணமுடியாத நிலையோ மேலும் கேடானதாகும்'' என்று கருதுகின்றார் வேமனர். மேலும் வேமனர் பார்வையில் தனது குடும்பத்திற்குச் சில இன்ப வாய்ப்புகளையும் பாதுகாப்பையும் உறுதிப்படுத்த இயலாத ஒருவர் இரங்கத்தக்கவர் அல்ல; அவர் வெறுக்கத்தக்கவராகின்றார். ''வறுமை என்பது ஒரு காட்டுத் தீ. அது உங்களை அழிக்கின்றது; உங்கள் அன்புக்குரிய எல்லோரையும் அழிக்கின்றது. உண்மையில், வறுமை என்பது பழிகேடாகும்'' என்று எச்சரிக்கின்றார் அவர். வறுமையைக் குறித்து அவரது பேரச்சம் ஜார்ஜ் பெர்னார்ட் ஷாவின் பேரச்சத்திற்குச் சரிசமமாகின்றது. ஷா சொன்னார்: ''கேடுகளில் மிகப்பெரியதும் பழிச்செயல்களில் மிகக்கொடுமையாக இருப்பதும் வறுமையாகும்.''

ஆனால், ஷாவைப்போலன்றி, வேமனர் வறுமைக்குச் சமூக அடிப்படையில் ஒரு கழுவாயைச் சிந்திக்க முடியவில்லை. முன்னோக்கி அறியத்தக்க ஆற்றல் எவ்வளவு இருந்தபோதிலும் இடைக்காலத்தைச் சார்ந்த ஒருவரிடம் இத்தகைய ஒன்றை எதிர்பார்க்க முடியாது. வறுமையின் மூலகாரணத்தை ஆய்ந்தறிய முடியாத

வேமனர் செல்வந்தர்களை நோக்கித் தமது செல்வத்தை வறியவரோடும் தேவையிலிருப்போரோடும் பகிர்ந்து கொள்ளுமாறு வேண்டுகின்றார். இரந்து கேட்பது தன்னையே இழிவுபடுத்திக் கொள்வதாகும் என்பதை வேமனர் நன்கு உணர்ந்தவர். ''இரப்போன் மனிதர்களில் மிகமிக இழிந்தவன்'' என்கின்றார் அவர். ஆனால் இரந்து வேண்டுபவனுக்கு ஈகையை மறுப்பவர் இன்னும் அதிகமாக வெறுக்கத்தக்கவராகின்றார் என்று உடனே கூறுகின்றார். பழங்காலந்தொட்டு வரும் பண்பினை எதிரொலிக்கும் பாவனையில் அவர், ''நீங்கள் இறக்கும்பொழுது உங்கள் செல்வத்தை உங்களுடன் கொண்டு போகப்போவதில்லை. பிறருடன் பகிர்ந்து கொள்ளும் செல்வமே உண்மையில் உங்களுடையதாகின்றது'' என்று கூறுகின்றார்.

பசவரைப்போலவே, வேமனரும் உழைப்பின் மதிப்பில் நம்பிக்கையுடையவர். ஒவ்வொருவரையும் ஏதாவதொரு வாழ்க்கைத் தொழிலை மேற்கொள்ளுமாறு பணிக்கின்றார். ஆனால் புரோகிதத் தொழிலுக்கு அவர் நன்மதிப்பு தருவதில்லை. அங்ஙனமே வாணிகத்திற்கும் அவர் ஆதரவு காட்டுவதில்லை. தரகர் வாழ்க்கைத் தொழில் அல்லது சுரண்டல் தன்மையுள்ள தொழில் அவருக்கு வெறுப்புத் தருவதாகும். கிறித்தவ மொழியாகிய ''முகத்தில் வழியும் வியர்வையின் மூலம் உங்கள் ரொட்டியை உண்ணவேண்டும்'' என்பதில் தன் முழுநம்பிக்கையை வெளியிடுவதில் டால்ஸ்டாயுடனும் காந்தியடிகளுடனும் ஒன்றாக நிற்கின்றார். அதே விதி கிட்டத்தட்ட அதே சொற்களில் தன்னுடைய பாடல்களொன்றில் வேமனரால் வெளியிடப்பெற்றுள்ளது. அவருக்கு உழைப்பே வழிபாடாகும். அஃது உடலுழைப்பாக அமையுமானால் அஃது எல்லாவற்றிலும் சிறந்ததாகும். பிறர் ஆடை வெளுப்போனைத் தாழ்வானவனாகக் கருதலாம்; ஆனால் அவன்தான் சமூகத்திற்குப் பணியாற்றுவோர்களுள் மிகச் சிறந்தவனாகின்றான் என்பதை வேமனரின் மனம் எண்ணுகின்றது. அவர் முதல்நிலை உற்பத்தியாளர்களின்மீது, அதிகமாகக் குடியானவர்கள்மீது, மிகப்பற்றுடையவர். ஒருசமயம் அவர் தன்னைப் பெருமிதத்துடன் காப்பு என்று குறிப்பிடும்பொழுது வேமனரும் உண்மையிலேயே சாதிப்பெருமைக்கு அப்பாற்பட்டவரல்லர் என்று சிலர் விரைவாக முடிவுக்கு வருகின்றனர். வேமனரின் பெருமிதம் உண்மையில் அவருடைய சாதியைப் பற்றியதன்று; ஆனால் அது அவரது வாழ்க்கைத்தொழிலான பயிர்த்தொழில் பற்றியதாகும்; தான் நாடோடி ஆசானாவதற்கு முன்னர் அவர் ஒரு 'காப்பு' (குடியானவர்) ஆவார். ஒன்றிரண்டு சந்தர்ப்பங்களில் அவர் தான் பிறந்த ரெட்டி சாதி பற்றிக் குறிப்பிடுங்கால் மிகுபுகழ்ச்சியாக இருக்கவில்லை.

சுருங்கக் கூறினால், இதுவே வேமனாின் சமூகமெய் விளக்க மாகும். அதன் உயிர்நிலைக்கூறுகளில் அஃது இடைக்கால இந்தியா வில் வாழ்ந்த பசவர், ஞானதேவர், நாமதேவர், துக்காராம், இராமாநந்தர், கபீர், தாதர், நானக், லால்தாசர், சைத்தன்யர் போன்ற மறைமெய்ம்மையாளர்களின் மெய்விளக்கத்துடன் கிட் டத்தட்ட ஒன்றிய நிலையாக அமைகின்றது. அவர்களுக்கிடையில் அவர்கள் ஒரு புரட்சியையே உண்டாக்கினார்கள். ஆனால் அதன் விளைவுகள் மேல்மட்டத்திலேயும் நிலையற்றதாகவுமாகவே இருந் தன. காரணம் என்ன? துர்ஜடி பிரசாத் முக்கர்ஜி என்பார் '**நவீன இந்தியப் பண்பாடு**' என்ற தனது புதுப்பாங்குடைய ஒளிதுலங்கும் நூலில் சரியாகக் குறிப்பிட்டவாறு, ''இந்திய சமூகப் பொருளா தாரத்தில் அடிப்படையான ஒரு மாற்றம் இல்லாததனால் மறை மெய்ம்மை சார்ந்த புரட்சி ஒரு கண்ணாடி—புரட்சியாகவே போய் விட்டது.''

இனி வேமனாின் நன்னெறி விளக்கத்தின்மீது நம் கவனத் தைச் செலுத்தினால், அது இரண்டு நிலைகளில் இருப்பதைக்காண் கின்றோம். வேமனர் குறிக்கோள் நெறியாளராக இருந்தபோதி லும், மனித இயல்பின் வரம்பு எல்லைகளை அறியாதவரல்ல. ஒவ் வொருவரும் ஒரு யோகியாக இருக்க முடியாதென்பதை அறிந்தவ ராகவே இருந்தார்; தன்னை ஒரு யோகியாகச் செய்து கொள்ளாம லேயே யோகியின் வாழ்க்கையை மேற்கொண்டு முட்டாளாக அல் லது கயவனாக மாறும் ஒருவனை விட நேர்மையும் நாணயமும் உள்ள குடும்பியே எல்லையில்லாத அளவுக்கு நல்லவன் என்பதை யும் அறிந்தவரே. ஆகவே, அவர் பொதுவாக எல்லோருக்கும் பொருந்தும்படியாக விதிகளடங்கிய தொகுதியொன்றினையும், திட சித்தத்துடனிருந்து ஒழுக்கமானதும் அபாயத்திற்கேதுவானது மான யோகியரின் நெறியைக் கடைப்பிடிக்கத் துணிவுகொண்ட வர்கட்காக மட்டிலும் பொருந்தும்படியாக விதிகளடங்கிய மற் றொரு தொகுதியினையும் அடைவுபடுத்திக் காட்டுகின்றார். அவர் இத்தகைய இருவேறுபட்ட மக்கட் கூட்டத்துடன் பேசியதன்கார ணமாகவே அவருடைய சிந்தனையில் தெளிவான முரண்பாடுகளின் சுவடுகளைக் காணமுடிகின்றது.

யோகியாவதற்குரிய 'சரக்கு' (திண்மை) உடையவரை நோக்கி வேமனர் குடும்ப வாழ்க்கை சிக்க வைக்கும் பொறி என்றும், கண்ணி என்றும், இறக்கும்பொழுது அன்புடைய மனைவியோ அரு மைக் குழவிகளோகூட வாரார் என்றும், பாலுறவு வாழ்க்கை அழுக்குடையதென்றும், மதிப்புக்குறைவுடையது என்றும், உலக செல்வங்கள் யாவும் விரைந்தழியக்கூடியவை என்றும், ஆகவே ஒருவர் ஒரேமனத்துடன் ஆன்ம உணர்வை நாடுவதில் எல்லாவற்

றையும் விட்டொழிக்கவேண்டும் என்றும் கூறுவார். ஏனையோரை நோக்கி இவ்வாறு கூறுவார்: ''ஒவ்வொருவரும் யோகியாக வேண்டும் என்பதில்லை; அப்படி ஆகவும் முடியாது. ஆனால் நல்லவராகவும் சிறந்த குடிமகனாகவும் நிச்சயம் உன்னால் ஆக முடியும். இளமையாயிருக்கும்பொழுது பணிவுடைய மகனாகவும் ஆர்வமுடைய மாணாக்கனாகவும் இருப்பாயாக. நேர்மையான வாழ்க்கைத் தொழிலுக்குப் பயிற்சி பெறுவாயாக. நன்கு வளர்ச்சிபெற்ற பிறகு வறிய குடும்பத்திலுள்ளவளாக இருப்பினும் அழகிய பணிவிணக்கமுடைய கன்னிப் பெண்ணொருத்தியை மணந்துகொள்வாயாக. அன்புடையவளாகவும் புரிந்துகொள்ளும் பண்புடையவளாகவும் உள்ள துணைவியைக் காண்பதென்பது மிகவும் கடினம் என்பதற்கு ஐயம் இல்லை; அங்ஙனம் ஒருத்தியைக் காண்பதில் நற்பேறுடையவனாக இருப்பின் உன்னுடைய மகிழ்ச்சி உறுதிப்படுத்தப்பெறுகின்றது. உன் உலகிற்கு—வீட்டிற்கு—நீ தான் தலைவன் என்பதை அவள் உணரச்செய்வாள். மேலும், நன்மக்கட்பேறும் உனக்கு ஏற்பட்டுவிடின், உம்பருலகப் பேரின்பத்தையும் நுகர்ந்து மகிழ்வாய். குடும்பத்தை வறுமையின்றி அமைப்பதற்காக நாணயமாகவும் ஓய்வாகவும், உழைப்பாயாக. முயற்சியை மேற்கொள்ளாமல் வாழ்க்கையில் எந்த நல்லவற்றையும் அடையமுடியாது. ''நீர் பாய்ச்சாமல் மல்லிகை மலருமா?'' என்றும் அன்புடையவனாகவும் இரக்கப்பண்புடையவனாகவும் இருப்பாயாக. வாயிற்படி ஏறிவரும் வறியவர்களையும் தேவை கேட்டு வருபவர்களையும் விரட்டியடிக்காதிருப்பாயாக. நற்பயனுக்கு உதவாமல் செல்வத்தைத் திரட்டுபவர் ''புலத்தின் புள்ளோட்டி உருவத்தைப் போன்றவர்; அவர் செல்வச்செழிப்பின் நடுவே வாழ்கின்றார், ஆனால் அச்செல்வம் அவருடையதன்று.'' பெற்றோருக்கு நன்மதிப்பைத் தருக. எவ்வளவு செல்வத்தையும் நற்பெயரையும் அடைந்தாலும் எந்தக் காரணத்தை முன்னிட்டும் உன் தந்தை சிறுமையை உணருமாறு செய்தல் கூடாது. பேருண்மையை நாடுவோர் பேச்சிலும் தோற்றத்திலும் விநோதமாகக் காணப்பெறலாம்; அதனால் அவர்களைப் பரிகசிக்கவேண்டாம். செருக்கும் தற்புகழ்ச்சியும் கொள்ளற்க. இறுமாப்புடைய அறிவிலி மிகமிகக் கேடான அறிவிலி ஆவான். மனப் பான்மையில் தாராளமாகவும் பேச்சில் இணக்க வணக்கமாகவும், செயல்களில் பெருந்தன்மையாகவும் இருந்து கொண்டு குடும்பத் தலைவன் என்ற முறையில் தன்நிறைவினைக் காண்பாயாக. ''நல்ல குடும்பத் தலைவன் உண்மையில் குடும்ப வாழ்வின் யோகியாவான்.''

சுய அநுபவத்தால் பாலுந்தலைக் கட்டுப்படுத்த முடியாது என்பதை நன்கு அறிந்த வேமனர் கூறுகின்றார்: பெண்களின் கவர்ச்சியாற்றலுக்கும் பசப்புப் பேச்சுக்கும் மனிதன் அடிமை

யாகின்றான் என்பது உண்மையே. கண்கவர் எழிலுடை வனிதை யுடன் பழகும் பொழுது யோகியும் என்றும் தன் மனத்தைத் தூய்மையாகவும் குழப்பமின்றியும் வைத்திருக்க முடியாது என்ற போதிலும், இல்வாழ்வான் என்ற முறையில் நீ உன் துணைவியின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருக்க வேண்டும், பிறன் மனைவி மீது நாட்டம் வைப்பது, அவள்பால் காமநோக்குகளைச் செலுத்து வது பெரும்பாவமாகும். இன்பத்தை நல்கும் ஆற்றல் உன்பால் இருக்குமாயின், பரத்தையிடமிருந்து விலகியிருப்பாயாக. புற நோக்கில் எவ்வளவு பகட்டாகக் காணப்படினும் அவர்கள் அழுக் குடைய பெண் நாய்களுக்கு ஒப்பானவர்கள். மனம் மாறும் இயல்பும், பேராசையும், கல்நெஞ்சமும் கொண்ட அவர்கள் உன்னை ஏழ்மையில் கொண்டு செலுத்துவர். அதன்பிறகு சாறு பிழிந்த எலுமிச்சை பழத்தோல் போல் அவர்கள் உங்களைத் தூக்கி எறிந்து விடுவர். நீ ஒரு பரத்தையின் நட்பை வைத்துக் கொள்ள விரும்பினால்—இங்குதான் வேமனரின் உண்மை சொரூபம் மீண்டும் வெளிப்படுகிறது—நல்ல உருவமும், வசீகரமான தோரணையும், இசையிலும் நாட்டியத்திலும் நல்ல தேர்ச்சியும் பெற்ற ஒருத்தி யைத் தேர்ந்தெடுத்துக் கொள்க. அவளுடைய நட்பை நாடு வதற்கு முன்னர், அவளுடன் வாழும் அவள் அன்னை இல்லை யென்பதை உறுதி செய்து கொள்க. (எங்ஙனம் யோகி ஒருவர் இத்தகைய மானக்கேடான அறிவுரை நல்கக்கூடும் என்பதனால் அதிர்ச்சியடைபவர்கள் அறிய வேண்டியது இது: இந்து சமூகத் தில் பத்தொன்பதாவது நூற்றாண்டின் இறுதி வரையிலும் பரத் தையை வைத்திருப்பது மதிப்பு நிலையின் அறிகுறியாகக் கொள்ளப் பெற்றிருந்தது.)

எஞ்சிய வேமனரின் நீதி போதனையைப் பற்றி இங்ஙனம் சுருக்கமாக உரைக்கலாம்: எல்லாச் சந்தர்ப்பங்களிலும், உன் மனச்சான்றுக்கு ஏற்ப உண்மையாகவும் உறுதியாகவும் இரு. சிங்கம் ஒன்று வன்மையற்றும் நோயுற்றும் இருந்தால், ஒருநாய் கூட அதனை அச்சமின்றித் தாக்கும். இதனால் நீ எல்லோரிடமும் உன் முழு வலிமையையும் காட்ட வேண்டுமென்பது கருத்தன்று. வலிவுள்ள மனிதன் அமைதியாகவே இருப்பான்; அவன் அடக்க மாகவும் இருப்பான். எப்பொழுதும் வல்லந்தத்தைத் தவிர்ப்பா யாக. கொல்லாமை உன்னுடைய சமயக் கொள்கையாக இருக் கட்டும். சிலர் **மகாபாரதத்தை** ஐந்தாவது வேதம் என்று மடமை யினால் போற்றி உரைக்கின்றனர். அவர்கள் உடன்பிறப்பாளர்கள் கொல்லப் பெறும் போரையும் இரத்த வெள்ளம் பாயும் கொலை யையும் விரும்புகின்றனர் என்று கொள்ளலாமா? ''உன் பகைவர் களில் மிகக் கொடுமையானவர்கள் கூட உன் கைகளில் சிக்கினால்,

நீ அவர்களைக் கொல்லற்க. மாறாக நீ அவர்கட்கு ஒரு நன்மை செய்து அவர்களை விடுவிப்பாயாக''. மனிதர்களைக் கொல்லு வதை விட பிராணிகளைக் கொல்லுவது குறைவான குற்றம் அன்று. பிராணியொன்றின் உயிர் மதிப்புக் குறைவு என்று ஏன் கருதுகின்றாய்? உண்மையில் அது ஒரு மடையனை விடக் கேடா னதா? ''நீ கொல்ல வேண்டிய ஒரே ஒரு பிராணி உன்னுள் உறை யும் பிராணியேயாகும்.'' உணர்வுள்ள எல்லாப் பிராணிகளிடமும் அன்பு காட்டி அறிவுடைமையுடன் வாழ்ந்து பெருமையுடன் கிழப் பருவத்தை எய்துக. கிழப் பருவத்தை அடைவதென்பது மனத் தளர்ச்சியடைவதென்பது அன்று; அஃது அறிவுக்கூர்மையை எட்டுவதாகும். எனினும், அறிவாழம் என்பது வயதின் தனி உரிமைக் குத்தகை என்று கருதற்க. சில இளைஞர்களும் நீ செல் லும் வழியில் ஒளி காட்டுவதற்கேற்ற அறிவுடைமையுடன் இருத் தல் கூடும். ''இளையோர் ஒருவர் பிடித்துள்ளதால் கைவிளக்கின் ஒளி குறைவாகி விடுமா?'' புல்லைத் தின்னும் பிராணி பழங்களின் இன்சுவையை அறிய முடியாது என்பதை நினைவில் இருத்துக; அங்ஙனமே சிறு கலைகளில் தனிப் பயிற்சி பெறுவோர் வாழ்க்கை யின் பெருங்கலையைப் பாராட்டியுரைக்க முடியாது. உண்மையில், வாழ்க்கைக் கலை என்பது கலைகளனைத்திலும் மிகமிக உயர்ந்த தாகும்.

வேமனரின் ஒரு குருட்டு இடம் (களங்கம்) பெண்ணைப்பற்றி யது; ஆகவே அவர் தன்னுடைய நன்னோக்க வாழ்வின் திட்டத் தில் ஒரு தாழ்வான, கிட்டத்தட்ட பழிக்குரிய, இடத்தை நல்கு கின்றார். அவர் கருத்துப்படி பெண்ணே எல்லாவிதக் கேட்டிற்கும் பிறப்பிடமாவாள். அவள்தான் **சர்ஸி**[1], அவள்தான் **டெலிலா**[2]; மனிதனுடைய வீழ்ச்சிக்கெல்லாம் அவளே காரணம். அவளிட மிருந்து ஒதுங்கியிருப்பதே மிகச்சிறந்தது; உங்களால் அதனைச் செய்யமுடியாதுபோயின், அவளைக் கட்டுப்பாட்டின்கீழ் வைத் திருக்கவேண்டும். அவளை வீட்டுக்குள்ளேயே ஒதுக்கிவைக்கவேண் டும்; இயன்ற வழிகளிலெல்லாம் அடக்கி வைக்கவேண்டும். ஒரு பெண்ணின் உண்மையிலும் மெய்யன்பிலும் நம்பிக்கை வைப்பது அறிவின்மையாகும்; ''கடலில் கப்பலின் அடிச்சுவடுபோலவும், விண்வெளியில் பறவை செல்லும் வழிபோலவும், பெண்ணின்

---

[1] சர்ஸி: இவள் ஒரு மந்திரக்காரி; மனிதர்களை மிருகங்களாக மாற்றியவள். ஹோமரின் பெருங்காப்பியமான 'ஒடிஸ்ஸியில்' விவரங்காண்க.

[2] டெலிலா: சாம்ஸனின் என்ற மாவீரனை மயக்கிய மாது. விவ ரம் விவிலியம்—பழைய ஏற்பாட்டில் காண்க.

நடந்துகொள்ளும் முறையும் அமைந்துள்ளது.'' செல்வச் செழிப் புள்ள பொழுதுஅவள் கணவனைக் கவனிக்கின்ருள்; வறுமைக்காலத் தில் கணவன் அணுகும்பொழுது எழுந்திருக்கவும் செய்யாள்;அவன் உயிரோடிருந்தபோதிலுங்கூட இறந்துபட்டவனுகவே மதிக்கின் ருள். இங்ஙனமெல்லாம் கூறும் வேமனர், அன்னையை உயர்வாகக் கருதவேண்டும் என்றும், உண்மையில் அவள் தெய்வத் தன்மை யின் திருவுரு என்றும் கூறுவதுதான் விந்தையாகவுள்ளது. பெண்ணை—சிறப்பாகத் துணைவியைப்—பழித்துக்கூறுங்கால் மனைவி யாக இராமல் அவள் அன்னையாகஆக முடியாது என்பதைத்தெளி வாகவேமறந்துவிடுகின்ருர். எவ்வகையிலும் பெண்களைப்பொறுத்த வரையில், அவர் ஒரு பழைமைப்பற்ருளர், பிற்போக்காளர்என்றே சொல்லவேண்டும். ஆனுல் வில்லியம் எச். கேம்பெல் வேமனருக் காக ஒரு சாக்குப்போக்கினைக் காண முயல்கின்ருர். ''இந்தியாவில் எந்த ஒரு சீர்திருத்தத்திற்கும் பெண்கள் உறுதியான எதிர்ப் பாளர்களாக உள்ளனர்; மரபு வழியாக வரும் கருத்துகளிலும் வழக்கங்களிலும் அவர்களது உடன்பிறந்த பழைமைப் பற்ருலும் கண்மூடி வாளா ஏற்கும் பண்பாலும் தனது செல்வாக்கு வலுவின் மையை எய்தியதையும் தன்னுடைய முயற்சிகள் யாவும் திணற டிக்கப்பெற்றமையும் வேமனர் அடிக்கடி கண்டிருந்திருக்கலாம்'' என்பது அம் மேனுட்டறிஞரின் கூற்ருகும். இது பெரும்பாலும் உண்மை என்பது ஒப்புக்கொள்ளப்பெறத்தான்வேண்டும். ஆனுல் இந்தியாவில் பெண்களின் பிற்போக்குத் தன்மைக்கு ஆண்கள் நேரடியாகப் பொறுப்பாளர்களாகவில்லையா? பன்னெடுங்காலமாக அவர்கள் பெண்களுக்குச் சுயேச்சை, கல்வி, அறிவொளி இவற் றைக்கொடுக்க மறுக்கவில்லையா? எந்த ஒரு நாட்டிலாவது பாதி சுயேச்சையாகவும், பாதி அடிமையாகவும், பாதிப்பேர் கற்றறிந்த வர்களாகவும், பாதிப்பேர் கல்வியில்லாதவர்களாகவும், பாதிப் பேர் அறிவுடையவர்களாகவும் பாதிப்பேர் அறியாமையுடையவர் களாகவும் இருப்பதைக் காணமுடியுமா? அத்தகைய ஒரு நாட்டில் இரண்டாம்பாதி உணர்ச்சியற்ற சுமையாகவும் ஒரு சக்கரத்தடை போலும் இருந்தால், அதற்குரித்தான பழியை முதற்பாதியின் தலையில் முற்றிலும் சுமத்தப்பெறல் வேண்டும்.

வேமனர் வேதங்களின் தனிச் செல்வாக்கை ஒப்புக்கொள்ளா விடினும், அவருடைய சமயமெய்விளக்கத்தில் அவர் ஒரு வேதாந் தியே. ''ஆடலணங்குகள்போல் வேதங்கள் உங்களை மயக்குகின் றன; வழி தவறி நடத்திச் செல்கின்றன'' என்று கூறுகின்ருர் அவர். பொருளுணராமல் வேதங்களை ஓதுபவர்களுக்கு அவர் குறைந்த நன்மதிப்பையே தருகின்ருர். அவர்களை அவர் ''குரைக் கும் நாய்கள்'' என்று குறிப்பிடுகின்ருர். அவர்கள் அங்ஙனம்

உரக்க ஓதுவதால் அவர்களுடைய குரல்வளைகட்கு நல்ல பயிற்சியாகலாம்; ஆனால் அதைத் தவிர வேறொரு பயனும் இல்லை. வேதச் சடங்கு முறைகளும் அதைப்போலவே பயனற்றவை. புராணங்கள் ''பொய்களின் கதம்பம்'' ஆகும். முக்கியமாகப் புராணங்களால் உயிர்ப்பூட்டப்பெற்ற சிலை உரு வழிபாடு, அவ்வழிபாடுபுரிவோரை முடிவான உண்மைகளை அறியாதவாறு செய்து விடுகின்றது; தம்முடைய நம்பிக்கையைச் செதுக்கப்பெற்ற கற்களின்மீது வைப்பவர்கள் ''அறியாத'', ''அறிவற்ற'', ''உணர்வற்ற'', ''அறிவிழந்த'' மக்களாவர். ''வண்ணப்பகட்டான திருக்கோயில்களை எழுப்பி அவற்றுள் திருவுருவச்சிலைகளை நிறுவிய அரசர்கள் யாவரும் போர்களில் தோற்கடிக்கப்பெறுகின்றனர். ஆனால் அந்தத்திருவுருவச் சிலைகளை உடைப்பவர்கள் நாட்டை ஆண்டு வருகின்றனர். திருவுருவச் சிலைகளே கடவுளாக இருப்பின் அவை ஏன் தம்மை வழிபாடு செய்பவர்களைக் காப்பாற்றவில்லை?'' என்கின்றார் வேமனர். தர்மசாத்திரங்கள் என்று வழங்கப்பெறுபவை நீதியைக் கொண்ட நூல்களன்று; அவை யாவும் படுமோசமான அநீதிகளைக் கொண்டவையாகும். நூல்களின்மீதும் அந்நூல்கள் நுவலும் அறிவின்மீதும் நம்பிக்கை வைப்பது பயனற்றது. ஒருவரால் அடைய முடியுமானால் முழுமுதற்பொருளுடன் கொள்ளும் நேர் அநுபவம் மட்டிலுமே முக்கியமாகின்றது. அது மட்டிலுமே வீடுபேற்றிற்குரிய வழியுமாகும்.

புரியாத விவரங்களில் நுழையாமலேயே வேமனரின் சமய விளக்கக் கோட்பாடு அத்துவிதம் (குறிக்கோள் நெறி) என்று சொல்லலாம். வேதங்கள் வேறு பழைய நூற்றொகுதிகள் இவற்றின் மேலாண்மை உரிமைகளை மறுத்தலைத் தவிர, சீவான்மாவையும் பரமான்மாவையும் இன உறுதிசெய்வதன் வற்புறுத்தலிலும் அவர் பிற அத்துவிதவாதிகளிடமிருந்து வேறுபடுவதுபோல் காணப்படுகின்றார். ''நான்முகனைக் கொன்று அவரைத் திருமாலுடன் இரண்டறக் கல; திருமாலைக்கொன்று அவரைச் சிவனுடன் இரண்டறக் கல; சிவனைக் கொன்று அவரை உன்னுடன் இரண்டறக் கல. அதன் பிறகுதான் நீ ஒரு நிறைவுடைய யோகி ஆகின்றாய்'' என்று கூறுகின்றார் அவர். இத்தகைய ஒரு செய்தியை மற்ற எந்த இந்துச் சிந்தனையாளர் சொல்லத் துணிவுகொண்டார்?

வேமனரின் மெய்விளக்கம் டாக்டர் ஜி.வி. கிருஷ்ணராவ் அவர்களால் இங்ஙனம் விளக்கப்பெறுகின்றது:

> ஒவ்வோர் உயிரியின் இதயத்திலும் உறைந்து கொண்டிருக்கின்ற இறைவன் மனிதரிடமிருந்து முற்றிலும் வேறுபட்டவர் அல்ல. மனிதன் தன்னுடைய தன்—முனைப்பினையும் மன

வெழுச்சிகளையும் ஒழித்து முற்றிலும் தன்னை **அவனிடம்** (இறைவனிடம்) இழக்கும்பொழுதுதான் இறைவனுடன் ஒன்றுகின்றான். இல்லை, அவன் இறைவனேயாகிவிடுகின்றான். இந்தக் கொள்கை நெறியைப் புரிந்துகொள்ளாத மக்கள் **அவனை** (இறைவன்) திருக்கோயில்களிலும் வேறு புனித திருத்தலங்களிலும் தேடுகின்றனர்..... சிலர் உலகத்தையே துறந்து, எதிர்காலத்தில் ஏதாவது ஒருசமயத்தில், ஏதாவது வேறு ஓர் உலகில் **அவனைக்** (இறைவன்) காணும் நம்பிக்கையுடன் தவம் புரிகின்றனர். இஃது ஒரு மாபெரும் பொய்த்தோற்றமாகும்; மீப்பெரிய பொய்யுமாகும். ''இந்த உலகில் இப்பிறப்பில் பேரின்பம் கிடைக்காவிடில், அது மற்றோர் உலகில் எப்படிக் கிடைக்கும்? தொடக்கத்திலேயே இல்லாத உள்ளுறைத் தன்மை இறுதியில் எங்ஙனம் கிடைக்கப்போகின்றது?'' ஆகவே, மனிதன் மிகவும் அடைய முடியாதபடி, எட்டாப்பழமாக, வரம்பில்லாத ஒன்று (Absolute) தனிச் சிறப்புக்குரிய இந்த உலகத்திற்கு அப்பால் எங்கோ ஓரிடத்தில் இருக்கின்றது என்று கூறுவது தவறாகும். அஃது உண்மையாக இங்கேயே மனிதனிடத்திலும் அவனைச் சுற்றிலுமே உள்ளது; அதனை அவன் தன்னுள்ளேயே நாடி அநுபவத்தால் அறிய வேண்டும். ''இங்ஙனம் தேடிச் செல்வோன் தன்னுடைய ஊரைவிட்டு அகலவேண்டியது அவசியமுமில்லை. வழியில் காணப்படும் குள்ளநரிகளை எண்ணிக்கையிடும் விருப்பம் இருந்தாலன்றி, அவன் ஏன் வெளியே செல்லவேண்டும்?''

வேமனர் மனிதனை எல்லாப் பொருள்கட்கும் மிக நடுவே வைத்தெண்ணுவதால், அவரது மெய்விளக்கம் அடிப்படையில் மனிதப்பற்றுக் கோட்பாடாகவே அமைகின்றது. டாக்டர் ஈஸ்வர டோபா என்பவர் **"ஞானி வேமனர்: அவருடைய மெய் விளக்கம்"** என்ற தன்னுடைய நூலில் நம்முடைய கூரிய கவனத்தை இந்த உண்மைக்குக் கொண்டு வருகின்றார். வேமனர் ''ஆன்ம—பண்பாட்டுநிலை''யை ஆதரிப்பதாகக்கூறுகின்றார் அவர். ''வேமனரின் பண்பாட்டுக் குறிக்கோள் மனிதனுக்கும் நெறிகளாகிய மாளிகையின்மீது கட்டப்பெற்றுள்ளது. மனித ஆளுமையை ஒரேயடியாக மடைமாற்றம் செய்வதில் மனிதனே தன்னுடைய வழியில் பாடு பட்டு உழைக்கவேண்டும். அவனுடைய உயிருள்ள ஆளுமையில் விழுமிய ஆற்றல்கள் மறைந்து கிடப்பதால் மனிதனல்லாத கூறுபாடுகள் அவனுடைய விடுதலைக்கு வாரா. வேண்டப்படுவதெலாம் மனிதனுடைய நல்வாழ்வுக்காக மனிதப் பண்புகளைப் பண்படையச்செய்யும் முக்கியத்துவத்தை அநுபவத்தால் அறியவேண்டியதாகும்.

மனிதனின் இயல்பூக்கங்களையும் மனவெழுச்சிகளையும் மடை மாற்றம் செய்ய வேண்டுமேயன்றி அவற்றை அடக்கலாகாது என்பது உண்மையிலேயே வேமனருடைய சிந்தனையின் அடிப்படையாக உள்ளது. பாலூக்கம் மனித இயல்பினை இயக்கி வைக்கும் உயிராற்றலின் தலைமை மூலங்களில் ஒன்று என்ற தெளிவான கருத்தினைத் தோற்றுவித்து உளவியலைக் கண்டறிந்தவராகிய பிராய்டை முன்னறிகின்றார். ''நீ அழகிய வனிதையொருத்தியைக் காணுங்கால் உன்னிடம் கொழுந்துவிட்டெரியும் காம உணர்ச்சி ஆன்மீக—ஆர்வ உணர்ச்சியாக மாற்றப்பெறுதல் வேண்டும்'' என்கின்றார். பரமான்மாவுடன் சமாதி நிலையில் கலக்கும் பேரின்பத்தை நங்கையுடன் புணர்ச்சியாலடையும் சிற்றின்பத்துடன் ஒப்பிடுகின்றார்.'' ஒருவர் மனவெழுச்சி மிகுந்த விஷயகாமியாக இருந்தாலன்றி, அவர் மோட்ச—காமியாக ஆக முடியாது'' என்று கூறுவதில் இதே கருத்தினை வேறொருவிதமாகத் தெரிவிக்கின்றார். இந்த முக்கிய செய்தியை மேலும் அரண் செய்யும்முறையில் ''கணவன் கொழுந்து விட்டெரியும் மனவெழுச்சியுடன் மனைவியை அணுகுவதுபோல் யோகி இறைவனை அணுகவேண்டும்'' என்று மேலும் வற்புறுத்தி உரைக்கின்றார்.

வேமனர் நாகார்ஜுனரைப்போலவோ சங்கரரைப்போலவோ அறிவாற்றலுள்ள சூரராக இல்லாததால் ஒரு பெரிய மெய்விளக்க அறிஞர் என்றோ அல்லது ஒழுங்கமைப்புடையவர் என்றோ சொல்லுவதற்கில்லை. எனினும், அவர் தனக்கேயுரிய மெய்விளக்கத்தைக் கொண்டவர்; அஃது ஒவ்வொருவரையும் மனித வாழ்க்கையில் ஒவ்வொரு கூறினையும் முற்றிலும் தழுவியதாக அமைந்து விடுகின்றது. மெய்விளக்க வல்லுநர்கள் வேமனருடைய மெய்விளக்கத்தின் ஆழமான ஆராய்ச்சியை மேற்கொண்டு அதனுடைய ஜனநாயக, சமத்துவமுறை சார்ந்த, மனிதப்பற்றுக் கோட்பாடு சார்ந்த சிக்கல்களைத் தெளிவாக்க வேண்டியது மிகவும் விரும்பத்தக்கதாகும்.

# 8. உண்மையில் அரிய மேதை

கற்றிடக் கற்றிடக்
  கனிவினை நல்கிடும்
கவிதைகள் புனைதனித்
  தகவுளார் அரியர்—ஆங்கு
உற்றிடும் சுவைதெரிந்
  தற்புதக் கவிதையை
உளத்திலாய் திறமுளார்
  செகத்தினில் அரியரே.

—போப்

ஒவ்வொரு நோக்கிலும் வேமனர் ஒரு மேதை; உண்மையி லேயே அவர் ஓர் அரிய மேதை; புகழ் பெருத ஒரு சிற்றூரில், பிறந்து வளர்ந்த அவர் இந்த உலக முழுவதையும் தன் அறிவு எல்லைக்குள் எடுத்துக்கொண்டுவிட்டார். ஒழுக்கக் கேடான வாழ்க்கைக்குப் பிறகு, அவர் தன்னை உறுதியாகக் கட்டுப்படுத்திக் கொண்டு ஓர் ஞானியாகவே ஆகிவிட்டார். ஒழுங்கான கல்வி யின்றிப் புதிய அழகுகளுடனும் ஆற்றலுடனும் கையாளும் அள விற்குத் தன்னுடைய மொழியில் தேர்ச்சியடைந்துவிட்டார். எந்த வித இலக்கிய அவாவுமின்றி, தான் வாழ்ந்த காலத்திற்கு மட்டிலு மின்றி, எல்லாக் காலத்திற்குமே ஒரு சிறந்த கவிஞராக வளர்ந்து விட்டார். தன்னுடைய நாட்டிலோ அல்லது வேறு நாட்டிலோ உள்ள மெய்விளக்க நூல்களின் அறிமுகமின்றியே, பலவற்றை உட்கொண்டுள்ளதும், துணிவானதும், புதுமையானதும், சமயப் பற்றுக் கோட்பாட்டுக்குரியதுமான சிக்கலையெல்லாம் தன்னகத்தே கொண்ட மெய்விளக்கத் தத்துவத்தைப் போதித்தார். தனி யாகவே நின்று வெவ்வேருன கொள்கை முன்னணிகளுடன் போர் தொடுத்த வண்ணமிருந்தார். உண்மையை நிலைநாட்டுவதற்கா கவே அவர் பல சிலை உருக்களை உடைத்தெறிந்தார். மனிதனைத் தளைகளினின்றும் விடுவிப்பதற்காகவே நம்பிக்கையினைத் தகர்த் தெறிந்தார். இரண்டு கால்களின்மீதுள்ள ஒரு புயலாகத் திகழ்ந்து தனக்கு முன்னருள்ள ஒவ்வொன்றையும் துடைத்தழித்தார். ஆயினும் அவர் பலருடைய அன்புக்குரியவரானார்; காரணம், அவர் தன்னுடைய கடுந்தன்மையைச் சொல் நயத்தால் பக்குவ

மாக்கிக் கொண்டார். தன்னுடைய ஆழ்ந்த அறிவை நகைச்சுவையால் எளிமையாக்கினுர். தான்கூறும் செய்தியை வஞ்சப்புகழ்ச்சியாலும் வசையுரையாலும் உயிர்ப்பூட்டினுர். சமயத்தை அவர் எளியதாக்கினுர். கவிதையின் நயத்தையும் மதிப்பையும் ஒழுக்க முறையில் பயன்படச்செய்தார்.

ஒரே ஒரு வேமனரே இருக்க முடியும். ஏனெனில் அவருடைய தனிச்சிறப்பு—மேதைத்தன்மை—புதுமை வாய்ந்தவராகவும் இணையற்றவராகவும் ஆக்கியது. ஆயினும், உலகிலுள்ள சில பெரியவர்களிடம் இருப்பதைப் போன்று சில பொதுத் தன்மைகளையும் கொண்டிருந்தார். எடுத்துக் காட்டாக தாழ்வான நீதிகள் மட்டிலும் இல்லாமல் உயர்முறை மன்றத்தலைவரான பேக்கனின் சொற்சுருக்கத் திட்பமும், ஒளி வீச்சும், சிடுசிடுப்புத்தன்மை மட்டிலும் இல்லாது போப்பின் சொற்றிறமும் சொல்லொழுக்கமும், அசடு வழியும் மனித இனவெறுப்பு மட்டிலும் இல்லாமல்; ஸ்விப்டின் வசையுரை ஆற்றலும், அரசியல் குழப்பத்தை விளைவிக்கும் மனச்சார்பு மட்டிலும் இல்லாமல்; ஃபிரெஞ்சுநாட்டுச் சிந்தனையாளரான ரூஸோவின் உணர்ச்சிமிக்க மனவெழுச்சியும், சூழ்ச்சி மட்டிலும் இல்லாமல்; வால்டயரின் வஞ்சப்புகழ்ச்சியும் துணிச்சலும், ஷாவின் இயல்பான தெளிவுடன் அவருடைய சொற்கலை வித்தகமும் சட்டெனத் தோன்றும் எண்ணமும் பிற்காலத்தில் வாழ்ந்த டால்ஸ்டாயின் அனைத்தையும் உட்படுத்திய கொள்கையுடன் அந்தக் குலத்தலைவரின் நேர்மைத் துடிப்பும் வேமனரிடம் குடிகொண்டிருந்தன. வேமனரைப் பழித்துக் கூறுவோர் அவர் தமது எண்ணத்திற்கு ஒரே ஒருவரை நினைக்கச் செய்கின்றுர் எனவும், அவர் வரலாற்றில் இல்லாதவரும் புனைகதையில் வருபவருமான டான் குக்ஸாட் என்பவரே யாவர் என்றும் கூறலாம். இந்தக் கருத்தினைக் கொண்டிருப்பதற்காக அவர்களுடன் ஒருவரும் சச்சரவு கொள்ள வேண்டியதில்லை. சுருக்க ஆக்ஸ்ஃபோர்டு அகராதியின்படி டான்குக்ஸோட் என்ற சொல்லுக்கு 'உணர்ச்சிக் கனிவுறும் கனஉருக்காண்பவர்', 'மிகஉயர்ந்த, ஆனுல் பயனுக்குதவாத மிகச் சிறந்த குறிக்கோள்களை நாடுபவர்', 'தன் மதிப்புடனும் பற்றுதியுடனும் ஒப்பிடுமிடத்து முற்றிலும் உலோகாயதக் கவர்ச்சிகளைக் கருதாத ஒரு மனிதர்' என்ற பொருள்கள் காணப்பெறுகின்றன. இந்த விளக்க உரைகளின் பகுதிகள் வேமனருக்குப் பொருந்தவே செய்கின்றன. இல்லாவிடில் அவர் விசித்திரமான தனித்தன்மை வாய்ந்த சிறந்தவராகத் திகழ்ந்திருக்க முடியாது. சில சமயங்களில் அவர் தன்னுடைய வாதப் பொருத்தத்தையும் கொள்கை மாருமையையும், குறிக்கோள் நெறியையும் புறக்கோடியை எட்டும் எல்லைவரையிலும் கொண்டு

செலுத்துவார். உட்பிரிவுகட்கேற்றவாறு நீண்ட சட்டைகளை அணிந்து கொண்டு சமய ஆசாரியர்கள் என்று தம்மைக் கூறிக் கொண்டுத் திகழும் பல வஞ்சகர்கள் தம்மைச் சுற்றி எங்கும் நிலவி வருவதைக்கண்டு தம்முடைய வாழ்வின் இறுதி நிலைகளில் தம் முடைய ஆடைகளனைத்தையும் விலக்கிவிட்டதாகத் தெரிகின்றது. உண்மையிலேயே, நாம் இவ்வுலகிற்கு வரும்போதும் ஆடையின்றியே வந்தோம், இவ்வுலகை விட்டு நீங்கும்போதும் அங்ஙனமே ஆடை யின்றித்தான் செல்லுகின்றோம். அப்படி இருக்க நம்முடைய வருகைக்கும் செல்லுகைக்கும் இடையில் நாம் ஆடைகளை உடுத் திக்கொள்ளுவதற்காக ஏன் தொந்தரை செய்துகொள்ளவேண்டும் என்று வினவுகின்றார் அவர். அவருடைய அரை கிறுக்குத் தன் மைக்கு இன்னோர் எடுத்துக்காட்டு அவர் பெண்களிடம்கொண்ட இருபுடை ஈர்ப்பாகும். வேமனரின் இத்தகைய குறைபாடுகளும் இறுக்கங்களும்—அவற்றிற்கு அப்பெயர் தரப்பெற்றால்—அவை அவ ருடைய ஆளுமைக்கு ஒரு பகட்டான தோற்றத்தையும் கவர்ச்சி யாற்றலையும் விளக்கத் தெளிவையும் நல்குகின்றன.

தம்முடைய நாட்டிலுள்ள கவிஞர்களுள் தமிழ்நாட்டுத் திருவள்ளுவருடனும், இந்தி நிலப்பகுதியைச் சார்ந்த கபீருடனும், கர்நாடகத்தைச் சார்ந்த சர்வக்ஞருடனும் தம் சிந்தனையால் உறவுகொள்ளுகின்றார். டாக்டர் ஜீ. யூ. போப், திருவள்ளுவரை 'உலக மக்களின் கவிஞர்' என்று போற்றிப் புகழ்கின்றார். வேம னரும் அத்தகைய ஒரு கவிஞரே யாவர். கால எல்லைகளை வைத்துக் கருதினால் இவர்கள் ஆயிரத்து ஐந்நூறு ஆண்டுகட்கும், அதற்கு மேலும் இடைப்பட்டவர்கள். வெவ்வேறு நிலப்பகுதிகளில் வாழ்ந் தவர்கள்; உண்மையில் பார்த்தால் அவர்கள் வெவ்வேறு சமயச் சார்புடையவர்கள்; வேறுபட்ட மொழிகளில் நூல் எழுதியவர்கள்; ஆனால் அவர்கள் கூறும் செய்தி ஒன்றேயாகும்; அதாவது மனி தர்கள் யாவரும் ஒரே குலத்தைச் சார்ந்தவர்கள் என்பது. ''பிறப்பில் மனிதர்கள் யாவரும் சமமே'' என்கின்றார் திருவள் ளுவர். பின்னர் அவர்கள் தம்முள் மாறுபடுவராயின் அங்ஙனம் மாறுபடுவது அவர்களுடைய சமயத்தையோ சாதியையோ பற்றி யதன்று; அவர்கள் ''தம் குணவியல்புகளில் மாறுபடுவதே'' இதற் குக் காரணமாகும். ''உயர் குலத்தில் பிறந்தவராயினும், உயர் பண்புகள் அற்றவராயின் அவர்கள் இழிவானவர்களே யாவர். தாழ்ந்த குலத்தில் பிறந்தவராயினும் உயர்ந்த குறிக்கோள் நெறி யைப் பின்பற்றுபவராயின் அவர்கள் உயர்ந்தவர்களேயாவர்.'' என்று அப்பெருமான் தொடர்ந்து கூறுவர். வேமனரும், நாம் ஏற்கெனவே குறிப்பிட்டவாறு, இத்தகைய உண்மைகளை இன்னும் வலியுறுத்திக் கூறுகின்றார். 'எல்லோரும் ஓர் குலம்' என்ற

அவருடைய தொகுத்த பொதுக் கருத்து மிகப் பெருமித முடையது, பேரழகுடையது, அனைத்தையும் அடக்கிய தன்மை யுடையது. ஆகவே அவர்,

> ''எல்லோரும் நல்லுணவைப் பகிர்ந்துண்ணப் படைக்க;
> எல்லோர்க்கும் ஒரேவண்ணத் தட்டினிலே படைக்க;
> எல்லோரும் வேற்றுமையற் றுன்றுயுண் ணட்டும்;
> இனிதுயர்த்திக் கரமதலால் அவர்க்காசி பகர்க.''

என்று ஆர்வத்துடன் வேண்டுகின்றார்.

கபீரைப்போலவே, வேமனரும் 'ஒருவனே தேவன்' என்ற கொள்கையை வலியுறுத்திக் கூறுவதில் மிக்க அழுத்தத்தைக் காட்டு கின்றார். ''அல்லாவும் அவரே; இராமனும் அவரே'' என்கின்றார் கபீர். ''ஒவ்வொரு பொருளிலும் அல்லா நிறைந்து திகழ்கின்றார்; அவரே கடவுளாவார்'' என்கின்றார் வேமனர். அவருக்குச் சிவனும் அல்லாவும் ஒருவரே யாவர். 'ஒருவனே தேவன்' என்ற கொள்கை சமயங்களின் ஒருமைப்பாட்டையும் உயிர்களின் ஒருமைப்பாட் டையும் குறிப்பாகப் புலப்படுத்துகின்றது; கபீரைப் போலவே, வேமனரும் இந்த உண்மைகளைச் சிறப்பாகவே வற்புறுத்துகின்றார். ''உடல்கள் வேறுபட்டனவே; ஆனால் அவற்றிற்கு எழுச்சியூட்டும் உயிர் ஒன்றேயாகும். உணவுப்பொருள்கள் வேறுபட்டவை; ஆனால் பசி ஒன்றேயாகும். பசுக்கள் யாவும் வெவ்வேறு நிறத்தையுடைய வையாயினும் அவற்றின் பால் வெண்மை நிறத்தையுடையது. அணிவகைகள் யாவும் வெவ்வெறு வடிவத்தைக் கொண்டவை யாயினும் அவை செய்யப்பட்ட தங்கம் ஒன்றே. மொழிகள் வேறு பட்டவை; ஆனால் சிந்தனை ஒன்றே. இனங்களும் சமயங்களும் வேறுபட்டவை; ஆனால் பிறப்பு ஒன்றே. மலர்கள் வேறுபட் டவை; ஆனால் வழிபாடு ஒன்றே. மெய்விளக்கத்துறைகள் வேறு பட்டவை; ஆனால் தெய்வம் ஒன்றேயாகும்'' என்று மொழிகின்றார் வேமனர். வேமனரின் ஒருமைப்பாட்டுக் கொள்கை மிக விரிந்தது; அஃது உயிருள்ள பொருள்களனைத்தையும்—ஏன் உயிரற்ற பொருள் களையும் கூட—அணைத்துக்கொள்ளுகின்றது.

மேலும் வேமனர் உருவ வழிபாட்டைக் கண்டிப்பதில் கபீ ருடன் ஒன்றுபடுகின்றார். ''கற்களை வழிபட்டு ஒருவர் கடவுளைக் காணமுடியும் என்றால், நான் மலையையே வழிபடுவேன்'' என்று கூறுகின்றார் கபீர். ''கற்களுக்கு ஏன் பன்னிற ஆடைகளை உடுத்து கின்றீர்கள்? அவைகட்கு ஏன் கோயில்களில் இருப்பிடம் தருகின் றீர்கள்? அவைகட்கு ஏன் உண்ணும் உணவையும் பருகும் நீரை யும் அளிக்கின்றீர்கள்? நீங்கள் கொண்டிருக்கும் அனைத்தையும் வழங்குபவராகிய கடவுள் இவைகளை உங்களிடமிருந்து உரிமை

யுடன் பெற விரும்புகின்றாரா?'' என்று வினவுகின்றார் வேமனர். சிறப்பாகச் சைவர்களை நோக்கி வேமனர் பேசுகின்றார்: ''நீங்கள் கல்லாலாகிய காளையை வழிபடுகின்றீர்கள்; ஆனால் உயிருள்ள காளையைப் பட்டினி போடுகின்றீர்கள்; அல்லது அதனைத் தவறான முறையில் பயன்படுத்துகின்றீர்கள். வேண்டுமென்றே மேற்கொள்ளப்பெறும் தவறான முறை இதற்கு மேலும் செல்லமுடியுமா? நீங்கள் வழிபடவேண்டியது உயிரற்ற கல்லை அல்ல; ஆனால் எல்லா உயிர்களிலும் தெளிவாகக் காணப்பெறும் உயிராற்றலையாகும்'' சமயத்தின் புறப்பகுதிகளைப் பின்பற்றுதலை ஏளனம் செய்வதில் வேமனர் கபீருக்கு இணையாகின்றார். ''நீரில் மூழ்குவதால் வீடு பேறு கிடைக்கக்கூடுமாயின், தவளைகள் நீரில் வாழ்கின்றனவே'' என்கின்றார் கபீர். வேமனரும், நாம் முன்னர்க் குறிப்பிட்டது போல், இத்தகைய ஒரு கருத்தினைக் கூறுகின்றார். ஒருவருக்கொருவர் அயலராக இருந்தபோதிலும் வாழ்க்கையையும் வாழ்க்கையை யொட்டிய பிரச்சினைகளையும் அணுகும்முறை இருவரையும் ஒரே உண்மைகளைப் போதிக்கச் செய்கின்றது.

உணர்ச்சி இயல்பிலும், சிந்தனையிலும், கூறும் முறையிலும் வேமனர் திருவள்ளுவரிடமோ கபீரிடமோ இருப்பதைவிடச் சர்வக்ஞரிடம் மிக நெருக்கமாகக் காணப்படுகின்றார். இங்ஙனம் இவர்களை நெருக்கமாகப் பிணைப்பது ஒருவேளை இவர்தம் பொதுவான பின்னணி வண்ணமாக இருக்கலாமோ என்று தோன்றுகின்றது. இளைஞர்களாக இருந்த காலத்தில் இருவரும் காமுகர்களாக ஊர் சுற்றித் திரிந்தவர்கள்; இருவரும் தொடக்கத்தில் பரத்தையர்களிடம் அதிக மோகங்கொண்டு திரிந்தவர்கள்; பின்னர் அவர்களிடம் வெறுப்படைந்தவர்கள். மேலும், இருவருமே திடீரென்று காமக்களியாட்ட வாழ்க்கையினின்றும் சமய வாழ்க்கைக்குத் திரும்பியவர்கள்; ஆனால் கொடுமையான சமூக அமைப்பிற்குப் பலியாட்களாக அமைந்த தேவதாசிகள் இருவருடைய எண்ணங்களிலும் தொடர்ந்து இருந்து கொண்டிருந்ததால் இவர்கள் அந்த ஏழை இழிஞர்களைப் பழித்துரைக்கும் சந்தர்ப்பத்தைத் தவற விடுவதில்லை. அந்த இருவருடைய 'குருட்டிடமும்' பெண்ணைப் பற்றியே இருந்தது என்றும் சொல்லலாம். வேமனருக்கு முற்பட்டவர் சர்வக்ஞர் என்ற கருத்து வாதத்திற்குரியதாகும். ஆனால் இருவரைப்பற்றியும் ஆழ்ந்து ஆய்ந்த இராலபள்ளியார் சர்வக்ஞரின் செல்வாக்கு வேமனர்மீது இருந்தது என்று கூறுவதைவிடப் பின்னவரின் செல்வாக்கே முன்னவரின்மீது இருந்தது என்று கருதுவதற்கே அதிகக் காரணங்கள் இருப்பதாகக் கருதுகின்றார். எவ்வகையிலேனும் இருவரிடமும் பல ஒருமித்த பண்புகள் இருந்தபோதிலும், வேமனரும் சர்வக்ஞரும் ஒருவருக்கொரு

வர் நகல்களாகவோ எதிரொலிப்பவர்களாகவோ இலர்; சர்வக்ஞர் வேமனரைவிட உண்மைவாதியாகவும் உலக வழியில் ஞானம் மிக்கவராகவும் திகழ்ந்தார்; அவர்களிருவரும் சில அடிப்படைக் கருத்துகளையும் குறிக்கோள்களையும் வலியுறுத்துவதில் மாறுபட்டனர்.

நவீன வங்காளத்தில் கூர்த்த மதியினர்களுள் ஒருவரான பேராசிரியர் பினய் குமார் சர்க்கார் என்பார் தம்முடைய **'இந்து சமூக இயலின் உடன்பாட்டுப் பின்னணி'** என்ற நூலில் சொல்லுவது:

> தமிழ்க் **குறளில்** நுவலப்படும் பக்தி, சமத்துவம் புரட்சியில் சென்றுமுடியும் அளவிற்கு வேமனரின் பாடல்களில் கொண்டு செலுத்தப்பெறுகின்றது. சாதி வேறுபாடுகள் உண்டுபண்ணும் ஏலா நிலைகளை எதிர்த்து அவர் குவிக்கும் வசைமாரிகளைவிடப் பொருளாதார நிலைகளினால் ஏற்படும் ஏற்றத் தாழ்வுகளைக் குறித்து அவர் கூறும் ஏளன உரைகள் அடிப்படையையே மாற்றியமைப்பதிலும் மெய்வாய்மை கெடாதிருப்பதிலும் சிறிதும் குறைந்தவை அல்ல....இந்து நேர் காட்சி வாதத்தில் அவர் பெற்றுள்ள இடம் சற்று உன்னத நிலையில் இல்லாது போயினும், அது கபீர், சைத்தன்யர், பிறர் பெற்றுள்ள அதே நிலையில் உள்ளது என்று கூறலாம்.

ஆயினும் திருவள்ளுவரையோ கபீரையோ அல்லது சைத்தன்யரையோ இவ்வுலகம் அறிந்திருக்கும் அளவுக்கு வேமனரை அறியவில்லை; அவர் குறைந்தே அறியப்பெற்றுள்ளார். தெலுங்கு இலக்கியத் தலைமைப் புலவர்கள் தம்மால் இயன்ற அளவு வேமனரை மறக்கும் அளவுக்குக் கண்டனம் செய்த திருப்பணியே எல்லோரும் இரங்கத்தக்க முதற் காரணமாகும். இறுதியில் அவர்கள் தோல்வியுற்றாலும், அஃது அத்தலைவர்கள் தளர்ச்சியடைந்ததாலன்று; ஆயினும் மேனாட்டுப் புலவர்களாகிய டூபாய்ஸ், பிரௌன், மாக்டனல்டு, கோவர், கேம்பெல், கிரியர்சன் ஆகியோர் அவர்களுடைய சதியைக் குறுக்கிட்டுக் கெடுத்ததே காரணமாகும். திருவள்ளுவருக்கு இராஜாஜி கிடைத்ததுபோலவும், கபீருக்கு இரவீந்திரநாத தாகூர் கிடைத்ததுபோலவும் வேமனருக்கு ஓர் ஒப்பற்ற மொழி பெயர்ப்பாளர் அமையாதது மிகவும் வருந்தத்தக்க செய்தியாகும். உலகினரின் நல்லெண்ணத்திற்குத் தக்கவாறு, பிரௌன் வேமனருக்கு முற்றிலும் உதவ முடியவில்லை. அவரோ ஒரு வெளிநாட்டுக்காரர், கிறித்தவர்; அவருடைய அயல்நாட்டுப் பின்னணி வண்ணத்தைக்கொண்டு வேமனருடைய கவிதையின் உயிரோட்டத்தை முற்றிலும் தொட முடியவில்லை; அவருடைய மொழியின் மிகச் சிறு நுணுக்கங்களை அறிந்துகொள்ளவும் முடியவில்லை. எடுத்

துக்காட்டாக இங்கு வேமனரின் பாடல்களில் ஒன்றின் மொழி பெயர்ப்பைக் காண்போம். ''சான்றோர் ஒருவருடைய முதுகில் ஒரு கொப்புளம் கிளம்பினுல், அது நாடறிந்த செய்தியாகின்றது. ஆனுல் எளியவர் ஒருவர் வீட்டில் திருமணம் ஒன்று நிகழ்ந்தாலும் ஒருவரும் அந்நிகழ்ச்சியைத் தம் காதில் போட்டுக்கொள்வதில்லை''. தாம் கையாளும் ஆங்கிலச் சொற்ருெடர்களின் சில குறைகளைத் தவிர, வேமனர் ''சான்ருேர் ஒருவரிடமிருந்து'' ''ஏழை யொரு வரை'' வேறுபடுத்திக் காட்டுகின்ருர் என்ற ஒரு தவருன எண் ணத்தை விளைவித்து வேமனருக்கு ஓர் அநீதியை இழைத்துள்ளார். அத்தகைய முட்டாள்தனமான செயல்புரியும் அளவுக்கு வேமனர் ஒரு தரக்குறைவான கவிஞர் அல்ல. ''சான்ருேர் என்று சொல் லுக்குச் சொல் பொருள்படும் 'புண்யமுகலவாடு' என்ற சொற் ருெடரை அவர் கையாண்டுள்ளார் என்பது உண்மையே. சென்ற பிறப்பில் நற்குணம் நிறைந்தவர்கள் மட்டிலுமே இப்பொழுது செல்வர்களாகப் பிறக்கின்றனர் என்ற இந்து சமய நம்பிக்கையைத் தெளிவாக அறிந்தவரைப் பொருத்தமட்டிலும் ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில் கையாளப்பட்டுள்ள அந்தச் சொற்ருெடர் 'செல் வந்தர்' என்றே பொருள்படுகின்றது. முன்னரே கூறப்பெற்றுள்ள தைத் திரும்பக் கூறின், வேமனருக்காக அதிகத் தொண்டாற்றிய பிரௌனைக் குறை கூறுவது வணக்க இணக்கமற்ற செயலாகும். அதே சமயத்தில் வேமனரை ஆங்கில மொழிமூலம் உலகினருக்கு அறிமுகப்படுத்துவதற்கு அவருக்கு ஓர் இராஜாஜி அல்லது இரவீந் திரநாத் தாகூர் கிடைக்கவேண்டும் என்பதையே நாம் விரும்பு கின்ருேம். **''மறைஞானி ஒருவரின் சிந்தனை யோட்டங்கள்''** என்ற தலைப்பில் அண்மையில் வெளிவந்துள்ள வேமனரின் பொறுக்கி எடுத்த சில பாடல்களின் மிர்முகம்மதுகான் என்பாரின் ஆங்கில மொழிபெயர்ப்பு பிரௌன் என்பாரின் மொழிபெயர்ப்பைவிடச் சிறந்ததாகவே அமைந்துள்ளது எனலாம்; ஆனுல் கான் அவர் களே ''வேமனரின் கவிதைச்சொல்வளத்தின் அரிய நுட்பங்களை யெல்லாம் முற்றிலும் பாராட்டும் அளவுக்குப் போதுமான தன் தெலுங்கு மொழிஅறிவுத்திறன் அமையவில்லை'' என்பதை ஒப்புக் கொள்ளுகின்ருர்.

வேமனரின் கவிதைகளை மொழிபெயர்ப்பதற்கு ஓர் இராஜாஜி அல்லது ஓர் இரவீந்திரநாதர் தேவைப்படுவதுபோலவே அவரு டைய திரு உருவத்தை வண்ண ஓவியத்தால் தீட்டுவதற்கு ஓர் இராஃபேல் அல்லது ஓர் இரெம்பிரண்ட் தேவைப்படுகின்றனர். அத்தகைய உன்னத நிலையிலுள்ள தலைவர் ஒருவர்தான் வேம ரின் கண்களின் ஒளியினையும், அவர்தம் இதழ்களில் திகழும் ஏளன மான புன்முறுவலையும், அவர்தம் நடையின் துள்ளலையும் கண்டு

கொள்ளமுடியும். அன்றியும், மிகத் திறனுடைய கலைஞரும் ஒரு திருவுருவத்தை வரைவதுடன் நில்லாது அவருடைய ஆளுமையின் பல்வேறு முகப்புகளையும் அடக்கிக் காட்டக்கூடிய பலதொடர் திருவுருவங்களை வரைதல் வேண்டும். வேமனர் ஒருகணநேரத்தில் சாந்தமாகவும், அடுத்தகண நேரத்தில் கடுமையாகவும், மூன்று வது கணநேரத்தில் குறும்புத்தனமுடையவராகவும் இருப்பார். மாறும் ஒவ்வொரு மனநிலையிலும், அவருடைய முகப்பொலிவுகள் மாறுவதுடன் அமைவதில்லை; அவருடைய முழு நாடி நரம்பு களிலும் இம்மாற்றத்தைக் காணலாம். ஒவ்வொரு சொல்லையும் எடை பார்த்து, ஒவ்வொரு சொற்றொடரையும் மெருகிட்டு, ஓர் உயர்ந்த தொனியை உண்டாக்கும் சாதாரணக் கவிஞரை ஒத்தவர் அல்லர் வேமனர். அங்ஙனமே அவர் பெரும்பான்மையான தத்துவ அறிஞரினும் வருவதுரைக்கும் ஞானியரினும் முற்றிலும் வேறு பட்டவர். உயர்ந்த பீடத்தையோ அல்லது தந்தத்திலான கோபு ரத்தையோ அவர் பயன்படுத்துவதில்லை. தன்னுடைய செய்தியை மக்களுக்கு உரைப்பதற்காகச் சந்தை கூடும் இடத்தில் நின்று பேசுவார்; கவடின்றி வெளிப்படையாகவே பேசுவார்; தேவைப் பட்டால் ஒளிவுமறைவின்றிப் பட்டவர்த்தனமாகவே பகர்வார். அவர்மீது கற்கள் வீசப்பெறினும், நாய்கள் ஏவப்பெறினும் அவர் அவற்றைச் சிறிதும் பொருட்படுத்துவதில்லை. அவர் நாய்களைப் பற்றி அவமதிப்பாகப் பேசும் மேற்கோள்கள் எண்ணற்றவை யாக இருப்பதால், உண்மையில் நாய்கள் அவர்மீது ஏவப்பெற்ற வையே என்பதாகக் கருதலாம். அவர் சாக்ரீட்டசைப் பற்றியோ அல்லது கிறித்துவைப்பற்றியோ கேள்விப்படாதிருக்கலாம்; ஆனால் வருவதுரைக்கும் ஞானியொருவர் அவர் வாழ்ந்த காலத்தில் அவ ருடைய மக்களாலேயே மதிக்கப்பெறுவது அரிது என்பதை உறுதி யாகவே அறிந்திருந்தார். தம்முடைய பாடல்கள் ஒன்றில் தம் வீட்டின் கொல்லைப்புறத்திலுள்ள மூலிகை மதிப்பு பெறுததைப் போலவே வருவதுரைக்கும் ஞானியும் அவர் காலத்து மக்களா லேயே மதிக்கப்பெறுவதில்லை என்று கூறுகின்றார்.

பல்வேறு வழிகளில் கவிஞராகவும், தத்துவ அறிஞராகவும், வருவதுரைக்கும் ஞானியாகவும் திகழ்ந்த வேமனர் எல்லாக் காலங்களுக்கும் எல்லா நாடுகட்கும் தேவையான செய்தியைக் கொண்டவராகத் திகழ்கின்றார். ஒழுக்க நெருக்கடியும், வேர்விடா நிலையும், நேரியபோக்கின் இழப்பையும் கொண்ட இன்றைய உல கினுக்கு அவருடைய பொருத்த நிலை மிக அதிகமாகவே அமை கின்றது. மனிதர்கள் மட்டிலும் மனிதர்களாக வாழ்ந்தால் இந்த மண்ணுலகமே விண்ணுலகமாகத் திகழும் என்று அவர் உரைக்க வில்லையா? மேலும், கட்டுக்கதைகளில் வரும் விண்ணுலகின்மீது

மிக்க ஆர்வங்கொண்டு நம்முடைய உலகினை இழிவாகக் கருதுவது முட்டாள்தனமானது என்று அவர் கழறியுரைக்கவில்லையா? நாம் நிற்கும் ஒவ்வொர் இடமும் திருநிலையான இடங்களனைத்திலும் மிகத் திருநிலையுடையது என்று அவர் வற்புறுத்திக் கூறவில்லையா? அவருடைய சமயம் மனித சமயமாகும்; அன்பை அடிப்படையாகக்கொண்ட அவருடைய வாழ்க்கைப் பணி மனிதர்களை நன்கு புரிந்துகொள்வதும் மனிதர்களிடையே நட்பை உண்டாக்குவதுமான பணியாகும்; இனமரபு அல்லது சமயம், சமயக்கிளை அல்லது வழிபாட்டு மரபு, வகுப்பு அல்லது சாதி இவற்றின் அடிப்படையில் வேறுபாடற்ற உலக சகோதரத்துவத்தை நிறுவுவதே அவருடைய குறிக்கோளாகும். இங்ஙனம் வேமனர் கடவுள்பற்றிய கருத்தற்றவரும் கடவுள் இல்லை என்று சாதிப்பவரும் உட்பட ஒவ்வொருவருக்கும் ஒரு தூதுச்செய்தியைக் கொண்டுள்ளார். ''தன்னோடு சேர்ந்த மக்களின் துக்கங்களைத் தன்னுடையனவாகக் கருதுபவனே மனிதன் எனப்படுவதற்குத் தகுதியானவன்'' என்ற அவருடைய விழுமிய கழற்றுரையில் அவருடைய தனிக்கோட்பாட்டின் சாரம் அடங்கியுள்ளது.

பின்னிணைப்பு-1

# மொழி பெயர்ப்புகள்

**கவிதை**, எக்கவிதையாயினும், மொழிபெயர்ப்பில் குறைவுடையதாகின்றது. மொழிபெயர்ப்புகளில் மிக நல்லதொன்றிலும் சொல் இசையையும் அதன் பிற நுண்ணிய எழில்களையும் எடுத்துக் காட்டல் இயலாது. அடியிற்காணும் வேமனரின் கவிதைகளின் (ஆங்கில) மொழிபெயர்ப்புகளை நோக்குங்கால் இந்த உண்மையை நினைவில் இருத்துதல் வேண்டும். யாப்புடன் கூடிய மொழி பெயர்ப்புகள் சார்ல்ஸ் இ. கோவருடையவை. உரைநடையிலுள்ள மொழிபெயர்ப்புகள் சார்ல்ஸ் ஃபிலிப்ஸ் பிரௌன் என்பாருடையவை. இவற்றுள் நாம் வேமனரின் மொழி மரபின் நயத்துடன் அவருடைய இசை ஒழுக்கு, சந்த இயக்கம், பொருள் செறி திட்பம் ஆகியவற்றையும் இழந்த நிலையைக் காண்கின்றோம். ஆயினும் மொழிபெயர்ப்பில் அவருடைய கவிதையில் செறிந்து காணப் பெறும் இடியையும் மின்னலையும் காட்டி அழகினையும் ஆற்றலையும் தரும் என்று நம்பப்பெறுகின்றது.

*[தமிழ்மொழி பெயர்ப்பு : இயன்றவரை தெலுங்கு மூல நூலைக்கொண்டு திருந்திய வடிவம் தர முயன்றுள்ளேன். தெலுங்கு மொழியின் நயம் எல்லாவற்றையும் தமிழில் கொண்டுவர முயலுங்கால்; தமிழ் மொழியின் நயம் முன்வந்து விடுகின்றது. ஒரு மொழியின் நயத்தைப் பிறிதொரு மொழியின் நயத்தால் புலப் படுத்த இயலாது என்ற உண்மை இதனால் தெளிவாகின்றது.]*

### கோவர் மொழிபெயர்ப்பிலிருந்து

**பொய்ச்சமயம்:**

1. நாடொறும் மறையினைக் கற்பினும் கேட்பினும்
நயமிலாக் கொடியவன் புனிதமெய் திடுவனோ?
நாடொறும் கரியினைப்* பாலினாற் கழுவினும்
நன்னிறம் எய்துமோ? தன்னிறம் மாறுமோ?

[*கரி—அடுப்புக் கரி]

2. பொங்கும் மதங்களைப் பின்பற்றும் மானிடர்
புவியினிற் பல்கோடி கோடியாய் உள்ளனர்;
துங்கமார் அப்பெருஞ் சமயங்கள் நம்பிக்கை
தோன்றச் செயாவிடின் அவைநல்ல அல்லவே.

3. சாத்திரக் குப்பையைச் சாலப் படித்தவர்,
சார்ந்ததன் உண்மையைத் தேர்ந்ததிற் றோய்ந்தவர்;
மாத்திரைப் போதினில் எய்திப் பிறந்திடும்
மரணத்தின் உளவினைத்* தெரிகிலார்; ஐயகோ!
[*உளவு—மறை, இரகசியம்]

4. நெற்றியில் கைகளில் நீற்றினைப் பூசுவீர்!
நிகரற்ற லிங்கத்தை மார்பினிற் பூணுவீர்!
பற்றுடன் இவையுங்கள் 'ரொக்கம்' பெருக்கலாம்
பாவியீர்! உலகெலாம் பாழாகும் ஆகுமே!

5. சார்ந்திடேல்! சார்ந்திடேல்! தூய்மையில் லாயெனச்
சாற்றுகின் றார்சிலர்; ஏற்றமுள் ளாரெவர்?
மாந்தர்தம் மேனியின் தசைகளிற் பாபமே
மருவிடும்; உலகிலிக் கோட்டைக் கிழித்ததார்?

**உருவ வணக்கம்:**

6. கற்களை மட்டும்நீர் கனிவுடன் பற்றுவீர்!
கண்கண்ட* பரமனை நினைந்திடா மிருகம்நீர்!
பொற்புடன் உலகினில் பேசிடும் உயிரினும்
பொலிவிலாக் கற்களோ உயர்சிறப் பெய்திடும்?
[*கண்கண்ட பரமன்—நடமாடும் தெய்வம் (திருமூலர்)]

7. புலனற்ற படிவத்தில்* இறைவனுளன் என்று
பொய்யான கனவினை நீர்காண ஈர்க்கும்
நலனற்ற மாயைஎது? கேட்டலொடு பார்த்தல்
நண்ணாத கற்கள்அம் மாயைக் குவப்போ?
[*படிவம்—விக்கிரகம்]

8. மண்ணினை யெடுத்தினிய உருவம் சமைத்ததை
மாதேவன் என்றுவழி பாடுசெய் கின்றவர்;
உண்ணின்ற சோதியைக் கண்மூடி யாயிங்
கூர்தொறும் இகழ்ந்திடும் தீரமெங் குற்றனர்?

9. மலையினிற் கல்லைப் பெயர்த்தெடுக் கின்றவர்
மற்றதைக் கால்களாற் கைகளால் தட்டியாய்ந்
திலகுநல் உளியினால் அழகுற வடித்தபின்
'இறைவனே! இறைவனே!' எனத்துதித் தாடுவார்

10. உயிருள்ள எருதினைப் பசியினால் வாட்டுவார்;
ஓப்பியொரு கைப்புல்லை* யற்புடன் நல்கிடார்;
உயிரற்ற இடபத்தை மகிழ்வுற் றிறைஞ்சுவார்;
உலகைஏ மாற்றுமிக் கொடியரைச் சாடுவோம்.
[*அற்பு—அன்பு]

11. காயமாம் கோவில்வாழ் நேயனைச்* சேர்ந்திடீர்!
கற்கோவில் எய்துவீர்! அற்போடு படையலைத்
தூயநற் பண்புடன் நல்குவீர்! நல்குவீர்!
தொட்டதும் உண்டுகொல் அப்பெருந் தெய்வமே!
[*சார்ந்திடீர்—சாரமாட்டீர்]

**சாதி:**

12. மண்ணகத் தெங்கணும் வாழ்கின்ற மானுடர்
மாசறு சடத்தொடே தோன்றினர்; யாவரும்
எண்ணிடில் சோதரர்; வேறுபா டுள்ளதா?
இறைவன்முன் யாவரும் சமமாவர் பேதமேன்?

13. சாதியோ, பசியைத் தணித்திடும் உண்டியோ,
சனித்திடும் தானமோ, சிறப்பினை நல்கிடும்?
பேதையிற் பேதையாய்ச் சாதிக்கு முதலிடம்
பேணுது நல்கலேன்? நாணுத மாந்தரே.

14. எவன்விழிக் குலகத்து மேவிடும் மானிடர்
இழிவுற்ற சூத்திரர் எனத்தெரிந் திடும்;அவன்
புவியினில் மிகமிகத் தாழ்ந்தவன்; அவற்கப்
பொல்லாத நரகந் திறந்தபடி உள்ளதே!

15. உற்றிடும் சாதியின் பூசலோர் மாயையே!
உள்ளசா திக்கெலாம் மூலமொன் றல்லவோ?
உற்றவர் தங்களைப் புகழ்வதற் கிகழ்வதற்
குலகினில் யாவரே நிச்சயித் திடவலார்?

16. பறையனின் குருதியும் சதையும்நம் உடலெனப்
பாங்குடன் பொலிவதைக் கண்டும்நீர் இகழ்வதேன்?
நிறைவுறும் உலகத்தில் எங்கணும் மேவிடும்
நின்மலப் பொருள்எந்தச் சாதிநீர் கூறுவீர்?

**மரணம்:**

17. செத்தவன் பொருளைச் சுமந்துகொண் டேகிடான்;
சேமித்த நிதியிவண் தங்கிடும்; மீண்டவன்
இத்தலத் தினில்வரின் பொய்த்தசெல் வத்தினை
ஈட்டிடு லேவரும்; *தேட்டத்தி னிழிவதே!
[*தேட்டம்—செல்வம்]

18. மேவும் இரும்பொன் றுடைந்திடில் கொல்லனால்
மீளவும் சரிசெய்வ தெளிதுகாண்; நம்முளோர்
ஆவிதான் முறிவொற் றொடிந்திடின் பண்டுபோல்
ஆக்குதல் மாற்றுதல் அரிதுகாண்! அரிதுகாண்!

**வேறு**

19. பழைய பானை உடைந்திடின் மீளநாம்
பார்த்து வேறு புதியதை வாங்குவோம்;
பழைய மேனி சிதைந்திடின் இவ்வுயிர்
பண்பின் வேறொரு *மேனியைத் தாங்குமால்
[*மேனி—உடல்]

20. பற்பன் னூல்களைப் பாங்குறக் கற்பினும்
பற்பல் லாண்டு புவியினில் வாழினும்
பற்பல் லின்பினைத் துய்ப்பினும் மீளஅப்
பாழ்த்த மண்ணில் மறைவது மெய்ம்மையே.

21. உலக வாழ்க்கை முடிவுறும் போதினில்
உற்ற சுற்றம் உதவிட வல்லதோ?
நிலைநி றுத்திட யாருளர்? சாவினில்
நீணி லத்தில் உதவுவோ ரில்லையே.

**நல்ல மனைவியர்:**

22. தெருளும் அன்பினள் மேவிடும் நன்மனை
செல்வி மிக்கதோர் தூய்மையில் ஓங்குமால்;
இருளில் மேவிடும் தீபமே யன்னவள்;
இறைவன் மேவிடும் இல்லமே யவ்விலம்.

23. வருந்தி வந்த விருந்தினர் தம்மிடம்
மருவும் அன்பினர் கற்பகம் போலவே
பரந்து சாலத் தளிர்த்துக் கனியுடன்
பாரில் ஓங்குவர்; சீரிற் பிறங்குவார்.

**வேறு**

24. ஈட்டுகின்ற பெருஞ்செல்வம் செல்வம் அல்ல;
இணையற்ற நன்மகவே செல்வம்; தோன்றி
வாட்டுகின்ற முதுமைவரை நேர்மை யாக
வாழ்வதுவே செல்வத்துள் சிறந்த செல்வம்.

25. நாயகன்றன் பேரன்பை ஒருத்தி பெற்றால்
நலமுற்ற அவ்வாழ்வில் இன்பம் பொங்கும்;
சேயிழையின் உள்ளத்தில் கோணல் மேவில்
தீண்டாமல் அன்னவளை ஒதுக்கல் நன்றே.

26. கரும்புற்ற நறுஞ்சாறும், சருக்கரையும் தேனும்
கமழ்கின்ற பலாக்கனியிற் பொலிகின்ற சுளையும்
விரும்புறுகொய் யாக்கனியும் நமைவிரும்பும் நண்பர்
விருப்பினொடு பகர்மொழிகட் கிணையாகும் கொல்லோ?

**தீய மனைவியர்:**

**வேறு**

27. கணவனுக் கடங்காப் புல்லிய மனையாள்
காலனைப் பேயினை ஒப்பாள்
குணமிலா அப்பெண் பேயினைப் பிடித்துக்
குலுக்கிடும் தகுதிகொண் டவளாம்.

28. கடலினிற் செல்லும் கப்பலின் வழிபோல்
காற்றிற்செல் பறவையின் வழிபோல்
புடவையில் மடவார் நடையினை யாரும்
புந்தியிற் காணுவ தரிதே.

29. நவையிலா மனைவி வாய்த்திடின் அவனே
நற்செல்வன்; இலையெனின் அன்னோன்
புவியினில் பெயர்க்குக் கணவனும்; அவளோ
புருடனைப் பிணமென வெறுப்பாள்.

**வேறு**

30. நாதன் களிப்பே பெரிதென்னும்
நல்லாள் உலகிற் கணியாவாள்
வாதம் பேசும் தன்னலப்பெண்
மரணம் விடுத்த அம்பாவாள்.

31. அடங்கா தெதிர்க்கும் மங்கையர்கள்
அணங்கோ? இல்லை; கொடுவிலங்கே;
அடங்கா இவளோ டுறைவதினும்
அப்பா லையில்வாழ் வதுநன்றே.

**இருபிறப்பாளர்:**

**வேறு**

32. உற்றுரை உறவினரைச் சூத்திரரென் றெண்ணி
''உலகத்தில் நாங்களிரு பிறப்படைந்தோம்''—என்பர்
பற்றோடும்—''அது''—தம்மைப் புரக்குமென நினைப்பர்;
பாபம்செய் மனத்தினரே சூத்திரராம் ஐயா!

33. சண்டாள இதயத்தை நன்றாகப் பெற்றோர்
தாழ்வுற்ற பாபத்தை மேல்மேல் வளர்ப்போர்
கொண்டாடும் நல்லெண்ணம் இல்லா திருப்போர்
குற்றமில் இருபிறப் புற்றவர் ஆவரோ.

34. எவ்வளவோ சாத்திரங்கள் கற்றுணர்ந்தோம்; யாமே
இவ்வுலகில் தூயரெனச் செப்பிடுசெல் வரினும்
இவ்வுலகிற் பிறர்பொருளைச் சுரண்டாமல் மிக்க
ஏழ்மையினில் உழல்பவரே மேலாய மாந்தர்.

**வேறு**

35. தூய பூணூல் அணிவதனால்
சூத்திரத் தன்மை போமென்பர்;
தீய மரணம் வரும்போது
திரும்ப* அஃது வரல்என்னோ?
*[அஃது—சூத்திரத்தன்மை]

**வேறு**

36. காதலுறு மனையாளை வீட்டை நீத்துக்
கரும்பொன்னை யிடையினிலே சுற்றிக் கொண்டு
வேதனைசெய் கைப்பான மதுவை யுண்டு
மிருகம்போல் வாழ்வதனால் இன்பம் உண்டோ?
[இது, பைராகிகளை இகழ்ந்தது]

**அறிஞரும் அல்லாதாரும்:**

37. தாமதித்துப் புரிசெயல்கள் நிறைவேற வில்லை;
தரிப்பின்றிப் புரிசெயல்கள் உறுதியுறவில்லை;
மாமரத்தில் இளம்பிஞ்சை யறுத்துவிட்டால் அஃது
வண்ணமுறப் பழுத்திடுமோ? நண்ணுசுவை தருமோ?

38. தண்ணீரில் மிதக்கின்ற நாவாய்கள் நிலத்தில்
சாண்கூட ஓடாது; கூர்மதிபெற் றவனும்
நண்ணாத இடத்தினிலே அகப்பட்டுக் கொண்டால்
நலிவுறுவன், எளியவர்கள் வென்றிடுவர் அம்மா.

**வேறு**

39. நெடும்புனல் முதலை யானையை வெல்லும்
நிலத்தினில் அம்முத லையினை
அடும்மிகச் சிறிய சுணங்கனும்; இடமே
அவரவர்க் காற்றலைத் தருமால்.

**வேறு**

40. புலபுலெனக் கலகலெனப் பன்றிகளும் நாணப்
புத்திரர்கள் ஏழெட்டைப் பெற்றதனாற் பயனென்?
நலமளிக்கும் குஞ்சரம்போல் பெருமிதத்தோ டோங்கும்
நன்மகவொன் றீன்றிடினிவ் வுலகமெலாம் வாழும்.

41. திறமையுறும் மாணவனுக் குயரறிவைப் புகட்டச்
செகத்தினிலெவ் வாசானும் பின்னடையான்;மிக்க
அறிவினர்க்கும் பேதையினைத் திருத்திடவொண் ணுதே
யாவரே வளைநதியை நிமிர்த்திடவல் லவர்கள்?

42. சிற்றுணர்வோர் எப்பொழுதும் தற்பெருமை பேசித்
திரிந்திடுவர்; பேரறிஞர் அமைதியுடன் வாழ்வர்;
பெற்றியுடன் மென்மொழியைப் பகர்ந்திடுவர்; தங்கம்
பீடற்ற பித்தளைபோல் ஓசையளித்திடுமோ?

43. வற்றுத புனற்கங்கை அமைதியுடன் மெல்ல
மாண்போங்க நெளிந்தோடும் கார்காலத் துயிர்கொள்
சிற்றாறு கல்லென்று குதித்தோடும்; தாழ்ந்தோர்
திறஞ்சான்ற சான்ருேர்போல் அடங்கிநடப் பாரோ?

44. பொய்மையினேன் நல்லோர்போல் மேன்மையடை வானே?
புகழ்அதிட்டம் அவன்முகத்தில் முறுவலலர்ந் திடுமோ!
ஒண்மையுடன் அவன்வீட்டிற் பெருமைநிறைந் திடுமோ?
ஓட்டையுறு குடந்தண்ணீர் சேந்தவுத விடுமோ?

**சார்லஸ் ஃபிலிப் பிரெளன் மொழி பெயர்ப்பிலிருந்து**

**மனிதனும் இறைவனும்:**

45. வண்ணமுறும் அண்டமாய் ஆனவனுந் தன்னுள்
மாசற்ற பெருஞ்சோதி யிருப்பதறிந் தவனும்,
உண்ணிறைந்த பரம்பொருளைப் புறப்பொருளோ டிணைக்க
உணர்ந்தவனும், புவியகத்து நிறைந்தவனு யினனுல்.

46. ''மும்மூர்த்தி தமைநாணம் உறச்செய்த குற்றம்
முரணற்ற வேமன்னன் தலைசுமக்கும்''—என்று
செம்மையுடன் பகர்ந்திடுக; ஒரேகடவுள் மட்டும்
செகத்தினிலே முறையான பெருமையினைப் பெறுக.

**வேறு**

47. உருகுந் தாயை அறிந்தவனே
ஒப்பில் இறையை உணர்ந்தவனும்;
மருவும் மண்ணை அறிந்தவனே
மாண்பார் விண்ணை உணர்ந்தவனும்;
பொருவில் மண்ணைத் தனிவிண்ணைப்
புந்தி ஐயம் எய்தாமல்
துருவித் துருவி அறிந்தவனே
தூய தன்னை உணர்ந்தவனும்.

### வேறு

48. பரவும் மூன்று தெய்வங்கள்
பாரில் தோன்றச் செய்தவர்யார்?
திரமில் லாதார் இவர்தம்மைத்
தினமும் பணிவார்; இவர்மூடர்.

### வேறு

49. சமயங்கள் பலப்பலவாம்; கொள்கைகளும் பலவாம்;
தனித்தாயின் இவைபொய்யே; பேருண்மை ஒன்றே!
சமயத்தின் ஆசாரம் விடுத்தந்த பிரமம்
தானுக முயல்வதுவே மேலான நெறியாம்.

50. சிறந்ததுகொல் லாமையெனப் பகர்ந்திடுமந் தணர்கள்
தீமகத்தில் பலியிட்டுத் தாமுகந்துண் கின்ருர்:
இறந்தபினர் விலங்குகளைக் கரந்துணுஞ்சண் டாளர்
இவர்களினும் மிகப்பெரிய குலமுடையார் அன்ருே?

### வேறு

51. நட்டதோர் கல்லைச் சிவனெனப் பேசி
நாடொறும் சிறப்புகள் புரிவார்
நட்டகல் லகத்திற் சிவனிலை; நம்முள்
நாயக னுளனறிந் திடுமின்.

### வேறு

52. வளமான நின்பார்வை ஒன்ருக இருந்தால்
மங்கையுடன் வாழ்பவர்போல் நின்னறிவு பொலியும்;
அளவற்ற பெருஞ்செல்வப் பிரபுவெனச் சால
அகத்தினிலும் புறத்தினிலும் தனிச்சோதி மிளிரும்.

### வேறு

53. தொலைவினில் உள்ளதத் தெய்வமென் ருேதிடில்
தூரத்து மேவுவான்;அருகிலுள் ளானெனில்
மலைவெலொம் ஓட்டியிவ் வுடலினைக் கோவிலாய்
மகிழ்வுடன் எண்ணியிங் குவகையோ டொன்றுவான்;
தலைமைசால் அன்னவன் ஊர்தியில் வாழ்வினைச்
சஞ்சலம் இல்லாமல் அன்பிற் பிணித்திடில்
உலகினில் அப்பொருளைச் சோதிபோல் அழிவிலா(து)
ஊழிகள் தேயினும் மாருது வாழுவார்.

54. செம்பொன்னும் வெண்பொன்னும் குன்ருக இருப்பச்
சிவபிரான் வீடுதொறும் பிச்சையெடுத்தனனே;
அம்புவியிற் செல்வங்கள் சாலவிருந் தாலும்
அடுத்தவர்தம் பொருளினிலே விருப்பமுள தையா.

55. இவ்வுலகம் மாயையென வேதாந்தி பகர்வான்;
இதுதெய்வத் தன்மையுடைத் திதுமாயை அல்ல;
இவ்வுலகம் மாயையெனிற் பொய்யாத தெய்வ
இருப்பெங்கண் உளததனைத் தெரிந்திடுதல் வேண்டும்.

56. இவ்வாழ்வின் இன்பங்கள் விட்டுவிட் டால்லாபம்
எஞ்சுமெனப் பகர்பவர்கள் நம்பிக்கை பொய்யே!
இவ்வாழ்வில் மறுவுலகம் மெல்லமெல்ல ஒளியை
இன்பமுடன் வீசுவதை நண்புடன்கண் டிலிரோ?

பின்னிணைப்பு-2

# மேற்கோள் நூல்களின் பட்டியல்

*வேமனரைப்பற்றியும் வேமனராலும்*
*எழுதப்பெற்ற தெலுங்கு ஆங்கிலத்*
*தேர்ந்தெடுத்த நூல்கள்*

## தெலுங்கு


1. *வேமன யோகீந்திர சரித்திரமு (ஆர். பூர்ணுச்சார்யுலு, மசூலிப்பட்டணம், 1913).*
2. *வேமன சூக்தி ரத்ணுகாரமு (4035 பாடல்கள்). (ஆர். பூர்ணுயாச்சார்யுலு, மசூலிப்பட்டணம், 1913).*
3. *ஸ்ரீ வேமனயோகி ஜீவிதமு (பஞ்சக்னுல ஆதி நாராயண சாஸ்திரி, வாவில்ல இராமசாமி சாஸ்திருலு அண்டு சன்ஸ், சென்னை, 1917).*
4. *போத்தன, வேமனல யுகமு (திகவல்லி வேங்கடசிவராவ் 1924).*
5. *மகாயோகி வேமனகவி (நெடுநூரு கங்காதரம், சி. வி. கிருஷ்ணு புக் டிப்போ, சென்னை) (ஆண்டு குறிப்பிடப் பெறவில்லை).*
6. *வேமன ஞானமார்க்க பத்யமுலு (3002 பாடல்கள்) சி. வி. கிருஷ்ணு புக் டிப்போ, சென்னை) (ஆண்டு குறிப்பிடப்பெறவில்லை).*
7. *வேமன (சர். ஆர். வேங்கட்டரத்னம் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்) திரு. இரால்லப்பள்ளி அனந்தகிருஷ்ண சர்மா ஆந்திரப் பல்கலைக் கழகம்) (1947 புதிய பதிப்பு).*
8. *கவித்வ—தத்வ—விசாரமு (டாக்டர் சி. ஆர். ரெட்டி, ஆந்திரப் பல்கலைக் கழகம், வால்டயர் (1947—புதிய பதிப்பு).*
9. *வேமன (வங்கூரி சுப்பாராவ், கமலா குடீரம், நரசாபுரம்) (1951—புதிய பதிப்பு).*

10. சதக வங்கமய சர்வஸ்வமு, முதற்பகுதி (வேதம் வேங்கட்டகிருஷ்ண சர்மா, சென்னை—1954).

11. வேமனரின் பாடல்கள் (குறிப்புரைகளுடன்) (2728 பாடல்கள்) (வாவில்லா இராமசாமி சாஸ்திருலு அண்டு சன்ஸ், சென்னை (1955—புதிய பதிப்பு).

12. சதக கவுலு சரித்திரமு (வங்கூரி சுப்பாராவ், கமலாகுடீரம், நரசாபுரம்) (1957—பதிப்பு).

13. வேமன பத்யமுலு (5,010 பாடல்கள்) (நெடுநூரி கங்காதரம் தொகுத்தது, அட்டெபள்ளி அண்டு கோ, இராஜமந்திரி 1960).

14. வேமன நீதி பத்ய ரத்னுவளி (1,116 பாடல்கள்) (சி. வி. கிருஷ்ணு புக் டிப்போ, சென்னை (1961—புதிய பதிப்பு).

15. ஆந்திரகவி தரங்கினி, தொகுதி VI (சங்கந்தி சேஷய்யா, இந்து தர்ம சாஸ்திர கிரந்தநிலையம், க்மிலேசுவரபுரம்) (1961—பதிப்பு)

16. சமக்ர ஆந்திர சாகித்தியம், தொகுதி 12, (ஆருத்ரா, எம். சேஷாசலம் அண்டு கோ, சென்னை, 1968).

**தெலுங்கு-ஆங்கிலம்**

1. வேமனரின பாடல்கள் (693 பாடல்கள்) மொழிபெயர்ப்பு: சி.பி. பிரௌன், வி. இராமசாமி சாஸ்திருலு அண்டுசன்ஸ், சென்னை) (1911—புதிய பதிப்பு).

2. வேமனரின் பாடல்கள் (தெலுங்கு மூலத்துடன் ஆங்கில மொழி பெயர்ப்பு) (1,215 பாடல்கள்) (சி. பி. பிரௌன், ஆ. பி. சாகித்திய அகாடமி, ஐதராபாத், 1967).

3. மறைஞானி ஒருவரின் சிந்தனைகள் (மீர் மகம்மது அலிகான், ஐதராபாத் 1966).

**ஆங்கிலம்**

1. இந்து ஒழுக்கங்கள், வழக்கங்கள், ஆசாரங்கள் (ஜே. ஏ. டுபாய்ஸ், ஆக்ஸ்ஃபோர்டு) (1953—புதிய பதிப்பு)

2. ''வேமனர்—ஒரு தென்னிந்தியக் கவிஞர்'' (வில்லியம் ஹோவார்டு கேம்ப்பெல்) சென்னை கிறித்தவக் கல்லூரி இதழ் 1898).

3. ''வேமனர்'' (ஆர். எம். மாக்டனுல்டு, சென்னை இலக்கிய—அறிவியல் ஆய்வு இதழ், 1866).

4. தென்னிந்திய நாட்டுப் பாடல்கள் (சார்லஸ் இ. கோவர், ஹிக்கின்பாதம் அண்டு கோ, சென்னை, 1871).
5. தெலுங்கு இலக்கியத்தில் சில மைல் கற்கள், தொகுதி II வேமனரின் காலம் (ஜி. ஆர். சுபராமய்ய பந்துலு, பி. நரசிம்மேசுவரகுப்தா, சென்னை, 1915).
6. தெலுங்கு இலக்கியம் (பி. டி. ராஜூ, பி. இ. என். பம்பாய், 1944).
7. தெலுங்கு இலக்கியம் (சி. பி. செஞ்சய்யா, ராஜா எம். புஜங்கராவ், கல்கத்தா. (ஆண்டு குறிப்பிடப்பெறவில்லை).
8. ''வேமனரைப் பற்றி'' (டாக்டர் சி. ஆர். ரெட்டி, வானொலிப்பேச்சு, சென்னை வானொலி நிலையம், சென்னை, 1950).
9. ஞானி வேமனர்-அவருடைய மெய்விளக்கம். (ஈவர தோபா, ஐதராபாத் தெலுங்கு அகாடெமி, ஐதராபாத், 1950).
10. ''வேமனர்: அவருடைய கவிதையும் மெய்விளக்கமும்'' (ஜி. வி. கிருஷ்ணராவ், 'ஹாஃப்வே' என்ற இதழில் வெளிவந்தது. வி. ஆர். நார்லாவுக்கு அவருடைய 51—வது பிறந்த நாளன்று வழங்கப்பட்ட 'தங்க நூல்') 1958.
11. இந்தியாவின் இதயம் (எல். டி. பார்னெட், இலண்டன், 1924.)

பின்னிணைப்பு-3

# சொற்றொகுதியும் குறிப்புகளும்

**அட்டங்கி :** *இப்பொழுது குண்டூர் மாவட்டத்திலுள்ள ஒரு சிற்றூர். புரோலயாவேமா (14-ம் நூற்) என்ற ரெட்டி அரசர் காலத்தில் இவ்வூர் தலைநகராக இருந்தபொழுது பெரும் புகழுடன் திகழ்ந்தது.*

**அத்வைத வேதாந்தம்:** *கௌடபாதர் என்பவரால் முதன் முதலாக இந்தியாவில் ஒழுங்குபடுத்தியுரைக்கப்பெற்றது; இதற்குச் சிறந்த விளக்கம் நல்கியவர் சங்கரர்.*

**அபினவகுப்தர்:** *(ஏறக்குறைய கி.பி. 1000): இவர் தத்துவ அறிஞர்; அணியியல் வல்லுநர்.*

**அப்பகவி:** *காக்குநூரி அப்பகவி என்பவர் கி.பி. 17-ம் நூற்றாண்டில் வாழ்ந்த இலக்கண யாப்பு நூல்களின் ஆசிரியர். நன்னயரால் எழுதப் பெற்றதாகக் கருதப்பெறும் வடமொழி நூலாகிய* **ஆந்திர சப்த சிந்தாமணி** *என்ற நூலினை மொழி பெயர்த்து மேலும் பல புதிய பொருள்களைச் சேர்த்துள்ளார்.*

**அமரகோசம் :** *கி.பி. ஆறாம் நூற்றாண்டுக்கும் எட்டாம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தில், (வின்டர்னிட்ஸ் கருத்துப்படி) வாழ்ந்தவராகக் கருதப்பெறும் அமரசிம்மர் என்ற புத்த சமயத்தவரால் தொகுக்கப் பெற்ற மிகவும் புகழ் பெற்ற வடமொழிப் பேரகராதி. இது மூன்று பகுதிகளாகப் பிரிக்கப் பெற்ற ஒரு பொருள் பல சொற்களைக் கொண்ட அகராதியாகும். அமரகோசத்திற்குக் கிட்டத்தட்ட ஐம்பது உரைகள் உள்ளன.*

**அரம்பை:** *தேவர்களும் அரக்கர்களும் அமுதம் பெற வேண்டித் திருப்பாற்கடலைக் கடைந்தபோது அக்கடலினின்றும் எழுந்த உம்பர் உலக அழகி. தன்னைவிட முனிவர்கள் சிறந்த மதிப்பைப் பெற்றுத் தன்னை ஒதுக்கி விடுவர் எனக் கருதி அவர்களை வசியம் செய்து தவறான நெறியில் செலுத்துவதற்கு இவள் அடிக்கடி இப்புவிக்கு இந்திரனால் அனுப்பப்பெறுபவள்.*

**அருந்ததி:** வசிட்டரின் மனைவி. ஒரு குறிக்கோள் துணைவி என மதிப்புடன் போற்றப் பெறுகின்றவள். தீண்டத் தகாத வகுப்பினைச் சேர்ந்தவர். அருந்ததி என்பது அதிகாலையில் தோன்றும் ஒரு நட்சத்திரமுமாகும்.

**அலங்கார சாத்திரங்கள்:** அணியியல் நூல்கள். எம். வின்டர் னிட்ஸ் கூறுகிறார்: ''மிகப் பண்டுதொட்டே இந்தியாவில் 'அணியியல்' ஓர் அறிவியல்போல் பேணி வளர்க்கப்பெற் றுள்ளது''. கவிஞர்கட்குத் துணையாக இருப்பதைவிட அவர்கட்குத் தடையாக இருக்கும் அளவுக்கு அது தீவிரமாகப் பேணி வளர்க்கப்பெற்றது.

**ஆந்திரம்:** ஆந்திரம், தெலுங்கு என்பன ஒரே பொருளையுடை யவை. இவை மக்களையும், நிலப் பகுதியையும், மொழியை யும் குறிக்கும். ஆந்திரர்கள் மிகப் பழங்குடி மக்கள்; இந்து சமயத்தின் மிகப் பெரிய பழங்கால நூலாகிய **ஐத்திரேய பிராமணத்தில்** இவர்கள் குறிப்பிடப் பெற்றுள்ளனர். இவர் களுடைய மொழி திராவிடக் குடும்பத்தைச் சார்ந்தது. இந் திய யூனியனைச் சேர்ந்த பல மாநிலங்களில் ஆந்திரமும் ஒன்று; இஃது இந்தியாவின் தென்கிழக்குப் பகுதியில் உள் ளது. இதன் பரப்பு 275, 280 சதுர கிலோ மீட்டர்கள். 1961 மக்கட் கணிப்புக் கணக்குப்படி இம்மாநிலத்தின் மக்கள் தொகை 35,983,477 ஆகும்.

**ஆந்திர சரஸ்வத பரிஷத்:** இஃது ஓர் இலக்கிய ஆராய்ச்சி அமைப் பாகும். முதன் முதலாக 1911-ல் சென்னையில் தொடங்கப் பெற்றது; பின்னர் இதன் நூலகமும் அலுவலகமும் காக்கி நாடாவிற்கு மாற்றப் பெற்றன. மிகவும் வள்ளண்மை வாய்ந்த பித்தாபுரம் மாமன்னரான திரு ராவ் வேங்கட்ட கூர்ம மகிபதி சூர்ய ராவ் என்பவர் இதன் புரவலர்களுள் ஒருவராவர். இதன் நூலகத்தில் கிட்டத்தட்ட ஐயாயிரம் ஓலைச் சுவடிக் கையெழுத்துப் படிகள் உள்ளன.

**இராமகவி, துரக:** சிறந்த தெலுங்குக் கவிஞர். சினமூட்டப் பெற்றால் கீழான நிலைக்கு இறங்கக் கூடியவர். வசைபாடு வதில் வல்லவர். கி.பி. 16-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர்.

**இராமர்:** இராமாயணத்தின் கதைத் தலைவர். கோசல நாட்டின் பேரரசர் தசரதரின் மகன். விஷ்ணுவின் ஏழாவது அவதாரம் என்று கருதப் பெற்றுப் பல கோடி இந்துக்களால் பூசிக்கப் பெறுபவர்.

**இராமசாமி, காவல்லி வேங்கட்ட,** *(1765-1840)* முதன் முதலாக ஆங்கிலத்தில் எழுதின இந்திய எழுத்தாளர்களின் குழுவைச் சேர்ந்த சவல்லி சகோதரர்களில் ஒருவர். இராமசாமி கல்கத்தா இலக்கியத் தொல்பொருள் ஆராய்ச்சித் துறையில் தலைமை மொழி பெயர்ப்பாளராகவும் பண்டிதராகவும் பணி யாற்றியவர். **விஸ்வகுணதர்சம்** அல்லது **இம்மைப்பண்புகளின் கண்ணாடி** என்ற நூல் வேங்கடாச்சாரி என்பவரால் எழுதப் பெற்ற வடமொழி நூலின் முதல் மொழி பெயர்ப்பு நூலா கும்; இதுவே இவரது முதல் நூலுமாகும். இது கி.பி. 1825-ல் அச்சிடப் பெற்றது. இவரது அடுத்த நூல் **'தக்கணக் கவிஞர்களின் வாழ்க்கை வரலாறு'** என்ற நூலாகும். இது கி.பி. 1829-ல் வெளியாயிற்று. இந்த இரண்டு நூல் களும் அக்காலத்தில் புகழ் பெற்றிருந்த கல்கத்தாவின் மேலுயர் நீதி மன்ற முதன்மை நீதிபதி சர். எஃப். டபிள்யூ மாக்னைட்டன் என்பாருக்கும் கவர்னர் ஜெனரலாக இருந்த லார்டு வில்லியம் பெண்டிங்கிக்கும், அவர்கள் இசைவுபெற்று அன்புக் காணிக்கையாகப் பெற்றதால், இவர், இவர் காலத்தில் சிறந்த எழுத்தாளர் என்ற புகழுடனும் மதிப்பு டனும் திகழ்ந்திருக்க வேண்டும்.

**இராமாநந்தர்:** எஃப். இ. கீய் என்பார்க் கருத்துப்படி இராமா நந்தர் கி.பி. 1400 முதல் 1470 வரை உள்ள காலப் பகுதியில் வாழ்ந்திருக்க வேண்டும்; இவர் கருத்துப்படியே "ஒரே ஒரு கடவுள்தான் உண்டு; அவரைப் புலன்களால் அறிய முடியாது; அவர்தான் இராமர் என்பவர்; ஆனால் உருவ வழிபாடு பற்றியோ, இந்துக்களின் பல தெய்வக் குழுவைப் பற்றியோ, அல்லது பழைய புராணத் தொகுதி பற்றியோ அவரால் மறுக்கப்பெறவில்லை." இவருடைய ஆளுமையின் ஈர்ப்பால் "இவரது சீடர்களுள் சூத்திரர், தீண்டத் தகாதவர், இஸ்லாமிய நெசவுக்காரர் (கபீர்) பெண்ணொருத்தி ஆகியோரும் இருந்தனர்."

**இராமாயணம்:** இதன் நேர் பொருள் "இராமனின் அலைந்து திரிதல்" என்பது. **இராமாயணம்** இரண்டு இந்து இதிகாசங் களில் ஒன்று; மற்றொன்று **மகாபாரதம்.** இராமனது நாடு கடத்தல் பற்றியும் அடுத்து அரசனாகப் பட்டம் சூட்டிக் கொள்ளுதலைப்பற்றியும் கூறுவதுதான் இதன் கரு அமைப் பாகும் (Theme). வடமொழியில் சிறந்த கவிஞராகிய வால்மீகி என்பவரால் இயற்றப் பெற்றது. நூலின் காலம் இன்னும் வரையறுக்கப் பெறவில்லை; ஆயினும் வின்டர் னிட்ஸ் என்பார் "இராமாயணத்தின் முக்கிய பகுதி

வால்மீகியால் கி.மு. மூன்ரும் நூற்ருண்டில் இயற்றப் பெற்றிருத்தல் வேண்டும்; அதன் பிறகு பிறர் கி.பி. இரண்டாம் நூற்ருண்டு வரையிலும் பாடல்களைச் சேர்த்துக் கொண்டே போயிருத்தல் வேண்டும்'' என்று கூறுவர்.

**இராயர் சீமை:** குன்றுகள் அடங்கிய ஆந்திரத்தின் உட்பகுதி. இதில் சித்தூர், கடப்பை, கர்நூல், அனந்தப்பூர் என்ற நான்கு மாவட்டங்களும் அடங்கும். அடிக்கடி இப்பகுதியில் வறட்சி தோன்றுவதுண்டு.

**இராய்தாஸர்:** சக்கிலி இனத்தைச் சேர்ந்தவராயினும் கி.பி. பதினைந்தாம் நூற்ருண்டில் மிகவும் வணக்கத்திற்குரியவராக வாழ்ந்த கவிஞரும் ஞானியும் ஆவார். சிட்டோடாவின் இளவரசியான ஜாலி என்பவர் இவரது பல சீடர்களில் ஒருவர்.

**இரால்லப்பள்ளி அநந்த கிருஷ்ண சர்மா:** தெலுங்கு, தமிழ், கன்னடம், சமஸ்கிருதம், பாலி மொழிகளில் வல்லுநரான இவர் ஒரு தலைசிறந்த இசை அறிஞராகவும் திகழ்பவர். சமூக சமயக் கொள்கைகளில் இவர் வைதிகப் போக்குடையவராயினும், சகிப்புத்தன்மையற்றவர் அல்லர்; தெளிவாகவும் சுருக்கமாகவும் எழுதுபவர். வேமனரைப் பற்றி ஆந்திரப் பல்கலைக் கழகச் சொற்பொழிவுகளை ஆற்றியவர். பாலி மொழியிலிருந்து **கீதா—சப்தஸ்தி** என்ற நூலைத் தெலுங்கில் மொழி பெயர்த்தவர். நல்ல இலக்கியத் திறனய்வு நூலையும் எழுதியவர். கி.பி. 1893-ல் பிறந்த இவர் மைசூர் மகாராசர் கல்லூரியில் கி.பி. 1912 முதல் 1949 வரையில் தெலுங்கு விரிவுரையாளராகப் பணியாற்றியவர். இப்பொழுது தன் மக்களுடன் பெங்களூரிலும் திருப்பதியிலுமாக வாழ்கின்ருர்.

**இராஜமகேந்திரபுரம்:** ஆங்கிலத்தில் 'இராஜமந்திரி' என வழங்குகிறது. இந்நகர் கோதாவரி ஆற்றின் கரையில் அமைந்துள்ளது. முதலாம் அம்மராஜு வாலோ (கி.பி. 921—945) அல்லது இரண்டாம் அம்மராஜு வாலோ (கி.பி. 945—970) நிறுவப்பெற்ற இந்நகர் கீழைச் சாளுக்கியர்களின் தலைநகராக இருந்தது. பிற்காலத்தில் கொண்டவீட்டைச் சார்ந்த ரெட்டி அரசர்களின் ஒரு கிளையினருக்குத் தலைநகராகவும் திகழ்ந்தது. நன்னயர், வீரேசலிங்கம் ஆகியோரின் வாழ்க்கையுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தமையால் ஆந்திர இலக்கிய வரலாற்றில் இஃது ஒரு சிறந்த இடத்தைப் பெற்றுள்ளது.

**இராஜாஜி** *(கி.பி. 1879–1976): ''சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரி'' என்ற முழுப் பெயரின் சுருக்கம் இது. இந்தியாவின் மூத்த அரசியல் வல்லுநரும் காந்தியடிகளின் நெருங்கிய நண்பருமான இவர் சென்னை மாநிலத்தின் முதல் அமைச்சர், இந்தியக் குடியரசின் உள்துறை அமைச்சர், வங்காளத்தின் ஆளுநர், இந்தியாவின் கவர்னர்–ஜெனரல் ஆகிய பதவிகளில் பல்வேறு காலங்களில் சேவை புரிந்தவர். இவருடைய கூரிய அறிவும், சொல் திறனும், தெளிவான எழுத்தும் இவரை எங்கும் அறியச் செய்திருந்தன. இந்திய தேசிய காங்கிரசிலிருந்து விலகி கி.பி. 1959-ல் சுதந்திரக் கட்சியைத் தோற்றுவித்தார்.*

**இலக்குமணராவ், கே. வி.** *(கி.பி. 1877-1923): சிறந்த ஆராய்ச்சி வல்லுநர்; வரலாற்று அறிஞர். தெலுங்கில் வீட்டுப் பல்கலைக் கழக நூலகத்தைத் தோற்றுவித்தவர்; இலக்கியம், வாழ்க்கை வரலாறு, வரலாறு, அறிவியல் ஆகிய துறைகளில் தரமான நூல்களை எழுதி வெளியிட்டவர். தெலுங்கில் அனைத்தும் அடங்கிய கலைக் களஞ்சியம் வெளியிடத் திட்டமிட்டார்; அதன் மூன்றும் தொகுதிப் பணியில் ஈடுபட்டிருந்த பொழுது இறைவனடி சேர்ந்து விட்டார்.*

**இலக்குமி நரசிம்ஹம், சிலக்கமர்த்தி** *(கி.பி. 1867-1945): வீரேசலிங்கத்தின் சீடரான இவர் ஒரு கவிஞர்; நாடக ஆசிரியர்; வாழ்க்கை வரலாற்று நூலாசிரியர்; கட்டுரைகள் எழுதினவர்; நகைச்சுவை ததும்ப எழுத வல்லவர். தம்முடைய ஆசிரியருக்குச் சமூக சீர்திருத்தப் பணிகளில் பல்வேறு வகைகளில் துணை செய்தவர். கி.பி. 1910-ல் இவர் கிட்டத்தட்டக் குருடரானார்; ஆயினும், தம் வாழ்நாளின் இறுதி வரையிலும் இவரது எழுத்து வெள்ளம் தடையின்றிச் சென்றுகொண்டிருந்தது.*

**இலங்கை:** *இராமரின் துணைவியைத் தூக்கிச் சென்ற இராவணனின் தலைநகர். இந்நகர் இருந்த தீவிற்கும் இலங்கை என்றே பெயர். இராமாயணத்தின் திட்டமான பதிப்பை வெளியிடும் பணியில் ஈடுபட்டிருக்கும் பரோடா கீழைநாட்டு ஆய்வு நிலையத்தினர் இன்றைய சிலோனை (இலங்கையை) இராவணனின் நாட்டுடன் சேர்த்துப் பேசுவதை ஒப்புக் கொள்வதில்லை.*

**இலிங்கம்:** *ஆண் குறியின் வட மொழிப் பெயர். கல்லால் செய்யப் பெற்ற இந்த வடிவங்களைச் சிவபக்தர்கள் வழிபடுகின்றனர்.*

**இனகொண்டா:** (சரியாக உச்சரித்தால் இது வினு கொண்டா என்பது): இந்த நகரமும் இதன் கோட்டையும் ஆந்திர வரலாற்றில் சிறப்பிடம் பெற்றுள்ளன. இஃது இப்பொழுது குண்டூர் மாவட்டத்திலுள்ளன; இதே பெயரில் இஃது ஒரு வட்டத்தின் தலைமையான இடமாகத் திகழ்கின்றது.

**உபநிடதங்கள்:** இருநூறுக்கு மேற்பட்ட இப் பெயர் கொண்ட நூல்கள் தத்துவ உரையாடல்களை நுவல்பவை; பெரியவை யும் சிறியவையுமான இவை சிறப்பினாலும் பெயர்பெற்றவை. இவற்றுள் சில யாப்பு வடிவத்திலும், சில உரை நடை யிலும் காணப் பெறுகின்றன. இவற்றின் காலம் புத்தர் காலத்திற்கு முன்னுள்ள காலம் முதல் இக்காலம் வரையி லும் உள்ள காலம் என்பதாக வரையறுக்கப்பெறுகின்றது. **அல்லா உப நிடதமும் கிறித்து உபநிடதமும்** இன்று உள்ளன. இது போன்று ஒன்றுபடுத்தப்பெற்ற அல்லது வரையறுக்கப் பெற்ற உபநிடதத் தத்துவம் போன்று வேறு ஒரு நூலும் இல்லை என்று சொல்லலாம். டாக்டர் எஸ். இராதாகிருட்டி ணன் கூறுவது: ''உபநிடதங்களின் நோக்கம் தத்துவ உண் மைகளை மட்டிலும் அடைவதில் இல்லை. . . . ஒன்றுக்கொன்று பொருந்தாதவையும் அறிவியல் முறைக்குப் பொருந்தாதவை யும் அவற்றிலுள்ளன.'' ஏ.பீ. கீத் என்பார் மேலும் தெளி வாக உரைப்பார். அவர் கூறுவது: ''(உபநிடதங்களின்) கொள்கைகள் வரலாற்றுக் கவர்ச்சிகளைக் கொண்டவை; தத்துவ நோக்கில் இவை சிறிது கூட எண்ணுவதற்குத் தகுதியுடையன அல்ல.''

**ஊர்வசி:** உம்பருலகத்து ஆடலணங்கு. இவளுடைய கண்கவர் வனப்பு குறித்து எழுந்த கட்டுக்கதைகள் ஒரு சிறந்த நாட கத்தை எழுதுவதற்குக் காளிதாசரையும், ஒரு சிறந்த கவிதையைப் படைப்பதற்கு இரவீந்திரநாத தாகூரையும் ஊக்குவித்தன. இவள் வசிட்டர், அகத்தியர் இவர்களுடைய அன்னையாகக் கருதப்பெறுகின்றாள்.

**எர்ரப்பிரகடா, எடப்பிடி** (கி.பி. 1280–1350): புரோலயா வேமாரெட்டியின் அரண்மனையில் பெரும்புகழுடன் திகழ்ந்த ஒரு பெருங் கவிஞர். இவர் நன்னயர் குறையாக விட்டதும், திக்கனர் தொடாததுமான **மகாபாரதத்தின்** மூன்றாவது பரு வத்தை இவர் மொழி பெயர்த்துத் தலைக்கட்டியவர். இந்த இடைவெளியை நிரப்புவதற்கு மிகத் திறமையுடன் சமாளித்துள்ளார்; இவர் இவ்வாறு தொடங்குகிறார்:

''நன்னயரின் நடையிலும் புலப்படாத முறையில், திக்கனரின் நடைக்குச் செல்லுகின்றது இந்த இலக்கியம்.'' **மகாபார தத்தின்** இந்த மூன்று மொழி பெயர்ப்பாளர்களும் தெலுங்குக் கவிதையின் முக்கவிகள் (கவித்திரயம்) என்று ஒருசேர சிறப் பிக்கப் பெறுகின்றனர். எர்ரப்பிரகடா வேறு நூல்களையும் செய்துள்ளார்; அவற்றுள் மிகச் சிறந்தது **ஹரி வம்சத்தின்** மொழி பெயர்ப்பாகும். இவருடைய தனிப்பட்ட சிறப்புப் பெயர் **'பிரபந்த பரமேஸ்வரர்'** என்பது; ''பிரபந்தங்களின் தலைவர்'' என்பது இதன் பொருளாகும்.

**கடப்பை:** இராயர் சீமையில் உள்ள ஒரு மாவட்டத்தின் பெயர்; இதன் தலைநகரின் பெயரும் இதுவே.

**கண்டிகோட்டா:** இது கடப்பை மாவட்டத்திலுள்ள ஒரு சிறிய நகரம்; நகரைச் சுற்றிப் பழைய கோட்டையொன்றும் உள் ளது. வேமனரின் மூத்த சகோதரர் சில காலம் இந்தக் கோட்டையின் தலைவராக இருந்தார் என்ற செய்தி வழங்கி வருகிறது. இதற்குத் தக்க ஆதாரம் இல்லை.

**கபீர்:** இடைக்கால இந்தியாவிலிருந்த மிகச் சிறந்த மறைமெய்மை யாளர்களுள் ஒருவர். இவர் பிறந்த நாள் பற்றிக் கற்று அறிந்த புலவர்களிடையே இன்னும் முடிந்த முடிபு ஏற்பட வில்லை; இவர் இறந்த நாள் பற்றியும் இதேநிலைதான்; ஆயினும் பெரும்பாலோர் இவர் காலத்தை 15-ம் நூற் றுண்டு என அறுதியிட்டுள்ளனர். இவருடைய பெற்றோர்கள் பற்றியும் கருத்து வேறுபாடு உள்ளது. இவர் பெற்றோர்கள் இஸ்லாம் சமயத்தைச் சார்ந்தவர்கள் என்றும், பிராமணக் கைம்பெண் ஒருத்தியால் கைவிடப் பெற்று இஸ்லாமியப் பெற்றோர்களால் வளர்க்கப் பெற்ற குழந்தையென்றும் இரு வேறு கருத்துகள் நிலவுகின்றன. நெசவுத் தொழிலை மேற் கொண்டிருந்தவர். இராமாநந்தரின் சீடராகிய இவர் சமய வெறியைப் பழித்துக் கூறியவர்; ஒரே கடவுளை வழிபட வேண்டுமென்று பரிந்துரைத்தவர். இக்கடவுள் அல்லாவா கவோ இராமனாகவோ இருக்கலாம் என உரைத்தவர்.

**கர்நாடகம்:** கன்னடமும் கர்நாடகமும் ஒரு பொருட் சொற்கள்; 'ஆந்திரம்' என்ற சொல்லைப் போலவே இவை மக்களையும் குறிக்கும்; நாட்டையும் காட்டும்; மொழியையும் உரைக் கும். ஆந்திரத்திற்குத் தென்மேற்கில் கர்நாடகர் மைசூர் மாநிலத்தைக் கொண்டுள்ளனர். மைசூர் மாநிலம் இப் பொழுது கர்நாடக மாநிலம் என்ற பெயரில் வழங்கி வருகிறது.

**கர்நூல்:** இராயர் சீமையின் மாவட்டத் தலைநகரம்; மாவட்டத்தின் பெயரும் இதுவே. கி.பி. 1953 அக்டோபருக்கும் 1956 அக்டோபருக்கும் இடையிலுள்ள காலத்தில், அதாவது ஆந்திர மாநிலம் அமைக்கப் பெற்ற பின்பும் விசாலாந்திரப் பிரதேசம் உண்டாவதற்கு முன்பும் கர்நூல் மாநிலத்தின் தலைநகராக இருந்து வந்தது.

**காக்கத்தீயப் பேரரசு:** கி.பி. 11-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் பெட்ராஜு என்பவரால் நிறுவப் பெற்றது. இதன் தலைநகர் வாரங்கல். பிரதாபருத்திரன் ஆட்சியில் இவன் டெல்லி சுல்தானாகிய கியாஸ் உத்தீன் துக்ளக்கின் மகன் உலூக் கான் என்பானால் ஒரு போரில் தோற்கடிக்கப் பெற்றான். இத்துடன் இப் பேரரசும் அழிந்தது. காக்கத்தீயப் பேரரசு சிறப்புடன் திகழ்ந்த காலத்தில் இது திரிசிராப்பள்ளி வரையிலும் விரிந்து கிட்டத்தட்ட தென்னிந்தியா முழுவதையும் தன்னாட்சியின் கீழ்க் கொண்டிருந்தது.

**காளிதாசர்:** இந்தியாவின் தலைசிறந்த சமஸ்கிருதக் கவிஞர்; நாடக ஆசிரியர். இவருடைய இலக்கியங்கள் பழைய சமஸ்கிருதக் கவிதை, நாடகங்களின் கொடுமுடிகள் என்று பொதுவாகப் போற்றப் பெறுகின்றன. இவர் பிறப்பும் இறப்பும் இன்னும் தெளிவாக அறுதியிடப் பெறவில்லை. ஆயினும் குப்தர்களின் ஆட்சிக் காலத்தில், கி.பி. 4-ம் நூற்றாண்டின் பிற்பகுதிக்கும் 5-ம் நூற்றாண்டின் முற்பகுதிக்கும் இடைப்பட்ட காலத்தில், இவர் வாழ்ந்திருக்கக் கூடும் எனக் கருதப் பெறுகின்றது. இவருடைய தலைசிறந்த நாடகம் **சாகுந்தலம்.** இவருடைய புகழ் பெற்ற கவிதை **மேகதூதம்** என்பது. வழக்கிலுள்ள இவரது நூல்கள் யாவும் ஆங்கிலம் உட்படப் பல்வேறு மொழிகளில் பெயர்க்கப்பெற்றுள்ளன.

**காந்தியடிகள்:** இவரது முழுப் பெயர் மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி (கி.பி. 1869—1948) என்பது. இக் காலத்திய ஞானி; மகாத்மா. தம்முடைய அகிம்சைப் போராட்ட முறையில் இந்தியா சுதந்திரம் அடையச் செய்தவர். கி.பி. 1948 சனவரி 30-ம் நாள் இந்து வெறியன் ஒருவனால் சுட்டுக் கொல்லப்பெற்றார்.

**கிரியர்சன், சர் ஜார்ஜ் ஆப்ரகாம்** (கி.பி. 1851—1941): பல சிறப்புகளுடன் பொருந்திய கற்று உணர்ந்த அறிஞராகிய இவர் கி.பி. 1873-ல் இந்தியன் சிவில் சர்வீஸ் (ஐ.சி.எஸ்.) அலுவலராகச் சேர்ந்து 1903-ல் ஓய்வு பெற்றவர். ஆங்கிலமும் இந்துஸ்தானியும் உட்படப் பல்வேறு இந்திய மொழி

களில் வல்லுநரான இவர் இந்திய மொழி மதிப்பீட்டு அமைப்பின் (Linguistic Survey of India) தலைவராக நியமனம் பெற்றார்; இப் பொறுப்பில் இவர் பெரும் புகழுடன் சேவை புரிந்தார்.

**கிருஷ்ணன்:** வசுதேவரின் மைந்தன்; யாதவ குலத்தின் தலைவன். மகாபாரதத்தில் இவன் அரசியல்—தத்துவ வல்லுனனாகப் புகழ் பெற்றுச் சிறந்து திகழ்ந்தவன். பகவத் கீதையின் ஆசிரியன். இராமனுக்கு நிகராக இவனும் விஷ்ணுவின் அவதாரமாகக் கருதப் பெற்று இந்துக்களால் வழிபடப் பெறுகிறான். இந்துக்களின் கடவுள்களனைவரிலும் பகட்டான தோற்றமும் மிக்க எழுச்சியும், புனைவியல் திறமும் கொண்டு மிகச் சிறப்பாகத் திகழ்கின்றான். கருநீல வண்ணமுடைய இவன் மஞ்சள் நிற ஆடையையணிந்து, குழலூதி ஆயிரக் கணக்கான இளம் பெண்களின் இதயத்தைக் கவர்ந்தவன்.

**குண்டூர்:** ஆந்திரத்தில் ஒரு மாவட்டத்தின் தலைநகர்; மாவட்டமும் இப் பெயர் கொண்டது.

**குரு:** ஆசிரியர்; அறிவு புகட்டுபவர். சில சந்தர்ப்பங்களில் இச் சொல் தலைவர் என்ற பொருளிலும் வழங்கி வருகின்றது. 'தொங்கல குரு' (கொள்ளைக்காரர்களின் தலைவன்) என்ற தெலுங்குச் சொற்றொடரில் கொள்ளைக்காரர்களின் தலைவன் என்ற பொருளைக் காணலாம்.

**குறள்:** தமிழர்களின் தலைசிறந்த நீதி இலக்கியம். தமிழர்களால் **'மறை'** எனப் போற்றப்படுவது. நீதி மொழிகளடங்கிய இந்நூல் மூன்று பகுதிகளையுடையது. முதற்பகுதியில் அறமும், இரண்டாம் பகுதியில் பொருளும் (அரசியல் பற்றியது) மூன்றாம் பகுதியில் காதலும் நுவலப் பெறுகின்றன. 1330 குறட்பாக்களையுடைய இந்நூலின் ஆசிரியர் திருவள்ளுவர்.

**கொண்டவீடு:** ஒரு நகர், கோட்டை, நிலப்பகுதி இவற்றின் பெயர். அனவோத்த வேமாரெட்டி (கி.பி. 1353—1364) என்ற அரசர், இவருக்குப் பின் வந்தவர்கள் இவர்களின் தலைநகர். இடைக்கால ஆந்திர வரலாற்றில் இது பெரும் பங்கு கொண்டது.

**கோதாவரி:** இந்தியத் துணைக் கண்டத்தில் மிகப் பெரிய ஆறு; 1498 கி.மீ. நீளமுடையது. மேற்குத் தொடர்ச்சி மலையில் உற்பத்தியாகி, கிழக்கு நோக்கிப் பாய்ந்து, வங்கக் கடலில் கலக்கின்றது. இதன் நீளத்தில் கிட்டத்தட்டப் பாதி (720 கி.மீ.) ஆந்திர மாநிலத்தில் பாய்ந்து செல்லுகின்றது.

இதன் கரையில் உள்ள மிக முக்கியமான நகர் இராஜ மகேந்திரபுரம் (இராஜமந்திரி).

**சங்கரர்:** ஈடு எடுப்பற்ற சிந்தனையாளர். எட்டாம் நூற்றுண்டைச் சார்ந்தவராகலாம். **அத்வைத வேதாந்தம்** என்ற தத்துவத்தை விளக்கியவர். இவரால் நிறுவப் பெற்ற சமய மையங் களின் தலைவர்கள் ''சங்கராச்சாரியர்கள்'' என்று வழங்கப் பெறுகின்றனர். இப்பொழுது ஐந்து பெரிய சங்கராச்சாரி யர்களைத் தவிர வேறு சில சிறிய சங்கராச்சாரியர்களும் செயல்பட்டு வருகின்றனர். இவர்களினின்றும் வேறுபடுத்திக் காட்டுவதற்காக முதல் சங்கராச்சாரியர் ''ஆதி சங்கரர்'' என்று குறிப்பிடப் பெறுகின்றார்.

**சதகம்:** தனித்தனியாக முடிவு பெறும் நூறு பாடல்கள்; இவை ஒரே யாப்பில் பாடப் பெறுபவை. **''சதகத்தின்''** சிறப்பியல்பு மகுடம் அல்லது பல்லவி போன்றதைக் கொண்டிருப்ப தாகும்; பாடலின் இறுதிச் சொல் (அல்லது அடி) ஒருவரின் பெயர் அல்லது இதற்கு முன்னருள்ள அடிகளில் பேசப் பெற்ற தெய்வத்தின் பெயர் கொண்டிருக்கும். **மகுடம்,** கையாளப்படும் யாப்பை அறுதியிடுகின்றது; ஆகவே இது பாடலின் அமைப்பிற்கு வடிவம் நல்குகின்றது.''

**சந்தநூல்:** கர்நூலின் பழைய பெயர்.

**சர்க்கார், பினுய்குமார்** (கி.பி. 1887—1949): வங்க மொழியி லும் ஆங்கிலத்திலும் மிகுதியாகவும் சிறப்பாகவும் எழுதிக் குவித்த திறமை மிக்க வித்தகர். ஒரு சிறந்த பொருளியல் அறிஞர் என்றும், சமூக இயல் வல்லுநர் என்றும் உலகப் புகழைப் பெற்றவர். பல மொழிகளில் பெயர்க்கப்பெற்ற இவரது நூல்கள் பல நாடுகளின் கல்விக்குறியனவும் பிற வற்றிற்குரியனவுமான நற்பெயர்களை அவருக்கு நல்கின.

**சர்வக்ஞர்:** இவருடைய உண்மையான பெயர் ''புஷ்ப தத்தர்'' என்பது; ஒரு சூத்திரக் கைம்பெண்ணுக்கும் ஒரு பிராமண னுக்கும் மகனுகப் பிறந்தவர். இவருடைய படிப்பினைகள் கிட்டத்தட்ட வேமனருடையவைபோல் உள்ளன. இ.பி. ரைஸ் என்பார் இவர் கிட்டதட்ட கி.பி. 1600-ல் வாழ்ந்த வராகக் கருதுகின்றார்; ஆனால் ஒருவரும் இவருடைய காலத் தைப்பற்றி வரையறுத்திலர்.

**சிரீசைலம்:** இந்தியாவின் ஒரு சிறந்த யாத்திரீகத் தலம். சிவனை வழிபடுவோர் மிகச் சிறந்த தெய்விகமாக பன்னிரண்டு இலிங் கங்களுள் ஒன்று இங்கு இருப்பதாக நம்புகின்றனர்: மராட் டியப் பேரரசர் சிவாஜி இப் புனிதத் தலத்திற்கு வந்து

போன பல யாத்திரிகர்களுள் ஒருவர். இப்பொழுது நீர்–மின்சாரத் திட்டம் ஒன்று இங்குச் செயற்படுகின்றது.

**சிரீநாதர்** (கி.பி. 1365–1440): அரசர்களின் நண்பரும் அவர்களின் தனிப் பற்றுக்குரியவருமான இவர் ஒரு நாடோடி; ஒரு பெருங் கவிஞர். தெலுங்கிலும் சமஸ்கிருதத்திலும் சரி சமமான புலமையுடையவர். எவரும் திகைக்கும்படியான சொகுசு வாழ்க்கை வாழ்ந்து, வறுமையிலும் நண்பர்களின்றியும் மடிந்தவர்.

**சிரீபதி (பண்டித):** தெலுங்கு எழுத்தாளர்களில் சைவ சமயத்தை பற்றி முதன் முதலாக எழுதியவர். பன்னிரண்டாம் நூற்றுண்டின் முற்பாதியில் **'சிவதீபிகை'** என்ற நூலை எழுதினவர்.

**சிவன்:** ('ஷிவன்' எனவும் உச்சரிப்பதுண்டு): தொடக்கத்தில் இவர் ஆரியரின் கடவுள் அல்லர். 'திரிமூர்த்தி' என்ற கருத்து எழுந்த காலத்திலிருந்து, அதாவது பிரமன் படைப்புக் கடவுளாகவும், விஷ்ணு காக்கும் கடவுளாகவும், சிவன் அழிக்கும் கடவுளாகவும் கருதிய காலம் முதல், சிவன் திரி மூர்த்திகளில் ஒருவராக இடம் பெற்றுர். ஆனுல் சமயப் பற்றுடன் சிவனை வழிபடுவோர் இந்தப் பிரிவினைச் செயல்களையோ, அல்லது பொதுவாகத் தம்முடைய கடவுளுக்கு அப்பால் விஷ்ணுவிற்கு முந்து நிலையைத் தருவதையோ ஒப்புக் கொள்வதில்லை. இவர்கட்குச் சிவனே முழு முதற் கடவுள். திரிமூர்த்திகளின் மூன்று செயல்களையும் இவர் ஒருவரே மேற்கொள்கிருர் என்று கருதுபவர்கள். 'சிவன்' என்ற சொல்லுக்கு 'நற்குறியான' என்பது சரியான பொருள்.

**சிவன்ராத்திரி** (ஷிவன்ராத்திரி எனவும் உச்சரிப்பதுண்டு): மாசி மாதத்தில் (பிப்ரவரி–மார்ச்சு) தேய் பிறையின் பதினுன்காவது இரவு. சிவனை வழிபடும் பக்தர்கள் பகல் முழுவதும் பட்டினி கிடந்து இரவு முழுவதும் விழித்திருப்பர்.

**சூத்திரர்:** இந்துத் திருமறைகளின்படி முதன்முதலாக பிராமணர்கள் பிரமனின் வாயினின்றும், க்ஷத்திரியர்கள் அவருடைய புயங்களினின்றும், வைசியர்கள் அவருடைய வயிற்றினின்றும், சூத்திரர்கள் அவருடைய காலடிகளினின்றும் தோன்றினர். இவர்களுடைய தாழ்வான இடத் தோற்றத்தின் காரணமாக இவர்கள் சாதி அமைப்பில் இயல்பாகவே தாழ்வான நிலையை அடைந்தாக வேண்டும். தீண்டத் தகாதவர்களான இவர்கள் பிரமனுடைய பிள்ளைகள் இலராதலின் இவர்கள் சாதிகளினின்றும் நீக்கப் பெற்றனர்.

**சோமநாதர், பால்குரிக்கி:** தெலுங்கு, கன்னடம், சமஸ்கிருதம் இம் மொழிகளின் வளமான எழுத்தாளரான இவர் வீரசைவ சமயத்தைத் தீவிரமாகப் பரப்பி வந்தவர். **பசவ புராணத்தைத்** தவிர, இவர் எழுதிய வேறு பெரிய நூல்கள் **பண்டித ராத்ய சரித்திரம், அனுபவசாரம்** என்பவையாகும். இவர் பசவரின் சீடர்.

**சைத்தன்யர்** (கி.பி. 1486–1533): வங்காள ஞானியர்களுள் இவர் மிக மிகப் புகழ் பெற்றவர். தம்முடைய வாழ்க்கையாலும், போதனையாலும், வங்காளம், ஒரிஸ்ஸா, அஸ்ஸாம், வேறு பகுதிகள் ஆகிய இடங்களிலுள்ள பல்வேறு கவிஞர்களை மிகச் சிறந்த பக்திப் பாடல்களை எழுதுவதில் ஊக்குவித்தவர். மனைவி தன் கணவனைச் சரணம் அடைவதைப் போலவே இறைவனிடம் முழு நிறைவான சரணம் அடைதல் வேண்டும் என்பது இவர் கூறும் செய்தியின் அடிப்படையான குறிப்பாகும். இந்தியா முழுவதிலும் சைத்தன்ய வழிபாட்டு முறையைத் தழுவியவர்கள் பல கோடி மக்களாவர்.

**சைவர்கள்:** சிவனை வழிபடுவோர் சைவர்கள் என வழங்கப்படுகின்றனர். இவர்களுள் எதிர்ப்பார்வமுள்ள பகுதியினர் வீர சைவர்களாவர்.

**ஞானதேவர்** (கி.பி. 1275-1296): மராட்டிய ஞானியருள் தலை சிறந்தவர். இவர் பல்வேறு நூல்களின் ஆசிரியர். பகவத் கீதையின் உரையான **ஞானேஸ்வரி** என்ற நூல் இவற்றுள் மிகச் சிறந்ததாகும்.

**டுபாய்ஸ், ஜே. பி:** கிட்டத்தட்ட கி.பி. 1770-ல் பிறந்த இவர் ஒரு ஃபிரெஞ்சு மதகுரு. தென்னிந்தியாவில் கிட்டத்தட்ட இவர் முப்பத்தொரு ஆண்டுகள் கிறித்தவ சமயப் பரப்பாளராகக் காலங் கழித்தார். உள்ளூருக் கொத்த ஆடையணிந்து உள் நாட்டுப் பழக்க வழக்கங்களை மேற்கொண்டு சாதாரண மக்களிடையே அவர்களுள் ஒருவராக வாழ்ந்தார். இவருடைய **"இந்துக்களின் தோரணைகளும், பழக்கங்களும், ஆசாரங்களும்"** என்ற நூல் கி.பி. 1792-க்கும் 1823க்கும் இடையில் வாழ்ந்த இந்துச் சமூகத்தினரைப் பற்றிய நம்பகமான செய்தியைத் தருகின்றது.

**தண்டி:** அணி இலக்கண ஆசிரியர். இவருடைய காலம் இன்னும் உயிருள்ள வாதத்திலேயே உள்ளது. இவர் கி.பி. ஏழாம் நூற்றுண்டின் இறுதியில் வாழ்ந்திருத்தல் கூடும்.

**தர்மசாத்திரங்கள்:** இந்துக்கள் வாழ்க்கையின் ஒவ்வொரு கூறிலும் அவர்களை நெறிப் படுத்துவதற்காக அமைந்த சட்டத்

தொகுதிகள். ஒவ்வொன்றும் ஒவ்வொரு முனிவரால் எழுதப் பெற்றதாகக் கருதப்பெறுகின்றது. சாதியின் படிமரபினை யும் படிமரபின் மேல் எல்லையில் இருப்பவர்களின் உரிமை களையும் காப்பதையே அச்சட்டத் தொகுதி மிகவும் முக்கிய மாக வற்புறுத்துகின்றது. கிட்டத்தட்ட ஐம்பது சட்டங்களில் மனு, யக்ஞவாக்கியர், பராசரர், கௌதமர், ஆபஸ்தம்பர் ஆகியோர் எழுதிய சில சட்டங்கள் பெரியவையாகும்.

**தமிழ்நாடு:** ஆந்திரத்திற்கு நேர்த் தெற்கிலுள்ள தமிழ் பேசும் மக்கள் வாழும் பகுதி. இது கன்னியாகுமரி வரையிலும் நீண்டுள்ளது. சென்னை மாநிலம் என்ற பழைய பெயர் தி.மு.க. ஆட்சிக் காலத்தில் தமிழ்நாடு என்று மாற்றப் பெற்றது. தெற்கத்திய மாநிலங்களில் மிகவும் முன்னேற்ற மடைந்த மாநிலம். ஆந்திரத்தை விடச் சிறிதான இந்த மாநிலத்தின் மக்கள் தொகை 336,86,953 (1961-மக்கள் தொகைக் கணக்கீட்டின்படி).

**தாகூர், இரவீந்தரநாத** (கி.பி. 1861–1941): காளிதாசர், பவ பூதி இவர்கட்குப் பின்னர் இந்தியாவில் தோன்றிய மிகப் பெருங்கவிஞர். 1913-ல் இலக்கியத்திற்கு நோபெல் பரிசு பெற்றவர்.

**தாது** (கி.பி. 1554–1603): ஒரு சிறந்த கவிஞர்; திருத்தொண் டர். தம்பெயரில் ஒரு வழிபாட்டு முறையை நிறுவியவர்; ஆமதாபாத் இவர் பிறப்பிடம்; ஆனால் தம் வாழ்நாளின் பெரும் பகுதியை இராஜஸ்தான் மாநிலத்தில் கழித்தவர்.

**திக்கனர்:** கி.பி. பதின்மூன்றும் நூற்றுண்டில் வாழ்ந்த கவிஞர்; அரசியல் வல்லுநர். தெலுங்குக் கவிஞர்களுள் மிகப் பெரிய கவிஞர்; இவர் "கவிப் பிரமன்" (கவிஞர்களுள் முதன்மை யானவர்). நான்காவது பர்வம் தொடங்கி எஞ்சிய மகா பாரதம் முழுவதையும் தெலுங்கில் மொழி பெயர்த்தவர். தத்துவஞானியாக இல்லாத ஓர் அரசியல் வல்லுநராக இருந்தபடியால் அந்தப் பெருங்காப்பியத்தில் பகவத் கீதைப் பகுதியை மொழி பெயர்க்காது விட்டார்; அரசியல் சூழ்ச்சி யைப்பற்றியும் போர் முறைபற்றியும் அக் காவியத்தில் நுவலும் பகுதிகளைத் தெலுங்கில் மொழி பெயர்த்துச் சிறப் பெய்தியவர். தம்முடைய அரசப் புரவலராகிய மனுமசித்தி யின் அரசு அண்மை நாட்டு அரசரால் கைப்பற்றப் பெற்ற பொழுது, வாரங்கல் அரசர் கணபதி தேவரின் துணையை நாடி, சேனையைக் கொணர்ந்து கைப்பற்றியவரைத் துரத்தி அடித்தவர்.

**திருவள்ளுவர்:** சமணராயினும் அல்லராயினும் குறளாசிரியர் உறுதியாகத் தாழ்ந்த வகுப்பினரைச் சார்ந்தவரே; உண்மை யில் இவருக்கு வழங்கும் பெயர் (இது அவருடைய உண்மை யான பெயரன்று) ''வள்ளுவர் வகுப்பைச் சார்ந்த ஒரு திருத்தொண்டர்'' என்று பொருள்படுகின்றது; வள்ளுவர்கள் உயர் சாதி மக்களன்று. இவருடைய காலமும் இன்னும் சரியாக அறுதியிடப் பெறவில்லை; பல்வேறு ஆய்வாளர்கள் கி.மு. முதல் நூற்றாண்டு முதல் கி.பி. மூன்றாம் நூற்றாண்டு வரை உள்ள காலப் பகுதிகளை இவர் வாழ்ந்த காலமாகக் கருதுகின்றனர்.

**துக்காராம்** (கி.பி. 1598–1649): மராட்டிய நாட்டின் கவிஞர்; திருத் தொண்டர். இவர் ஒரு சிறு வணிகர்; ஆயினும் இவர் மராட்டிய மன்னர் சிவாஜி அனுப்பிய நன்கொடைகளை பெற்றுக் கொள்ள மறுத்து விட்டார்; இவர் வளமான எழுத்தாளர்; 4,600 பாசுரங்களை இயற்றியுள்ளார்.

**தெலிங்காணு:** கிட்டத்தட்ட பத்தொன்பதாவது நூற்றாண்டு வரை ஐரோப்பியர்கள் தெலுங்கு நிலப் பகுதி (ஆந்திரம்) முழு வதையும் ''தெலிங்காணு'' என வழங்கி வந்தனர். இப் பொழுது இச் சொல் சிறிது மாற்றப்பட்ட நிலையில் (தெலங் காணு) ஒன்பது தெலுங்கு மாவட்டங்கள் அடங்கிய பகுதி யைக் குறிக்கின்றது. இந்த ஒன்பது தெலுங்கு மாவட்டங்-களும் அடங்கிய பழைய ஐதராபாத் மாநிலத்துடன் அடங்கி இருந்தன. இவை இப்பொழுது ஆந்திரத்துடன் இணைக்கப்பெற்று விட்டன.

**தெலுங்கு:** 'ஆந்திரத்'தைக் குறிக்கும் இதே பொருளுடைய மற்றொரு சொல்; 'ஆந்திரம்' என்னும் சொல்லைப் போலவே, இதுவும் மக்களையும் குறிக்கும்; நிலப் பகுதியையும் குறிக் கும். வரலாற்றாசிரியர்கள் இன்னும் தெலுங்கர்களும் ஆந்திரர்களும் முதன் முதலாக ஒரே வகுப்பினரா அல்லது இரண்டு வெவ்வேறு வகுப்பு மக்களா என்பதைத் தீர்மானிக்க முடியாத நிலையிலுள்ளனர்.

**தேவதாசி:** இச் சொற்றொடரின் நேர்ப்பொருள் ஒரு பெண் அடிமை அல்லது கடவுளர்களின் வேலையாள் என்பது. இவ ளது கடமை திருக்கோயிலில் பாடுவதும் ஆடுவதுமாகும். இச் செயலுக்கென்றே இவள் உரிமையாக்கப் பெற்றவள். இவளுடைய வாழ்க்கைத் தேவைகளுக்காக வரியற்ற நிலம் விடப் பெற்றிருந்தது; ஆனால் பொதுவாக எல்லோருமறிந்த விபசாரம் இவளுடைய வருமானத்தின் குறையை நிரப்பும்

ஒரு வழியாக அமைந்தது. சில தேவதாசிகள் கலைத்திறம் நிறைந்த ஆடலணங்குகளாகவும் பாடகர்களாகவும் திகழ்ந் தனர். இப்போது இள மங்கையரைக் கடவுளருக்கு உரிமை யாக்கும் பழைய வழக்கத்தைச் சட்டம் மூலம் விலக்கப் பெற்றுள்ளது.

**தோடி ராகம்:** இசையின் ஒரு முறை.

**நன்னயர்:** பதினோராம் நூற்றாண்டில் இராஜமகேந்திரபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆந்திரத்தின் கரையோரப் பகுதியை ஆட்சி புரிந்த கீழைச் சாளுக்கிய அரசனான இராசராசநரேந் திரனின் அரசவைக் கவிஞர். தன் அரசப் புரவலரின் ஆணைக் கிணங்க, நன்னயர் மகாபாரதத்தின் மொழி பெயர்ப்பை மேற் கொண்டார்; ஆனால் அதனை முடிக்கும் வரை இவர் உயிர் வாழவில்லை. முதல் இரண்டு பருவங்களையும் மூன்றா வது பருவத்தின் ஒரு பகுதியையும் மட்டிலுமே மொழி பெயர்த்தார். ஒரு தெலுங்கு இலக்கணம் உட்பட ஏனைய ஐந்து நூல்கள் இவர்பெயர்மேல் ஏற்றப் பெற்றுள்ளன. ஆனால் இக் கருத்து இன்னும் வாதத்திற்குரியதாகவே உள் ளது. அங்ஙனமே, இவர்தான் தெலுங்கு மொழியின் முதல் கவிஞராவர் என்று கொண்டாடப் பெறும் உரிமையும் வாதத்திற்குரியதாக உள்ளது. என்ற போதிலும், இவரது நூலே வழக்கிலுள்ள மிகப் பழைமையான தெலுங்கு இலக்கியமாக இருப்பதால், இவர் 'வகனுசாசனர்' (மொழியின் சட்டத்தை வழங்கியவர்) என்று போற்றப் பெறுகின்றார்.

**நாகார்ச்சுனர்:** புத்த சமய தத்துவ அறிஞர். பேராசிரியர் ஸ்டெச்சர்பாஸ்கியின் (இரஷ்ய நாட்டு அறிவியல் கழகத் தைச் சார்ந்தவர்) கருத்துப்படி "மானிட இனத்தின் தத்துவ அறிஞர்களுள் மிகமிகச் சிறந்தவர்." கி.பி. முதல் நூற் றாண்டினைச் சார்ந்த இவர் மத்யமிகா பிரிவு புத்த தத்து வத்தை வளர்த்தார். இப்பொழுது ஆந்திரத்தில் நாகார்ச்சு மலை என வழங்கப்பெறும் சிரீபர்வதத்தில் தம்முடைய இறுதி நாட்களைக் கழித்தார்.

**நாமதேவர்** (கி.பி. 1270—1350): தையல் தொழிலை மேற் கொண்டு வாழ்ந்த இவர் ஒரு மராட்டியக் கவிஞர்; திருத்தொண்டர்; பஞ்சாப்பில் இவர் பத்து ஆண்டுகளைக் கழித்தார். இவருடைய பாடல்களில் சில **'கிரந்தா சாகிப்'** என வழங்கப் பெறும் சீக்கர் மறையில் இடம் பெற்றுள்ளன.

**நானக்** (கி.பி. 1469–1536): சீக்கிய சமயத்தை நிறுவியவர்; ஆகவே, இவர் சீக்கர்களின் குருக்களுள் முதல் குரு ஆகின்றார். இப்பொழுது மேற்குப் பாகிஸ்தானிலுள்ள தால் வண்டி என்ற சிற்றூரில் பிறந்த இவர் பல்வேறு இடங்களில் சுற்றித் திரிந்து உலகிற்குப் பொதுவான அன்பு, சகோதரத்துவம் ஆகிய நற்செய்தியைப் போதித்தார்.

**நெல்லூர்:** இதன் பழம் பெயர் விக்கிரம சிங்கபுரம் என்பது. இப்பொழுது இப் பெயர் கொண்ட மாவட்டத்தின் தலை நகரமாகும். குண்டூரில் பிறந்த போதிலும் திக்கனர் தம்முடைய வாழ்நாளின் சிறந்த பகுதியை இந்த நகரில்தான் கழித்தார்.

**பகவத் கீதை:** கிறித்து சமயத்தில் 'புதிய ஏற்பாடு' பெறும் பெரிய இடத்தை இந்து சமயத்தில் கீதை பெறுகின்றது. மகாபாரதத்தில் கிருஷ்ணன் அர்ச்சுனன் என்ற இரண்டு கதை மாந்தர்களிடையே நடைபெற்ற உரையாடல் வடிவத்தில் இது காணப் பேறுகின்றது. இது 650 பாடல்களைக் கொண்டது. சார்லஸ் வில்க்கின்ஸ் (1784) என்பார் இதனை முதன் முதலாக ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார்; **தேவகீதம்** (The Song of the Celestial) என்ற பெயரில் காணப்பெறும் சர் எட்வின் ஆல்னல்டு என்பாரின் மொழி பெயர்ப்பே இன்று புகழ் பெற்றுத் திகழ்கின்றது. நூற்றுக்கணக்கான உரைகளில் சங்கரரின் உரையே காலத்தால் முற்பட்டது. அண்மைக் காலத்தில் எழுதப்பெற்று எல்லோருடைய கவனத்தையும் ஈர்த்துப் புகழ்பெயர் பெற்றவை திலகர், அரவிந்தர், காந்தியடிகள் இவர்களுடைய உரைகளே. உரையாசிரியர்களைப் போலவே உரைகளும் அடிப்படையில் வேறுபட்டவையாகக் காணப் பெறுகின்றன. சிலர் "பகவத் கீதையின் தத்துவம்" என்று குறிப்பிட்ட போதிலும் டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன் "இதனை ஒரு தத்துவ நூல் என்று சொல்வதை விட பழம் பெரும் சமய நூல் என்று சொல்வதே பொருத்தமானது" என்கின்றார்.

**பசவபுராணம்:** கி.பி. 12-ம் நூற்றாண்டில் பால்குரிக்கி சோம நாதர் என்பாரால் பாவடிவில் இயற்றப் பெற்ற பசவரின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுவது.

**பசவர்:** வீர சைவம் என்ற சமத்தை நிறுவியவர். மனித இனத்தைச் சாதி, வகுப்பு என்று மனிதர்களால் செயற்கையாக உண்டாக்கப் பெற்ற எல்லா வேலிகளையும் எதிர்த்து நிறுவப் பெற்ற சமய இயக்கமாகும் இது. கி.பி. பன்னிரண்டாம்

நூற்றுண்டின் முற்பகுதியில் மைசூர் மாநிலத்தில் (இப்போது கர்நாடக மாநிலம்) பாகெவாடி என்ற சிற்றூரில் பிறந்த பசவர் இந்தியாவின் மிகச் சிறந்த சமய சமூக சீர்திருத்த வாதிகளில் ஒருவராகத் திகழ்ந்தார்.

**பரதர்:** நாட்டியம், நாடகம், நாடக அரங்கு இவற்றின் கலைகளைக் கண்டறிந்ததாகப் புராணத்தில் குறிப்பிடப் பெறும் ஒரு முனிவர்.

**பவபூதி:** காளிதாசருக்குப் பின்னர் சமஸ்கிருதத்தில் ஒரு சிறந்த கவிஞராகவும் நாடக ஆசிரியராகவும் திகழ்ந்தவர். **உத்தரராம சரிதம், மகாவீர சரிதம், மாலதி மாதவம்** என்ற இவருடைய மூன்று நாடகங்களில் **உத்தரராம சரிதமே** மிகச் சிறந்த தாகும். இவர் கி.பி. எட்டாம் நூற்றுண்டில் வாழ்ந்தவர். விதர்ப்ப நாட்டில் (மேரார்) பிறந்த இவர் அரச ஆதரவை நாடி உச்சயினி அல்லது காஷ்மீரத்தில் குடியேறினர்.

**பாசண்டன்:** திருமறைகளின் ஆதிக்கத்தை மறுத்த ஒரு நாத்திகர்!

**பிரபந்தம்:** நகரங்கள், ஆறுகள், மலைகள், பருவங்கள், காடுகள், ஏரிகள் முதலியவற்றின் வருணனைகளைக் கொண்ட கவிதை யாலான நூல். இஃது அரசர்கள், அரசியர்கள், இளவரசர் கள், இளவரசியர்கள் இவர்களின் பால்வாழ்க்கையைப் பற்றி மிக நுணுக்கமாகக் கூறுவது. வேட்டையைப் பற்றியும் போர் பற்றியும் குறிப்பிடுவது. இத்தகைய பல நிபந்தனைகளின் அடிப்படையில் உண்மையிலேயே சிறந்த ஒரு கவிஞரைத் தவிர பிறரால் செய்யப்பெற்ற பிரபந்தம் செயற்கையாகவும் எரிச்சலை ஊட்டுவதாகவும் அமையும்.

**பிரபாகர சாஸ்திரி, வேட்டூரி** (கி.பி. 1888–1950): இவர் ஒரு சிறந்த ஆய்வாளர்; திறனாய்வாளர். ஓலைச் சுவடிகளினின்றும் பிறவற்றிலிருந்தும் பல நூல்களைச் சேகரித்து, பதிப்பித்து, வெளியிட்டவர். பழைய நூல்கட்கு இவர் எழுதிய முன் னுரைகள் சிறந்த மதிப்புடையவை.

**பிரமன்:** இந்து திரிமூர்த்திகளில் படைப்புக் கடவுள். செந்நிறத் தோற்றத்தையும் நான்கு தலைகளையும் கொண்டவர். ஏனைய இருவரைப் போலன்றி இவர் மிகக் குறைவான வழிபாட்டினைப் பெறுகின்றார்.

**பிரம்மசூத்திரங்கள்:** தத்துவ முதுமொழிகள் அடங்கிய நூல். இதனை வியாசர் எழுதியதாகச் சொன்னபோதிலும் டாக்டர் எஸ். என். தாஸ்குப்தர் கருத்துப்படி இது மிகப் பழமை யான நூலன்று. ''இவை (சூத்திரங்கள்) வேறு இந்திய

தத்துவ முறைகளனைத்தையும் கண்டனம் செய்வதாக அமைந் திருப்பதால், இவை பழங்காலத்தில் எழுதப் பட்டிருக்க முடியாது'' என்கின்றார் அவர்; கி.மு. இரண்டாம் நூற் றாண்டின் ஒரு காலப் பகுதியில் இவை இயற்றப் பெற்றிருத் தல் கூடும் என்று நம்புகின்றார். ஜேகப்பி என்பார் பிரம்ம சூத்திரங்கள் இன்னும் பிற்பட்ட நூல் எனக் கருதுகின்றார்: இவர் கி.பி. 200க்கும் 450க்கும் இடைப்பட்ட காலத்த தாகும் என அதனை அறுதியிடுகின்றார். அதன் உரைகளில் சங்கரர், இராமாநுசர், மத்துவர் ஆகியோர் இயற்றிய உரைகளே மிகவும் புகழ் பெற்றவை; காலத்தால் மிகப் பிற்பட்டது டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணனுடையதாகும். உரைகட்கும் சில உரைகள் உள்ளன.

**பிராமணன்:** உயர்சாதி வகுப்பினன்; இவனைப் பூசுரன், அதாவது பூமியில் தேவன் என்று வழங்குவதும் உண்டு. இவனைத் ''துவிஜன்'' (இரு பிறப்பாளன்) என்றும் கூறுவர் (பூணூல்- காண்க)

**பிரௌன், சார்லஸ், ஃபிலிப்:** (கி.பி. 1798—1884): இந்தியன் சிவில் சர்வீஸ் (ஐ.சி.எஸ்) அலுவலர். இவர் தெலுங்கர்களிடமும், தெலுங்கு மொழி, தெலுங்கு இலக்கியத்தின் மீதும் அதிக அன்பு காட்டினார்; அவற்றிற்காக சிறந்த சேவையும் புரிந் தார். தெலுங்கு இலக்கணம், தெலுங்கு—ஆங்கிலம், ஆங்கி லம்—தெலுங்கு அகராதிகள் இவற்றை ஆயத்தம் செய்து வெளியிட்டதுடன், நூற்றுக் கணக்கான ஓலைச் சுவடிப் படி களையும் சேகரித்தார். முதன் முதலாகப் பழங்கால நூல் களைச் சேகரித்து, ஒப்பு நோக்கிப் பதிப்பித்து, அச்சிட உள் நாட்டுப் புலவர்கட்கு உதவியும் ஊக்கமும் தந்தார். இவரது இடைவிடாத உழைப்பால் வேமனரின் இலக்கியப் புகழுக் கும் அடிப்படைப் பணிகளைப் புரிந்தார்.

**பீமன்:** (பீமசேனன் எனவும் வழங்கப் பெறுவான்): மகாபாரதத் தின் காவியத் தலைவர்களாகிய பாண்டவ இளவரசர்களில் இரண்டாமவன். பேருருவமும், பேராற்றலும், இராக்கதப் பசியும் கொண்ட இவனை இந்திய ஹெர்க்குலீஸ் எனக் கூறலாம்.

**புராணங்கள்:** இந்துக்களின் பழைய வரலாறுகளும், கட்டுக்கதை களும் அடங்கிய தொகுதிகள். வழி வழி வரும் மரபுப்படி பதினெட்டுப் பெரிய புராணங்களும் பதினெட்டு சிறிய புராணங்களும் உள்ளன; ஆனல் இரண்டாவதாகக் குறிப்பிட்ட தொகுதிகள் பெரியனவாக இருப்பதாகக்

கண்டறியப் பெற்றுள்ளது. எல்லோரும் அறிந்த இந்து சமயம் பேரளவில் புராணங்களின் அடிப்படையில் அமைந் துள்ளது. தம்முடைய மொழிப் பெயர்ப்பாகிய விஷ்ணு புராணத்திற்கு எச். வில்சன் எழுதிய நூல்முகம் புராணங் களின் சிறிய நல்ல ஆய்வாகத் திகழ்கின்றது.

**பூணூல்:** *(''யஞ்ஞோபவீதம்''—சமஸ்கிருதம்):* இந்துக்களின் நம் பிக்கையின்படி ஒரு பிராமணன் ஒரு பருத்தி நூலை அணியும் பொழுது இரண்டாவது பிறப்பெடுக்கின்றான். இந்தச் சடங்கு அவனுக்கு ''இரு—பிறப்பாளன்'' என்ற தகுதியை உரிமையாக அளிக்கின்றது.

**பூர்வகவி துதி:** பழங்காலக் கவிஞர்களைப் போற்றுவதென்பது இதன் பொருள். மரபு வழியாக வரும் எல்லாக் கவிதை நூல்களிலும் இஃது இன்றியமையாததாக இருக்க வேண்டி யது. இது சர்வ சாதாரணமாக இருப்பினும், ஒரு சிறந்த செயலை நிறை வேற்றுகிறது; நீண்ட வரலாற்றைக் கொண்டிருந்த போதிலும், சிறிதும் வரலாற்று உணர்வைக் காட்டாத ஒரு நாட்டிற்குச் சிறிதளவு வரலாற்றுச் செய்தி களைத் தந்து கொண்டுள்ளது.

**போப், டாக்டர் ஜி. யு:** தமிழில் ஆழ்ந்த புலமையடைந்த கிறித் தவ சமயத்தைப் பரப்பும் ஓர் அறிஞர். கி.பி. 1886-ல் இலண்டன் மாநகரிலிருந்து குறளின் மொழி பெயர்ப்பை வெளியிட்டார். அதன் பின்னர், மற்றொரு சிறந்த நூலாகிய திருவாசகத்தை மொழி பெயர்த்தார்.

**போத்தனர்:** *(கி.பி. 1400—1475):* மகா பாகவதத்தைத் தெலுங் கில் மொழி பெயர்த்த ஒரு பெரிய தெலுங்குக் கவிஞர். பெரும்பாலும் தாமாகவே படித்துணர்ந்த எளிய மனிதர் இவர்; அரசின் ஆதரவைப் புறக்கணித்தவர். தம்முடைய இலக்கியத்தைத் தமது வழிபடு கடவுளுக்குக் காணிக்கை யாக்கினர். உண்மையும் இனிமையும் இவருடைய கவிதை யின் உயர் சிறப்பியல்புகளாகும்.

**போஜன்:** பல இந்து அரசர்கள் இப்பெயரைத் தாங்கியவர்களாகத் திகழ்ந்தனர். பதினோராம் நூற்றாண்டில் வாழ்ந்த தாரா வைச் சேர்ந்த இவர்களுள் ஒருவர் **சிருங்காரப் பிரகாசம்** என்ற அணி இலக்கணத்தின் ஆசிரியர். இதே துறையில் இன்னொரு நூலும் இவர் எழுதியதாகச் சொல்லப் பெறு கின்றது. **(சரஸ்வதி-கந்தப்புராணம்).**

**மகாத்மா:** இதன் சரியான பொருள், பெரிய ஆன்மா என்பது. எல்லோரும் அறியக் கூடிய ஆன்மத்திறம் உள்ளவர் மிக்க

மரியாதையுடன் மகாத்மா என்று விளிக்கப் பெறுகின்றார். இக் காலத்தில் காந்தியடிகள் ஒரு மகாத்மாவாக இருந்தார்.

**மகாபாரதம்:** இராமாயணத்தைப் போலவே, மகாபாரதமும் இந்தியாவின் மிகச் சிறந்த சமஸ்கிருதப் பெருங் காப்பிய மாகும். இன்றைய வடிவில் இலியத்தும் ஒடிஸ்ஸியும் சேர்ந்த அளவைவிட எண்மடங்கு பெரியது. மரபுப்படி இதன் ஆசிரி யர் மிகப் பழைய முனிவராகிய வியாசர் என்பவர். இந் நூலின் காலம் தெரியவில்லை; ஆனால் சில புலவர்கள் ''இதன் தொகுப்பு கி.மு. நான்காம் நூற்றாண்டிற்கும் கி.பி. நான் காம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தில் படிப்படி யாக இன்றைய வடிவத்தை அடைந்திருக்க வேண்டும்'' என்ற முடிவுக்கு வந்துள்ளனர் (எம். வின்டர்னிட்ஸ்).

**மகுடம்:** ஒரு கிரீடம். தலைப்பு அல்லது பல்லவி எனவும் பொருள் படும்.

**மசூலிப்பட்டணம்:** ஆந்திரத்தில் கிருஷ்ணா மாவட்டத்தின் தலை நகர். இஃது ஒரு கடற்கரை நகரம். பெரிய துறைமுகமும் இங்கு உண்டு. 17, 18-ம் நூற்றாண்டுகளில் போர்த்துகீசியர் கள், டச்சுக்காரர்கள், ஃபிரெஞ்சுக்காரர்கள், ஆங்கிலேயர்கள் இவர்களிடையே நேரிட்ட வாணிக, அரசியல் ஆதிக்கத்தின் காரணமாக அடிக்கடி மோதல்கள் ஏற்பட்டன. மசூலிப் பட்டினம் என்பது ''மச்சிலிப் பட்டினம்'' (மீன் பட்டினம்) என்பதன் திரிந்த வடிவம். பண்டைக் காலத்து கிரேக்கப் புவியியல் வல்லுநர்கள் இதனை ''மசலியா'' அல்லது ''மைசோலியா'' என்று குறிப்பிட்டுள்ளனர்.

**மல்லி:** பூத்த மல்லிகை மலர். இதன் கொடிக்கும் இப்பெயர் வழங்குகின்றது.

**மல்லிகார்ச்சுனர் (பண்டிதர்):** காக்கதீயப் பேரரசர் (கி.பி. 1110-1158): இரண்டாம் புரோலாவின் காலத்தவர். இவர் சிறந்த புலவர்; வாதமிடுவதில் வல்லவர். தம்முடைய வாதமிடும் திறமையினால் தம் காலத்துப் புத்தசமயத் தினரை பொது மேடையில் வாதங்களில் தோற்றோடச் செய்தார். இவருடைய **சிவ தத்துவசாரம்** என்ற நூல் சைவ தத்துவத்தை விளக்கும் ஒரு நல்ல ஆய்வு நூல்; இலக்கிய நயமும் செறிந்தது.

**மன்மதன்:** (காமதேவன் எனவும் வழங்கப்படுவான்): காதல் கடவுள். இவன் என்றும் இளைஞனாகவும், அழகுடையவனாக வும் இருப்பவன்; ஆயினும் இவன் உருவிலியாகக் கருதப்

பெறுபவன்; கிளி இவனது ஊர்தி. கரும்பு வில்லைக் கொண்டு மலர்களாலான ஐந்து கணைகளை விடுபவன்.

**மால :** ஆந்திரத்தில் தீண்டத் தகாத வகுப்பினரின் இரு பெரிய தொகுதிகளில் ஒன்று (பறையர் வகுப்பு). இரண்டாவது தொகுதி மாதிகா (சக்கிலியர் வகுப்பு).

**முக்கர்ஜி, துர்ஜாத்தி பிரசாத்:** *(கி.பி. 1894-1961):* உலகப் புகழ் பெற்ற ஒரு சிறந்த சமூக இயல் வல்லுநர். இலக்குமண புரி (Lucknow) பல்கலைக் கழகத்துடன் நெருங்கிய தொடர் புடையவர்; கூரிய அறிவும், தாமாகவே சிந்திக்கும் ஆற்ற லும், அரிய உணர்வாற்றலும் கொண்டவர். வங்க மொழி யிலும் ஆங்கில மொழியிலும் கைதேர்ந்த எழுத்தாளர்.

**மூகசிந்தப்பள்ளி:** வேமரின் பிறப்பிடமாகக் கருதப்பெறும் ஒரு சிற்றூர். ஆனால், நெல்லூர் மாவட்டத்தில் இப் பெயர் கொண்ட இரண்டு ஊர்களும், குண்டூர், கடப்பை, சித்தூர் மாவட்டங்களில் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு ஊரும் உள் ளன.

**யமன்:** நரகத்தின் தலைவன். பச்சை வண்ணத்தவன். சிவந்த ஆடையை அணிந்தவன். கருநிறமுள்ள எருமைக் கடாவை ஊர்தியாகக் கொண்டவன்.

**ரெட்டி, டாக்டர் சி. ஆர்.:** *(கி.பி. 1880—1951):* ஒரு சிறந்த கல்வி நிபுணர். சில சமயம் அரசியலிலும் பங்கு கொள்வ துண்டு. ஆந்திரப் பல்கலைக் கழகத்தில் பல்லாண்டுகள் துணை வேந்தராகப் பணியாற்றியவர். ஒரு குறுகிய காலத்தில் மைசூர் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராகவும் சேவை புரிந்தவர். அவ்வப்போது தோன்றும் நகைச்சுவையும் திறமையாக பதிலிறுக்கக் கூடிய ஆற்றலும் இவரிடம் இயல் பாக இருந்தபடியால் இவர் ஒரு சிறந்த பேச்சாளராகத் திகழ்வதற்குக் காரணமாக இருந்தன. இவர் ஒரு புகழ் பெற்ற திறனாய்வாளரும் கூட.

**லால்தாசர்:** கபீரின் போதனைகளால் தாக்கம் பெற்றவர். ''லால் தாஸர்கள்'' என்ற ஒரு பகுதியினரை உண்டாக்கியவர். ஆல்வர் என்பது இவரது பிறப்பிடம். இவருடைய பெற் றோர்கள் மேவாஸ் என்ற ஆதிக்குடியைச் சேர்ந்தவர்கள். இவர் பிறந்த நாள் அறியக் கூடவில்லை; கி.பி. 1648-ல் காலம் சென்றார்.

**வங்கூரி சுப்பாராவ்:** *(கி.பி. 1886—1923):* சிறிய உற்பத்தியாள ராகவும் வாணிகராகவும் வாழ்க்கையைத் தொடங்கியவர்.

பின்னர் இலக்கிய ஆராய்ச்சியில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டவர். இவர் வெளியிட்ட நூல்களில் வேமனரின் வாழ்க்கை வரலாறு, சதகக் கவிஞர்களைப் பற்றி ஓர் ஆய்வு நூல், தெலுங்கு இலக்கிய வரலாறு என்ற நூல்களும் அடங்கும்.

**வசிட்டர்:** **வேதங்களிலும் புராணங்களிலும்** மிக அதிகமாகக் குறிப்பிடப் பெறும் ஒரு பழங்கால முனிவர். **இருக்குவேதத்தில்** பல பாடல்கள் இவர் பெயரில் உள்ளன. தர்மசாத்திரம் ஒன்று இவர் இயற்றியதாகக் கூறப் பெறுகின்றது. இவர் ஊர்வசியின் மகன். வேதங்களில் வரும் கட்டுக்கதையின்படி மித்திரனும் வருணனும் ஒரு வேள்வி நடந்தபோது ஊர்வசியைக் கண்ணுற்றனர்; அவர்கள் காமவெறி உச்ச நிலையை அடைந்து, இந்திரியம் வெளிப்பட்டது. அவற்றில் ஒரு பகுதி தரையில் விழ, அதனின்றும் வசிட்டர் தோன்றினார். மற்றொரு பகுதி ஒரு சாடியொன்றில் விழ, அது அகத்தியரை உருவாக்கியது. இதனால் 'கும்பமுனி' என்ற பெயர் பெற்றனர் போலும்!

**வியாசர்:** பராசரரின் நெறியற்ற முறையில் பிறந்தவர்; அதனால் அவர் ''கனீனர்'' (வைப்பாட்டி மகன்) என வழங்கப் பெறுகின்றார். கருநிறமுடைய இவர் ஒரு தீவில் பிறந்தார்; ஆகவே இவர் ''கிருஷ்ண த்வைபாயனர்'' எனவும் வழங்கப் பெறுகின்றார். இவருடைய பல பெயர்களில் வியாசர் அல்லது வேதவியாசர் என்ற பெயரே யாவரும் அறிந்தவை. வேதங்களைத் தொகுத்துப் பாகுபடுத்தி வெளியிட்டதாகக் கருதப் பெறுவதே இதற்குக் காரணம் ஆகும். (வியாசர் என்பதற்கு 'தொகுப்பாளர்' என்பதே உண்மையான பொருள்). **மகாபாரதம், பிரம்மசூத்திரங்கள், பதினெட்டு பெரிய புராணங்கள்** ஆகியவற்றின் ஆசிரியரும் இவரே எனக் கருதப் பெறுகின்றார்.

**விஷ்ணு:** இந்துக் கடவுளர்களனைவரிலும் விஷ்ணுவே அதிக பக்தர்களைக் கொண்டுள்ளார். இந்து திரிமூர்த்திகளில் இவரே காக்குங் கடவுள்; தேவைப்படும் போதெல்லாம் தீமையைப் போக்கவும், நன்மையை நிலைநாட்டவும் இப்புவியில் இவர் 'அவதாரம்' செய்வதாக நம்பப் பெறுகின்றது. இவர் இதுகாறும் ஒன்பது முறை அவதாரம் செய்துள்ளதாகவும், பத்தாவது முறை 'கல்கி' என்ற அவதாரம் செய்வார் எனவும் புராணங்கள் பறை சாற்றுகின்றன.

**வீணை:** மிகப் பழங்காலமாகவே இந்தியாவில் பயன்படுத்தப்பெறும் நரம்பு இசைக் கருவி. இந்தியக் கலையில் நான்முகனின் துணை

வியும் கல்வியின் செல்வியுமான நாமகள் (சரசுவதி) வீணை யைத் தம் கையில் வைத்திருப்பதாகக் காட்டப் பெறுகின் றது. அங்ஙனமே இவர் மகன் நாரதரும் காட்டப் பெறு கின்றார்.

**வீரசைவம்:** பசவரால் தோற்றுவிக்கப் பெற்ற எதிர்ப்பார்வநிலையி லுள்ள சைவ சமயம். இதனைத் தழுவியவர்கள் சிவனையே முழு முதற் கடவுளாக வழிபடுகின்றனர்.

**வீரேசலிங்கம், கந்துக்கூரி** (கி.பி. 1848–1919): இக்கால இந்தி யாவின் சிறந்த புதல்வர்களில் ஒருவராகிய இவர் சமய, சமூக சீர்திருத்தவாதி. தெலுங்கு இலக்கியத்திற்கு இவர் செய்த சேவை பலதிறப்பட்டது; தெலுங்கில் முதல் புதி னம், முதல் நாடகம், முதல் எள்ளல் நூல், முதல் வாழ்க்கை வரலாற்று நூல், முதல் தன்–வரலாற்று நூல்கள், வேறு பல முதல் நூல்கள் எழுதிய பெருமை இவரைச் சாரும். ''இந்திய இலக்கியப் படைப்பாளர்கள்'' என்ற வரிசையில் சாகித்திய அகாடமி வீரேசலிங்கத்தைப்பற்றி ஒரு சிறிய நூலை வெளியிட்டுள்ளது.

**வேங்கட்ட ரத்தினம், சர் ரகுபதி:** (கி.பி. 1862–1939): பெரும் புகழ் பெற்ற கல்வித்துறை வல்லுநர், சமூக சீர்திருத்தவாதி, சமய ஆசிரியர். வீரேசலிங்கத்தின் காலத்தில் வாழ்ந்த இளைய தலைமுறையினர். தேவதாசிகள், தீண்டத் தகாத வர்கள், சமூகத்தில் தாழ்நிலை அடைந்துள்ள பிறர் இவர் களின் முன்னேற்றத்திற்காகச் சிறப்பாகப் பணியாற்றியவர். சென்னைப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தராகவும் திகழ்ந்து பணியாற்றியவர்.

**வேதங்கள்:** இந்து சமய சாத்திரங்களில் மிகப் பழைமையும் அதிகார முத்திரையும் பெற்றவை வேதங்கள். பக்தியுடைய வர்கள் இவை இறைவனால் தரப் பெற்றவை என நம்பு கின்றனர். **இருக்கு, சாமம், யஜுர், அதர்வம்** என நான்கு வேதங்கள் உள்ளன. **இருக்கு** வேதமே மிகப் பழைமை யுடையது.

**வைசியர்:** இந்துக்களின் சாதிப் பகுப்பில் மூன்றாவது சாதியினர். தெலுங்கில் ''கோமட்டி'' எனவும், இந்தியில் ''பணியர்'' என்றும் வழங்கப் பெறுபவர்கள். காந்தியடிகள் 'பணியர்' மரபில் வந்தவர்.

**ஜோன்ஸ், சர் வில்லியம்:** (கி.பி. 1745–94): மிகத் திறமை வாய்ந்த பிரிட்டிஷ் சட்ட வல்லுநர். கி.பி. **1783-ல் கல்கத்தா**

மேலுயர் நீதி மன்றத்தின் நீதிபதியாக நியமிக்கப் பெற்ற வர். அதற்கு அடுத்த ஆண்டிலேயே 'வங்காள ஆசியக் கழகத்தை' நிறுவுவதில் மிக முக்கிய பங்கினை மேற் கொண் டார். ஐரோப்பிய, ஆசியப் பல மொழிகளில் வல்லுநராகிய இவர், ஒப்பியல் இலக்கணம் என்ற அறிவியல் துறையைத் தொடங்கினார். இந்து சட்டம், முஸ்லீம் சட்டம் என்ற இரண்டு நூல்களைத் தவிர, காளிதாசரின் நாடகங்களில் ஒன்றையும் மொழி பெயர்த்தார். பல்வேறுபட்ட திறன்களை இயல்பாகவே பெற்ற இவ்வறிஞர், குறுகிய காலத்திற்குள் ளேயே மறைந்து விட்டார். இந்திய இலக்கியத் துறைக்கு இஃது ஓர் பேரிழப்பாகும்.

**ஸ்மித், வின்சென்ட் ஏ.** *(கி.பி. 1848—1920):* ஓர் இந்திய சிவில் அலுவலர்; கி.பி. 1871-ல் பணியில் சேர்ந்தார். கிட்டத்தட்ட அரை நூற்றாண்டுக் காலம் இந்திய வரலாறு-பண்பாட்டுத் துறையில் மிகக் கடினமாக உழைத்தார். முதன் முதலாக முயன்று எழுதிய இவரது பல நூல்களில் ஒன்று அசோகரது வாழ்க்கை வரலாற்றை மிக விரிவாகக் கூறுவது; மற் றொன்று **இந்தியாவின் தொடக்கக் கால வரலாறு** *(1904)*; மூன்றாவது **இந்தியாவிலும் இலங்கையிலும் கலை வரலாறு. இந்தியாவின்** (**ஆக்ஸ்போர்டு வரலாறு** என்ற நூல் 1918-ல் வெளியிடப் பெற்றது; இதுவே இவரது கடைசிப் பெரிய நூலாகும்.

**ஹிந்தி:** இந்தியாவில் மிக அதிகமான மக்களால் பேசப்படும் மொழி. இந்தியக் குடியரசின் ''ஆட்சி மொழியாக'' இம் மொழி இந்திய அரசியல் சட்டத்தில் அங்கீகரிக்கப் பெற் றுள்ளது.

**ஹேமச்சந்திரர்:** *(கி.பி. 1088—1172):* மிகவும் நன்கு கற்றறிந்த சமணப் பேரறிஞர். இவர் கவிஞராகவும் வரலாற்றறிஞ ராகவும், அணி இலக்கண ஆசிரியராகவும், வேறுபல துறை களில் சிறந்த எழுத்தாளராகவும் திகழ்ந்தார். சமஸ்கிருதத் திலும் பிராகிருதத்திலும் நன்கு எழுத வல்லவர்.

**க்ஷீரசாகரம்:** பாற்கடல். இந்துக்களின் கட்டுக்கதையின்படி, ஏழு கடல்கள் உள்ளன; உப்புநீர்க் கடல், தூயநீர்க் கடல், பாற் கடல், தயிர்க் கடல், கடைந்தெடுத்த வெண்ணெய்க் கடல், கருப்பஞ்சாற்றுக் கடல், மதுக் கடல் என்பவை அவை.

---